ஸ்ரீ:

ஆழ்வார் எம்பெருமானார் ஜீயர் திருவடிகளே சரணம்.

மயர்வற மதிநல மருளப்பெற்ற

தொண்டரடிப்பொடியாழ்வார் அருளிச்செய்த

# திருமாலை, திருப்பள்ளியெழுச்சி

திருப்பாணாழ்வார் அருளிச்செய்த

# அமலனாதிபிரான்

ஸ்ரீமதுரகவியாழ்வார் அருளிச்செய்த

# கண்ணிநுண்சிறுத்தாம்பு.

---

இவை,

பெருமாள்கோயில்

பிரதிவாதிபயங்கரம் அண்ணங்கராசார்யர்

இயற்றிய

## திவ்யார்த்த தீபிகை யென்னும்

உரையுடன்

M. R. கோவிந்தசாமி நாயுடுவால்,

மதராஸ் மாடல் அச்சுக்கூடத்தில்

அச்சிடுவிக்கப்பட்டன.

இரண்டாம் பதிப்பு

1928.



Released by Maaran's Dog , Toronto, Canada

## ஸ்ரீமான் உ. வே. (காஞ்சீபுரம்) பிரதிவாதி பயங்கரம் அண்ணங்கராசார்யர் ஸ்வாமிகள் அருளிச்செய்த க்ரந்தங்களும் அவற்றின் விலையும்.

---

| | | | |
|---|---|---|---|
| திருப்பல்லாண்டு, பெரியாழ்வார் திருமொழி—தெளிவுரை ... | 3 | 0 | 0 |
| திருப்பாவையின் விரிவுரை ... ... ... | 1 | 4 | 0 |
| ஷை திக் ராப்பர் பயிண்ட் ... ... ... | 1 | 0 | 0 |
| நாச்சியார் திருமொழியின் விரிவுரை ... ... ... | 2 | 0 | 0 |
| பெருமாள் திருமொழியின் விரிவுரை ... ... ... | 1 | 12 | 0 |
| திருச்சந்த விருத்தத்தின் விரிவுரை ... ... ... | 1 | 10 | 0 |
| திருமாலை, திருப்பள்ளியெழுச்சி, அமலனாதிபிரான், கண்ணிநுண் சிறுத்தாம்பு இவற்றின் விரிவுரை ... | 1 | 6 | 0 |
| முதலாயிரம் முழுமையும் 3 வால்யூம்களாக நல்ல பைண்ட் ... | 10 | 8 | 0 |
| இராமாநுச நூற்றந்தாதியின் விரிவுரை ... ... ... | 0 | 12 | 0 |
| சிறிய திருமடல்—விரிவுரை ... ... ... | 0 | 10 | 0 |
| பெரிய திருமடல்—விரிவுரை ... ... ... | 1 | 0 | 0 |
| திருவெழுகூற்றிருக்கை—விரிவுரை ... ... ... | 0 | 5 | 0 |
| திருவாசிரியம்—விரிவுரை ... ... ... | 0 | 5 | 0 |
| பெரிய திருவந்தாதி—விரிவுரை ... ... ... | 1 | 8 | 0 |
| ஸ்ரீவசநபூஷண ஸாரம் ... ... ... | 1 | 0 | 0 |
| கூரத்தாழ்வான் வைபவம் ... ... ... | 0 | 4 | 0 |
| ப்ரதிவாதி பயங்கரம் அண்ணா வைபவம் ... ... ... | 0 | 3 | 0 |
| முகுந்தமாலையின் தெளிவுரை ... ... ... | 0 | 6 | 0 |
| ஆளவந்தார் ஸ்தோத்ரத்தின் தெளிவுரை ... ... ... | 0 | 12 | 0 |
| ஸ்தோத்ரவ்யாக்யான சோதநம் ... ... ... | 0 | 3 | 0 |
| நமஸ்காரதத்துவம் ... ... ... | 0 | 2 | 0 |
| ப்ரணவாதிகாரதத்துவம் ... ... ... | 0 | 4 | 0 |
| ஸுதர்சந சதகம் தமிழுரை ... ... ... | 1 | 0 | 0 |
| ஸ்ரீவரதராஜ ஸ்தவத்தின்—விஸ்தாரமான மணிப்ரவாள வியாக்கியானம் (தெலுங்கு லிபி) ... | 1 | 8 | 0 |
| ஸ்ரீஸ்தவத்தின் ஷை ஷை ... | 0 | 6 | 0 |
| அதிமாநுஷ ஸ்தவத்தின் ஷை ஷை ... | 0 | 12 | 0 |
| திருப்பல்லாண்டு விரிவுரை ஷை ... | 0 | 4 | 0 |
| ஆசார்ய ஹ்ருதய மூலம் ஷை ... | 0 | 3 | 0 |
| ரஹஸ்யமூலம் ஷை ... | 0 | 6 | 0 |
| உபந்யாஸரத்நமாலா (க்ரந்தலிபி) ஸம்ஸ்க்ருதபாஷையில் சிறந்த 5 உபந்யாஸங்கள் ... | 0 | 6 | 0 |
| சேஷாவதாரச் சிறப்பு ... ... ... | 0 | 2 | 0 |

(இன்னும் பல புத்தகங்களும் உள்ளன.)

பேரருளாளன் பெருந்தேவித்தாயார் திருவடிகளே சரணம்.







ஆழ்வார் எம்பெருமானார் ஜீயர் திருவடிகளே சரணம்.

# பொதுத்தனியன்கள்.

(நம்பெருமாள் அருளிச்செய்தது.)

ஸ்ரீசைலேச தயாபாத்ரம் தீபக்த்யாதிகுணார்ணவம் ।
யதீந்த்ரப்ரவணம் வந்தே ரம்யஜாமாதரம் முநிம் ॥

(ஆழ்வான் அருளிச்செய்தவை.)

லக்ஷ்மீநாதஸமாரம்பாம் நாதயாமுநமத்யமாம் ।
அஸ்மதாசார்யபர்யந்தாம் வந்தே குருபரம்பராம் ॥
யோ நித்யமச்யுதபதாம்புஜயுக்மருக்ம
வ்யாமோஹதஸ்ததிதராணி த்ருணாய மேநே ।
அஸ்மத்குரோர்பகவதோऽஸ்ய தயைகஸிந்தோ:
ராமாநுஜஸ்ய சரணௌ சரணம் ப்ரபத்யே ॥

(ஆளவந்தார் அருளிச்செய்தது.)

மாதா பிதா யுவதயஸ்தநயா விபூதி:
ஸர்வம் யதேவ நியமேந மதந்வயாநாம் ।
ஆத்யஸ்ய ந: குலபதேர்வகுளாபிராமம்
ஸ்ரீமத்ததங்க்ரியுகளம் ப்ரணமாமி மூர்த்நா ॥

(ஸ்ரீபராசரபட்டர் அருளிச்செய்தது.)

பூதம் ஸரஶ்ச மஹதாஹ்வயபட்டநாத
ஸ்ரீபக்திஸார குலசேகர யோகிவாஹாந் ।
பக்தாங்க்ரிரேணு பரகால யதீந்த்ரமிச்ராந்
ஸ்ரீமத்பராங்குசமுநிம் ப்ரணதோऽஸ்மி நித்யம் ॥



ஸ்ரீ:

# திருமாலை.

தொண்டரடிப்பொடியாழ்வார் அருளிச்செய்த திவ்யப்ரபந்தங்கள் இரண்டி னுள் முதலாவது இது; (மற்றொன்று-திருப்பள்ளியெழுச்சி.) "திருமாலையறி யாதவன் பெருமாளையறியான்" எனவழங்கும் பழமொழியினால் இத்திவ்யப்ர பந்தத்தின் சிறப்பு அறியத்தக்கது. இப்பிரபந்தம் நாலாயிரத்திவ்யப் பிரபந்தத் தில் முதலாயிரத்தைச் சேர்ந்தது.

ஒருவிஷயத்தைக்குறித்துப் பலசெய்யுள் கூறுவது மாலை எனப்படும். தமிழில் பலவகைப் பிரபந்தங்களுள் 'மாலை' என்பது ஒன்று. திரு என்னுஞ் சொல் சிறப்புப்பொருளைக்காட்டி மாலைக்கு அடைமொழியாய் நின்றது. இப் பிரபந்தம் ஸ்ரீரங்கநாதனைப்பற்றிப் பாடுவதாதலால் 'திருமாலை' எனச்சிறப்பித் துக் கூறப்பட்டது. இப்பாமாலை ஸ்ரீரங்கநாதன் திருவடிகளில் சாத்தும் பூமாலை போலுதலாலும் இந்நூல் திருமாலை எனத்திருநாமம் பெற்றது. பிரபந்தத்திற் குப் பெயரிடும் வகையைக் கூறுமிடத்து, "முதனூல் கருத்தன் அளவு மிகுதி, பொருள் செய்வித்தோன் தன்மை முதல் நிமித்தினும், இடுகுறியானும் நூற்கு எய்தும் பெயரே" (நன்னூல் - பொதுப்பாயிரம்.) என்று கூறப்பட்டிருத்தலால், நுதலிய பொருளினாலும் தன்மையினாலும் பேர்பெற்றது இந்நூல் என்க. (நுதலிய பொருள் — நூலிற்கூறப்பட்டவிஷயம். தன்மை — இயல்பு.)

இத்திவ்யப்ரபந்தம்-வடமொழியில் ஸ்ரீவிஷ்ணுதர்மம் என்னும் நூலின் ஸாரம் என்பது ஆசார்யர்களின் கொள்கை. இத்திவ்யப்ரபந்தத்திற்குப் பெரிய வாச்சான்பிள்ளை மணிப்ரவாள நடையில் மிகவும் கம்பீரமான நடையில் அருளிச் செய்த வியாக்யான மொன்றேயுளது. பெரும்பாலும் அதனைத்தழுவியும், சிறுபான்மை இன்றியமையாத சில இலக்கணக்குறிப்புகளையும் விசேஷார்த்தங் களையும் எனது சிற்றறிவினால் விளக்கி "திவ்யார்த்த தீபிகை" என்னும் பெயர் பூண்ட இவ்வுரை அடியேனால் எழுதப்படுகின்றது. இதிலுள்ள குற்றங்களைப் பெரியோர் கண்ணுறாது, குணலேசத்தையே நோக்கி உகந்தருள்வாராக.



ஸ்ரீ:



இந்நூலாசிரியராகிய

# தொண்டரடிப்பொடியாழ்வார் வைபவம்.

இவ்வாழ்வார், சோழநாட்டில் திருமங்கையாழ்வாருடைய மங்களாசாஸநம் பெற்ற 'புள்ளம் பூதங்குடி' என்னும் திவ்யதேசத்தின் அருகிலுள்ள திருமண்டங்குடி என்னும் திருப்பதியிலே கலியுகத்தில், இருநூற்றெண்பத் தொண்பதாவதான ப்ரபவஸம்வத்ஸரத்தில் மார்கழி மாதத்தில் க்ருஷ்ணபக்ஷசதுர்த்தசி கூடின செவ்வாய்க்கிழமையில் கேட்டை நக்ஷத்திரத்தில், வைஜயந்தி என்னும் வநமாலையின் அம்சமாய் வைதிகோத்தமரான ஒரு முன்குடுமி ப்ராஹ்மணருடைய திருக்குமாரராய்த் திருவவதரித்தார். ஸ்ரீமந்நாராயணனுடைய கடாக்ஷத்தால் அவதரித்த அவ்வந்தணகுமாரர்க்குத் தந்தையார் விப்ரநாராயணர் என்று நாமகரணஞ்செய்து சௌளம் உபநயநம் முதலிய வைதிக ஸம்ஸ்காரங்களை உரியகாலங்களில் முறைப்படி செய்வித்து வேதசாஸ்த்ரங்களைப் பயிற்றுவிக்க, அவர் நான்மறைகளையும் ஆறுசாஸ்திரங்களையும் கசடறக்கற்று வல்லராய் அக்கல்விக்கு ஏற்பச் சுத்த ஸத்வகுணமே தலையெடுத்து ஞானவைராக்யங்கள் வளரப்பெற்றுத் தந்தைதாயர்க்கு மிக்க மகிழ்ச்சிதந்து வாழ்ந்துவந்தார். அப்படியிருக்கையில் ஸ்ரீஸேனைமுதலியார் ஸ்ரீவைகுண்டத்தினின்றும் எழுந்தருளி அவர்க்கு ஸ்ரீவைஷ்ணவர்கட்கு உரிய ஸமாச்ரயணம் முதலிய சடங்குகளைச் செய்து சென்றனர்.

அப்போது திருமந்திரார்த்தத்தை அறிந்த விப்ரநாராயணர் கருணைக்கடலான கமலை கேழ்வனது குணாம்ருதத்திலே ஆழ்ந்த சிந்தையுடையராய் அதனால் இம்மையின்பத்தை இகழ்ந்து விவாஹத்தில் விருப்பமற்று ப்ரஹ்மசர்ய ஆச்ரமத்திலேயே நின்று திவ்யதேசங்களிற் சென்று எம்பெருமானை மங்களாசாஸநஞ் செய்யக்கருதி அவற்றில் முதலதான திருவரங்கம் பெரியகோயிலை அடைந்தார். அங்கு உபயகாவேரிமத்தியிலே சேஷசயநத்திலே "குடதிசை முடியைவைத்

துக் குணதிசைபாதம் நீட்டி வடதிசை பின்புகாட்டித் தென்திசை யிலங்கை நோக்கி"ப் பள்ளிகொண்டுள்ள பெருமானைச் சேவித்துநிற்க, அப்பொழுது அந்த நம்பெருமாள் தம்முடைய வடிவழகினால் இவரைத் தம்பக்கல் மிகுந்த பக்தியுடையராம்படி செய்தருளினர்.

உடனே இவர் தமது வாணாள் வீணாகாதபடி அப்பெருமானுக்குக் கைங்கரியம் செய்யவிரும்பி, பெரியாழ்வார்போலவே தாமும் பெருமானுக்குப் புஷ்பம் திருத்துழாய் ஸமர்ப்பிப்பதையே ஏற்ற கைங்கர்யமாகக் கடைப்பிடித்து, ஒரு திருநந்தவனத்தை அப்பதியிலே செழிப்பாக அமைத்து, காலந்தோறும் பலவகைப் பூமாலைகளையும் திருத்துழாய் நன்மாலையையும் கட்டிஎடுத்துக் கொண்டு தமது நிலைக்கு ஏற்ப ப்ராஹ்மணர் திருமாளிகைகளில் அந்நபிக்ஷை வாங்கி அமுதுசெய்து வந்தார்.

இவ்வனமிருக்கையில் திருவரங்கத்துக்கு வடக்கிலுள்ள உத்தமர் கோயிலில் தேவமாதரம்சமாய்ப் பிறந்து மிகவும் அழகியான 'தேவதேவி' என்பாளொரு தாஸி, ஒருநாள் தோழிமாரோடும் தமக்கையோடும் உறையூருக்குச் சென்று, சோழராஜனது முன்னிலையில் ஆடல்பாடல்களை நிகரற நிகழ்த்தி அவனை மோஹிப்பித்து அளவிறந்த செல்வத்தை அவனிடத்திற்பெற்று மிக்க கர்வத்தோடு மீண்டு வருகையில் இளைப்பாறுதற்பொருட்டு இவ்வாழ்வாருடைய பூம்பொழிலின் ஒருபுறத்திலே ஒரு மரத்தினடியில் இருந்து அச்சோலையின் சிறப்பை நாற்புறத்திலும் நன்றாக உற்று நோக்கி, அம்மலர்ச்சோலையைத் தனக்கு உரிய பொருளாக்கி அதில் பூக்கொய்தும் புனல் விளையாடியும் பொழுதுபோக்கி மனமகிழ விரும்பி, அதற்கு உரியவனைக்கண்டு தன்வசப்படுத்த நினைத்து அங்கு உலாவிநின்றாள். நிற்கையில், ஒருபக்கத்தில் விப்ரநாராயணர் பளபளவென்ற திருப்பரிவட்டத்துடனும் பன்னிரண்டு திருமண்காப்புகளுடனும் தாமரைமணி மாலை துளசிமணிமாலைகளுடனும் விளங்கி, பூஞ்செடிகளுக்குப் பாத்திகட்டுதலும் தண்ணீர் பாய்ச்சுதலும் செய்துகொண்டிருக்கக் கண்ணுற்றாள்.

உடனே அவள், அருகில்வந்து முன்னின்று அவரைத்தொழுது தனது தேஹ ஸௌந்தர்யத்தை அவர்க்குக்காட்டிச் சிலகுறிப்புச்செய்யவும் விஷயாந்தரங்களிற் குருடராகிய அவர் அவளைக்கண்ணெடுத்தும் பாராது திரஸ்கரித்துத் தமது கைங்கரியத்திற் கருத்தூன்றியிருந்தனர். அதுநோக்கித் தேவதேவி ஆச்சர்யமுற்று, தன் தமக்கையுடன் 'அரசர் முதலிய பலரையும் எளிதில் வசப்படுத்துகிற ரூபலாவண்யங்களிற் சிறந்த யான் சென்று எதிர்நிற்கவும் பாராதிருக்கின்ற இவன் பித்தனோ? பேடனோ? என்றுகூற, அதற்கு அவள் 'பித்தனுமல்லன், பேடனுமல்லன்; ஸ்வாமி கைங்கரியத்தில் ஊற்றமுற்ற மஹாவிரக்தன்; இவனை வசப்படுத்த உன்னாலாகாது' என்று சொன்னவளவிலே, வடிவழகில் இறுமாப்புடைய தேவதேவி 'இவனை நான் வசீகரியாமல் விடுவதில்லை' என்று உறுதிகூறுதலும், தமக்கை 'நீ அங்ஙனஞ் செய்தால் நான் உனக்கு ஆறுமாத காலம் அடியவளாவேன்' என்று சபதஞ்செய்ய, தங்கை 'நான் அங்ஙனஞ் செய்யேனாயின் ஆறுமாதம் உனக்குத் தொழுத்தையாவேன்' என்றுபிரதிஜ்ஞை பண்ணினாள்.

பிறகு அவள், தன் ஆபரணங்களைக் கழற்றிக் கொடுத்துத் தோழியரோடு தமக்கையையும் அனுப்பிவிட்டுத் தனியே மெல்லியதொரு செங்காவிச் சேலையை உடுத்து அவரை அடுத்துத் திருவடிகளில் விழுந்து நமஸ்கரிக்க, அவர் 'நீயார்? ஏன் இங்கு வந்தாய்?' என்றுகேட்க அதற்கு அவள் 'அடியேன் முற்பிறப்பில் செய்த தீவினையால் தாஸியாகப் பிறந்தவள்; அடியேனைத் தாய் அக்குலத்திற்கு உரிய தொழிலைக் கைக்கொள்ளும்படி நிர்ப்பந்திக்க, அதற்கு இசையாமல் அவளைத்துறந்து மஹாபாகவதரான தேவரீரது திருவடியைச் சரணமடைந்து உய்வுபெறநாடி வந்துற்றேன்; கருணைக்கடலான தேவரீர் அநாதையான அடியேனைக் காத்தருளவேணும்; செடிகளுக்கு நீர்பெய்தல், பூப்பறித்தல், மாலைகட்டுதல், தேவரீர் இல்லாத சமயங்களில் சோலையைப் பாதுகாத்தல் முதலிய பணிவிடைகளில் எதை நியமித்தாலும் செய்துவரக் காத்திருக்கிறேன்' என்று மிக்க வணக்கத்தோடு விண்ணப்பஞ்செய்தாள். அவர் அவளது கபடசித்தத்தை உணராமல் உடன்பட்டு, தாம் அமுதுசெய்து மிகுந்த ப்ரஸாதத்தைக் கொடுத்துவர, அவளும் அதனை வாங்கி உட்கொண்டு பாத்திகொத்துதல் நீர்பரிமாறுதல் முதலிய குற்றேவல்களைத் தவறாது மிக்க ஊக்கத்துடனே எப்பொழுதும் செய்து கொண்டு சோலையைச் செழுமையாக வளர்த்து அவர்க்குத் தன்னிடத்து நம்பிக்கை யுண்டாகும்படி நல்லவள்போல நடித்துவந்தாள்.

இப்படி பல மாதங்கள் கழிந்தபின் ஒருநாள் பெருமழை பொழிகின்ற பொழுது பர்ணசாலையிற் பிரவேசித்திருந்த அவ்வந்தணர், வெளியிலே அவள் நனைந்து வருந்துதலைப் பார்த்து இயற்கையான ஜீவகாருண்யத்தினால் உள்ளே வந்து நிற்கும்படி நியமிக்க, அதுவே வியாஜமாக அவள் அருகில்வந்து தனது மென்மொழிகளாலும் மேனிமினுக்கினாலும் மனதைக் கவர்ந்து அவரைத் தன் வசமாக்கிச் சிலகாலம் அவருடனே யிருந்து, பின்பு பொருளில்லாத அவரைப் பொருள்செய்யாது கைவிட்டுத் தன் வீட்டிற்குச்சென்று சேர்ந்தவளாகிலே, இவர் அவள் பிரிவை ஆற்றாமல் அவளது வீட்டுவாயிலில்சென்று தியங்கிநின்றார். அவ்வளவிலே, பிராட்டி பெருமாளை நோக்கி 'நமக்குப் பலகாலமாகப் பணிசெய்து வந்த விப்ரநாராயணன் அதனை முழுவதும் ஒழித்து ஒரு கணிகைக்குத் தொண்டுபூண்டு அவள் புறக்கணிக்கவும் மனந்திரும்பாது அவளில்லத்துப் புறக்கடை பற்றி ஏங்கி நிற்குமாறு தேவரீர் மாயைக்கு இலக்காகலாமோ? இதுவும் ஒரு திருவிளையாட்டு இருந்தபடி என்? இனி அவனை விரைவில் மீட்டு முன்போல ஆட்கொண்டு அந்தரங்க பக்தனாக்கியருளவேணும்' என்று பிரார்த்திக்க, திருமாலும் திருமகள் வார்த்தைக்கு இசைந்து தமது திருக்கோயிற் பாத்திரங்களுள் ஒரு ஸ்வர்ணபாத்திரத்தை எடுத்துக்கொண்டு மனிதவடிவம் பூண்டு விப்ரநாராயணர்க்குத் தெரியாமல் அந்த வேசியின் மனைக்கு எழுந்தருளி வாசற்கதவு திறக்கச்சொல்ல, அவள் உள்ளிருந்தபடியே 'யார் நீ? எங்கு வந்தாய்?' என்று கேட்க நம்பெருமாள் 'நான் அழகியமணவாளதாஸன், விப்ரநாராயணரனுப்ப வந்தேன்' என்று விளம்பியவளவில், தேவதேவி விரைந்துவந்து கதவைத்திறந்து 'வந்தகாரியம் என்ன?' என்று கேட்க, ஸ்ரீரங்கநாதன் தான் கொணர்ந்த பொற்கலத்தை அவள் கையிற்கொடுத்து 'இதனை விப்ரநாராயணர் உனக்கு வரவிடுத்தார்' என்று சொன்னவுடனே, அவள் அதிக ஆதரத்தோடு 'அவரை

உள்ளே வரச்சொல்லும்' என்று அநுமதி செய்தபின், அடியவர்க்கு எளியவனான எம்பெருமான் விப்ரநாராயணரிடம் வந்து 'தேவதேவி உம்மை உள்ளே வரச்சொன்னாள்' என்று சொல்லிச்சென்றார். அச்செவிக்கினிய செஞ்சொல்லைக் கேட்ட மாத்திரத்தில் அவர் பிரிந்தவுயிரைப் பெற்றாற்போல உள்ளங்குளிர்ந்து உடல்பூரித்து உள்ளேபோய்ச்சேர்ந்தார்.

அவ்விரவு கழிந்து பொழுதுவிடிந்தவாறே ஸ்வாமி ஸந்நிதியில் திருக்காப்பு நீக்கியவளவில், பாத்திரங்களுள் சிறந்ததொரு பொன்வட்டிலைக் காணாமல் கோயில் பரிகரத்தார் இராஜாங்கத்தார்க்கு அறிவிக்க, அவர்கள் உடனேவந்து களவு கண்டு பிடித்தற்பொருட்டு அர்ச்சகர் பரிசாரகர் முதலிய அந்தரங்க பரிஜநங்களைப் பிடித்துப் பலவாறு தண்டித்து வருத்தியும் ஒருவர்மீதும் குற்றங் காணப்படாமையால் ஆங்காங்கும் புலம் விசாரித்து வருகையில் தேவதேவியின் மாளிகையிலிருக்கின்றதென அவள்வீட்டு வேலைக்காரியொருத்தியால் அறிந்து, அங்குச்சென்று அதனைக்கண்டு அவ்வீட்டிலுள்ளார் யாவரையும் குற்றவாளிகளாக்கி அரசன் முன்னிலையிற் கொண்டுபோய் நிறுத்தினார்கள். அப்போது அரசன் தாஸியை நோக்கிப் 'பெருமாள் பாத்திரத்தை நீ கவரலாமோ?' என்று கேட்க, அவள் 'யான் இன்னாரென்று அறியேன்; அழகியமணவாள தாஸனென்பானொரு தூதன் மூலமாக விப்ரநாராயணன் எனக்கு இதனை வரவிட்டான்; இவ்வளவே யான் அறிவது' என்று உத்தரம் கூறினாள். அதன்மேல் இராசன் விப்ரரை விசாரிக்க, அவரும் 'யான் ஒன்றும் அறியேன்; ஏழையான எனக்கு ஓர் ஏவலாளனும் இல்லை' என்றுசொல்ல, இங்ஙனம் இருதலை வாய்மொழியையுங் கேட்டபின் அரசன் ஆலோசித்து, களவாடிய பொருளை வாங்கியவர் செலுத்தவேண்டிய அபராதப்பொருளைக் கட்டும்படி வேசிக்கு விதித்து, அக்காணிக்கையையும் தங்கவட்டிலையும் பெருமாளுக்கு ஸமர்ப்பித்து, பொற்கள்வர்க்கு உரிய தண்டனையை ஆராய்ந்து விதிப்பதற்காக விப்ரநாராயணரைச் சிறையிலிட்டான்.

மீண்டும் ஒருகால் ஸ்ரீரங்கநாயகி 'இவ்வடியவனைத் தேவரீர் லீலைக்கு விஷயமாக்காமல் கிருபைக்குப் பாத்திரமாக்கியருளவேண்டும்' என்று வேண்ட, பெருமாள் அதனை அங்கீகரித்து, அரசன் கனவிலே தாம் எழுந்தருளி 'தாஸியிடத்துக் காதல்கொண்ட இவ்வந்தணனுடைய கருமத்தைக் கழித்தற்பொருட்டு நாமே பொன்வட்டிலைக் கொண்டுபோய்த் தந்து இவனைத் தண்டிப்பித்தோம்: உண்மையில் இவன் கள்ளனல்லன்; பரிசுத்தனே' என்று தெரிவிக்க, அரசன் துயிலுணர்ந்தவுடனே கனாத்தோற்றத்தை மந்திரி முதலியோர்க்கு வியப்புடனே வெளியிட்டு விப்ரரை விடுவித்து உபசரித்து அனுப்பிவிட்டான்.

பிறவிப் பெருஞ்சிறையினின்றும் விடுபடுதற்கு ஒரு முற்குறியாகக் காவல் விடுபெற்ற பிராமணர் தம் துளவத்தொண்டு துறந்து வைதிக வொழுக்கமும் மறந்து பொருட்பெண்டிர் பொய்ம்மைமயக்கத்தில் ஆழ்ந்து இடங்கழியாளனாய் அலைந்து பரிபவப்பட்டதை நினைத்து நினைத்து மிகவும் பச்சாத்தாபப்

பட்டுப் பிராயச்சித்தஞ் செய்துகொள்ளமுயன்று பெரியோர்களைச்சார்ந்து தமது தோஷங்களை யெல்லாம் விடாது எடுத்து வாயாற்சொல்லி 'இவற்றிற்குப் பிராயச்சித்தம் இன்னதென்று துணிந்து கூறியருளவேணும்' என்று பிரார்த்திக்க, அவர்கள் பல நூல்களை ஆராய்ந்து 'ஸகல பாபங்களும் பரிஹாரமாவதற்கு ஏற்ற ப்ராயச்சித்தம் பாகவதர்களுடைய ஸ்ரீபாததீர்த்தத்தை உட்கொள்வதே' என்று உய்யுமாறுகூற, அங்ஙனமே அவர் அதனைப்பெற்றுப் பருகிப் பரிசுத்தராயினர்.

பின்பு அவர் முன்போலவே பகவத் பாகவதபக்தி தலையெடுத்து "ஆடிப் பாடி யரங்கவோ! என்றழைக்கும் தொண்டரடிப்பொடியாட நாம் பெறில், கங்கைநீர் குடைந்தாடும் வேட்கை என்னாவதே!" (பெருமாள் திருமொழி) என்று பலவாறாக அருளிச் செய்யப்பட்ட நூற்பொருளிலே நுழைந்த நெஞ்சமுடையராய் ஸ்ரீவைஷ்ணவர்களுடைய ஸ்ரீபாததூளியாய் அவர்கட்குக் கீழ்ப்படிந்து அடிமைபூண்டு ஒழுகி, அதனால் தமக்கு அதுவே நிரூபகமாகத் 'தொண்டரடிப்பொடி' என்று திருநாமம் பெற்றனர்.

அப்பால் தொண்டரடிப்பொடியாழ்வாருக்கு ஸ்ரீரங்கநாதன் தத்வஜ்ஞானமளித்துத் தனது பரம் வ்யூஹம் விபவம் அந்தர்யாமித்வம் அர்ச்சை என்ற ஐவகை நிலையையுந் தெளிவாக விளக்கியருள, அவர் அவற்றில் அர்ச்சாவதாரத்தில் மிக்க ஈடுபாடுகொண்டு, அதிலும் எம்பெருமான் உகந்தருளின நிலங்கள் எல்லாவற்றிலுள்ளும் திருவரங்கத்து நம்பெருமானையல்லது பிறிதொருபொருளை அறியாராய் அப்பிரானுக்கே தாம் உள்ளளவும் ஆளவத்தொண்டுபூண்டு வாழ்ந்து தமது அநுபவத்தைப் பிரபந்த மூலமாகப் பிறர்க்குத் தெரிவிக்கக் கருதி, திருமாலை, திருப்பள்ளியெழுச்சி என்ற திவ்யப்ரபந்தங்களை அருளிச்செய்து உலகத்தாரை வாழ்வித்து நூற்றைந்து பிராயம் ஸ்ரீரங்கத்திலேயே வாழ்ந்திருந்து அநந்தரம் நலமந்தமில்லதோர் நாட்டை அடைந்தார்.

தன்பால் அன்பால்நிறைந்த விப்ரநாராயணர் ராஜதண்டனையில் நின்று மீண்டு தொண்டரடிப்பொடியாரான செய்தியை அறிந்த தேவதேவி, தானும் உய்வுபெற உன்னித் தனது பொருளனைத்தையும் அரங்கனுக்கே உரியதாக்கி விட்டுப் பரம ஸாத்விகையாய், கோயிலிலே திருவலகிடுதல் மெழுகுதல் கோலமிடுதல் முதலிய அடிமைத்தொழில்களைச் சிலகாலஞ் செய்துகொண்டிருந்து, ஊழ்வினையொழித்து, தனது ஜன்மத்தை ஸபலமாக்கி முடிவில் நற்கதிநண்ணினள்.

தொண்டரடிப்பொடியாழ்வார் வைபவம் முற்றிற்று.

ஆழ்வார் திருவடிகளே சரணம்.

---

"மன்னியசீர் மார்கழியிற் கேட்டையின்று மாநிலத்தீர்
என்னிதனுக் கேற்ற மெனிலுரைக்கேன்—துன்னுபுகழ்
மாமறையோன் தொண்ட ரடிப்பொடியாழ் வார்பிறப்பால்
நான்மறையோர் கொண்டாடும் நாள்."

[உபதேசரத்தினமாலை

ஜீயர் திருவடிகளே சரணம்.

ஸ்ரீ:

தொண்டரடிப்பொடியாழ்வார் அருளிச்செய்த திருமாலையின்

# தனியன்.

(திருவரங்கப்பெருமாளரையர் அருளிச்செய்தது.)

(இருவிகற்பநேரிசை வெண்பா.)

மற்றொன்றும் வேண்டா மனமே! மதிளரங்கர்
கற்றினம் மேய்த்த கழலிணைக்கீழ்—உற்ற
திருமாலை பாடுஞ்சீர்த் தொண்டரடிப் பொடியெம்
பெருமானை யெப்போழுதும் பேசு.

பதவுரை.

| | | | |
|---|---|---|---|
| மனமே | நெஞ்சே! | உற்ற | ஸம்பந்தம் பெற்றிருக்கிற |
| மற்று ஒன்றும் | வேறொன்றும் | திருமாலை | ‘திருமாலை’ என்னும் திவ்யப்ரபந்தத்தை |
| வேண்டா | (உனக்கு விரும்ப) வேண்டியதில்லை; | பாடும் | பாடியருளின |
| மதிள் அரங்கர் | ஸப்த ப்ராகாரங்களோடு கூடிய ஸ்ரீரங்கத்துக்குத் தலைவரான நம்பெருமாளுடைய | சீர் | கல்யாணகுணங்களையுடைய |
| கன்று இனம் மேய்த்த | (கிருஷ்ணாவதாரத்தில்) கன்றுகளின் கூட்டங்களை மேய்த்தருளிய, | தொண்டரடிப்பொடி எம்பெருமானை | தொண்டரடிப்பொடியாழ்வாரை |
| கழல் இணை கீழ் | இரண்டு திருவடிகளின் கீழே | எப்பொழுதும் | ஸர்வகாலமும் |
| | | பேசு | அநுஸந்திக்கக்கடவாய். |

நெஞ்சே! நீ உஜ்ஜீவிப்பதற்காக எம்பெருமானையாவது மற்றொரு புருஷார்த்தத்தையாவது பற்றவேண்டா; பாகவதர்கட்கு அடிமையையே நிரூபகமாகக் கொண்ட தொண்டரடிப்பொடியாழ்வாரது திருநாமத்தையே எப்போதும் அநுஸந்தித்திருப்பாயாகில் உனக்கொரு குறையுமில்லை. இவ்வாழ்வார் நம்பெருமான் திருமுடிக்குமாத்திரம் மாலை சூடினவரல்லர், திருவடிகட்கும் திருமாலை ஸமர்ப்பித்தவர்; அவர் திருவடிகளே உனக்குத் தஞ்சமென்றபடி.

மதிளரங்கர் என்றதனால் ஏழு திருமதில்களுக்குள்ளே எழுந்தருளியிருப்பவரென்றால் அவர் நமக்குப் பெறுதற்கு அரியவரோ என்று சங்கைபிறக்க, கற்றினம் மேய்த்த இத்யாதியால் ஸௌலப்ய ஸௌசீல்யங்களைக் கூறுகிறபடி.

கன்று + இனம், கற்றினம்:

மூன்றாமடியில் வெண்டளை தவறுகின்றது; “திருமாலை பாடுஞ்சீர்த் தொண்டர்பொடியெம்” என்றாவது, “தொண்டரடித் தூளெம்” என்றாவது பாடமிருந்திருக்கும்; காலகதியில் மாறுபட ஓதப்பட்டு வருகின்றது என்பர்.

ப்ரதமபர்வமெனப்படும் பகவத்விஷயத்தைப் பற்றினவர்களுக்கு அந்த பகவானே எம்பெருமானாயிருப்பதுபோல, சரமபர்வமெனப்படும் பாகவத விஷயத்தைப் பற்றினார்க்கு இவ்வாழ்வார்தாமே எம்பெருமானார் என்பது தோன்ற தொண்டரடிப்பொடியெம்பெருமான் எனப்பட்டதென்க.

தனியன் உரை முற்றிற்று.



ஸ்ரீ:

ஆழ்வார் திருவடிகளே சரணம்.

# திருமாலை உரையின் அவதாரிகை.

நித்யஸூரிகளைப்போலே ஸம்ஸாரிகளும் எம்பெருமானை அநுபவித்து ஆநந்தமடையக் கடவராயிருந்துவைத்தும் அதில் நசையின்றி இந்நிலத்திலேயே மீண்டுமீண்டும் இறப்பது பிறப்பதாய்ப் படும்பாடுகளைக் கண்ணுற்ற திருமகள் கொழுநனான எம்பெருமான் இவர்களை உய்வித்தற்பொருட்டுத் தான் பலபல சாஸ்திரங்களைக் காட்டிக் கொடுத்தருளினன். அந்நூல்களில் உஜ்ஜீவநோபாயங்கள் பல்லாயிரமெடுத்துக் கூறப்பட்டுள்ளன. ஆனால் அவையெல்லாம் அநுஷ்டிப்பதற்கு மிகவும் அரியனவாதலால், "ஹரேர் நாமைவ நாமைவ நாமைவ மம பேஷஜம் | கலௌ நாஸ்த்யேவ நாஸ்த்யேவ நாஸ்த்யேவ கதிரந்யதா ||—ஹரேர் நாமைவ நாமைவ நாமைவ மம பேஷஜம்—கலௌ நாஸ்த்யேவ நாஸ்த்யேவ நாஸ்த்யேவ கதிரந்யதா." என்றிவை போல்வன பலபிரமாணங்களின்படி எம்பெருமானுடைய திருநாமத்தை ஸங்கீர்த்தநம் பண்ணுவதற்கு மேற்பட்ட வழி கிடையாதென்று இறுதியாக அறுதியிடப்பட்டமையால், ஒப்புயர்வற்ற சிறப்புப்பெற்ற அத்திருநாம ஸங்கீர்த்தநத்தாலே பேறுபெற்ற இவ்வாழ்வார் அத்திருநாமத்தின் வைபவத்தைப் பேசுகிறார்—இத்திருமாலையால்.

பாண்டவர்களுக்கு இப்பால் நாலைந்து தலைமுறை சென்றவளவிலே, சதாநீகன் என்பானொரு ராஜா இருந்தான்; அவன் நற்குலத்திற் பிறந்தவனாகையால் பரமஸாத்விகனாய் அறநெறி தவறாது அரசாண்டுவருகையில் ஒருகால் ஸ்ரீசௌநக பகவான் பக்கலிலே சென்று 'உடலுக்கே இரைந்துழைந்து திரிகிற ஸம்ஸாரிகளுக்கு உஜ்ஜீவநத்திற்கு உறுப்பாயிருப்பதொன்றை அருளிச்செய்ய வேணும்" என வேண்ட; சௌநகபகவான், "காலமோ கலியாயிருக்கிறது; தீவினை ப்ரக்ருதியாலே வேறொன்றுக்கும் அதிகாரிகளில்லை; ஸர்வாதிகாரமான பகவந்நாம ஸங்கீர்த்தநமே ஆத்மாக்களுக்கு உஜ்ஜீவநோபாயமாயிருப்பது" என்றருளிச்செய்தமையை வெளியிடுகிற ஸ்ரீவிஷ்ணுதர்மம் இத்திருமாலைக்கு அடியாயிருக்கும்.

ஆழ்வார்களில் முதலாழ்வார்கள், மேன்மைக்கு எல்லையான பரத்வத்திலும் நீர்மைக்கு எல்லையான திருவேங்கடமலையிலும் ஆழ்ங்காற்பட்டனர்; நம்மாழ்வாரும் பெரியாழ்வாரும் க்ருஷ்ணாவதாரத்திலே ஊன்றினர். திருமழிசைப்பிரான் அந்தர்யாமித்வத்திலும் சில திருப்பதிகளிலும் மண்டினர்; குலசேகரப்பெருமாள் ராமாவதாரத்திலே ஆழ்ந்தனர்; திருப்பாணாழ்வார் திருவேங்கடத்திலும் திருவரங்கத்திலும் உகந்தனர்; திருமங்கையாழ்வார், உகந்தருளின நிலங்களெல்லாவற்றிலும் மண்டினார்; பெரியபெருமாளையன்றி வேறொருவனை அறியாதவராய்த்து-இவ்வாழ்வார்.

இத்திருமாலையும் மிக்க சுருக்கமும் மிக்க பெருக்கமுமின்றி நாற்பத்தைந்து பாட்டாய், சொல்தெளிவாலே பரம்பொருளை நன்கு விளக்கக்கூடியதாயிருத்தலால் மிக்க சிறப்புறும் ... ... ... ... *

காவலிற் புலனைவைத்துக் கலிதன்னைக் கடக்கப்பாய்ந்து
நாவலிட் டுழிதருகின்றோம் நமன்தமர் தலைகள்மீதே
மூவுல குண்டுமிழ்ந்த முதல்வநின் நாமங்கற்ற
ஆவலிப் புடைமைகண்டா யரங்கமா நகருளானே. (க)

| | | | |
|---|---|---|---|
| மூ உலகு | எல்லா வுலகங்களையும் | புலனை | பஞ்சேந்திரியங்களையும் |
| உண்டு | (ப்ரளய காலத்திலே) திருவயிற்றிலே வைத்து | காவலில் வைத்து | (வெளியில் ஓடாதபடி) சிறையில் அடைத்து |
| உமிழ்ந்த | (பிரளயம் நீங்கினபிறகு அவற்றை) வெளிப்படுத்திய | கலிதன்னை | பாபராசியை |
| | | கடக்க பாய்ந்து | வெகுதூரம் உதறித்தள்ளி |
| முதல்வ | ஜகத்காரணபூதனே ! | நாவலிட்டு | ஜயகோஷம்செய்து |
| அரங்கமாநகருளானே !—; | | நமன் தமர் தலைகள் மீதே | யமபடர்களின் தலைமேல் |
| நின் நாமம் கற்ற | உனது திருநாமத்தைக் கற்றதனாலுண்டான | உழிதருகின்றோம் | அடியிட்டுத் திரிகின்றோம். |
| ஆவலிப் புடைமை | செருக்கினாலே | | (கண்டாய்-முன்னிலை அசைச்சொல்.) |

அடியார்களைக் காத்தருளும் திறம் நன்குவிளங்கும்படி கோயிலில் கண் வளர்ந்தருளும் பெருமானே !, உன் திருநாமத்தை நான் கற்றதனால் பெற்றபேற்றின் கனத்தைக் கண்டாயோ? அஹஹ! என்னைத் தீவழியில் செலுத்தி உனக்கு விலக்காக்கின பஞ்சேந்திரியங்களை அவற்றின் ஸ்வாதந்திரியம் ஒன்றும் ஓங்க வொண்ணாதபடி அமுக்கி, இத்தனைநாளாக இவற்றை அமுக்கி ஆளமுடியாதபடி தடையாய்க் கிடந்த பாபங்களையும் உதறிவிட்டு, இதனால் நரகபாதைகளில் நின்றும் பயம் தவிர்ந்து யமகிங்கரர் தலைமேல் அடியிட்டுத் திரிகின்றேன் ; எனது செருக்கு எப்படிப்பட்டது ! பாராய் என்கிறார்.

[காவலில் புலனை வைத்து.] முன்பு என்னைச் சிறையில்வைத்த இந்திரியங்களை இன்று நான் சிறையில்வைத்தேனென்கிறார். இராவணன் போர்க்களத்திலே இராமபிரானது அம்புகட்கு இலக்காகிப் பட்டுப் போனவாறே மந்தோதரி புலம்புகிறாள்—“[illegible]—இந்த்ரியாணி புரா ஜித்வா ஜிதம் த்ரிபுவநம் த்வயா-ஸ்மரத்பிரிவ தத்வைரமத்ய தைரேவ நிர்ஜித:” என்றாள்: அதாவது—இராவணனே ! நீ முன்பு இந்திரியங்களை யெல்லாம் வென்று அதனால் மூவுலகையும் வென்றாய் ; (இந்திரியங்களை நிக்ரஹித்துக் கொடுந்தவம்புரிந்து வரம் பெற்றமையால் மூவுலகும் வென்றனனாதலால் இங்ஙன் கூறப்பட்டது.) அந்த இந்திரி

யங்கள் "இப்பாவி நம்மை இப்படி தலையெடுக்கவொட்டாமல் பண்ணிவிட்டானே; ஆகட்டும் தக்க சமயம்பார்த்து இவனைத் தலையறுக்கிறோம்" என்று நெஞ்சில் பகை வைத்துக்கொண்டிருந்து இப்போது உனக்கு பிரதிக்ரியை செய்துவிட்டன என்றாள். (இந்திரியங்களை அடக்காமல் அவற்றுக்குப் பரவசப்பட்டு ஸீதையைக் கவர்ந்ததனால் உனக்கு இக்கேடு விளைந்ததென்றபடி.) அப்படி இராவணனிடத்தில் இந்திரியங்கள் முதலில் பரிபவப்பட்டு, பிறகு அவனைத் தாம் பரிபவப் படுத்தியவாறுபோல இவ்வாழ்வார் முதலில் தாம் இந்திரியங்களால் பரிபவப் பட்டுப் பொன்வட்டில் நிமித்தமாகச் சிறைபட்டிருந்த சினத்தை நெஞ்சில் வைத்துக்கொண்டிருந்து ஸமயம்பார்த்து அவற்றைத் தாம் சிறைப்படுத்தினர் என்ற விசேஷார்த்தம் இங்கு உய்த்துணரத்தக்கது.

"காவலில் புலனை வைத்து" என்பதற்கு மற்றொருபடியாகவும் பொருளுரைப்பர்: அதாவது—காவலில்லாதபடி இந்திரியங்களை வைத்து என்கை. இந்திரியங்களை வென்றவர்களாலும் பெறுதற்கு அரிதான மேற்சொல்லுகிற பேற்றை நான் இந்திரிய பரவசனாயிருந்தே பெற்றுவிட்ட பெருமை என்னே! என்று திருநாமத்தின் வைபவாதிசயம் விசேஷித்துக் கூறப்பட்டவாறு. உரிய நியமங்களோடே மருந்து புஜித்தவர்கட்கும் தீராதநோய் அநியதனாய் மருந்துண்ட எனக்குத் தீர்ந்துவிட்டதென்றால் மருந்தின் வைபவமே சொல்லிற்றாவதுபோல் இங்கும் திருநாமத்தின் வைபவமே இதனாற்கூறிற்றாம்.

இவ்வர்த்தத்தில் சிறியோர் அநுபபத்தி உண்டு; அதாவது—காவலில் என்பதற்குக் 'காவலில்லாதபடி' என்று பொருள்கொள்வது வருத்தம். ஆயினும் "மீமாம்ஸகர் சப்தத்தை நியமித்தாலும் அர்த்தத்தை முக்கியமாகக் கொள்ளுமாபோலே இங்கும் அர்த்த கௌரவத்தாலே சப்தத்தை நியமித்துச் சொல்லுகிறோம்" என்பர் பெரியவாச்சான்பிள்ளை; அர்த்தத்தின் ஸ்வாரஸ்யத்திற்காகச் சொல்லை நெருக்கிக்கொள்வது பாங்குதான் என்பது கருத்து.

அன்றியே, காவலில் இத்யாதிக்கு மற்றொரு வகையாகவும் பொருள் கொள்ளலாம்: 'காவல்' என்று எம்பெருமானைச் சொல்லுகிறது; எல்லாப் பொருட்கும் அவன் காவலனாயிருப்பதால். ஆகவே, அப்ராப்த விஷயங்களிற் பறந்தோடின இந்திரியங்களை ப்ராப்தமான பகவத்விஷயத்திலே மீட்டு வைத்து என்றவாறு.

கலிதன்னைக் கடக்கப் பாய்ந்து—கலி என்று கலியுகத்தைச் சொல்லிற்றாய் "இவன் க்ருதயுக புருஷர்களில் ஒருவன்" என்று பலருஞ்சொல்லும்படி கலியைக் கெடுத்தேனென்றுமாம்.

நாவலிட்டு—தோற்றவர் முன்னே ஜயித்தவர்கள் தமது வெற்றியைக் கூறிக் கோஷித்தல். "உழிதருகின்றோம்" என்று ஒருமையாகக் கூறாமல் பன்மையாகக் கூறியதனால்-ஒரு புண்ணியசாலியின் ஸம்பந்தத்தாலே பல பாபிகளும் பேறு பெறுவர்களென்னும் சாஸ்த்ரார்த்தம் வெளியாம்; அதாவது-நான் ஒருவன் திருநாமம் கற்க, அந்த ராஜகுல மாஹாத்மியத்தால் என்னைச் சேர்ந்த

வர்களும் நமன்றமர் தலைகள்மீது அடியிடும்படியானமை பாரீர் என்கை. வாலியின் பெயர் செவிப்பட்ட வளவில்தானே அஞ்சிச் சரமடைந்துகிடந்த ஸுக்ரீவ மஹாராஜர் இராமபிரானை அண்டைகொண்டபலத்தாலே கிஷ்கிந்தாத்வாரத்திலே சென்று அறைகூவினாற்போல இவரும் முற்பூலையம் நமன்தமர்க்கு அஞ்சிக்கிடந்து இன்று திருநாமத்தை அண்டைகொண்டபலத்தாலே அவர்கள் தலைகளிலே ஸ்பரிகராய் அடியிட்டுத் திரிகைவக்கிறார்.

இவ்வருளிச்செயலை அடியொற்றினாற்போலவே வேதாந்ததேசிகனும் யதிராஜஸப்ததியில் "[illegible]" [ததங்யமததர்மதஜ்வலி தஸேதஸாம் வாதிநாம் ஸிரஸ்ஸு நிஹிதம் மயா பதமதக்ஷிணம் லக்ஷ்யதாம்.] என்று கூறினர் போலும்.

"நமன் தலைமீதே" என்னாமல் "நமன் தமர் தலைகள்மீதே" என்றது - 'உழிதருகின்றோம்' என்ற பன்மைக்கு இணங்க இவர்களுக்கெல்லாம் ஸஞ்சார ஸ்தலம் போருகைக்காக. ஒவ்வொருவர்க்கும் ஒவ்வொருதலை வேணுமன்றோ.

உலகமடங்க யமனுக்கு அஞ்சி அவன்பெயரை இட்டுக்கொள்வது அவனுடைய கணக்கன் பெயரை இட்டுக்கொள்வதாய், "[illegible]—யமம் தர்ப்பயாமி, சித்ரகுப்தம் தர்ப்பயாமி." என்று ஆராதியாநிற்க, நீர் இங்ஙனே சொல்லுகைக்கு உமக்கு வந்தவைபவம் என்ன? ஆழ்வீர்! என்று நம்பெருமாள் திருவுள்ளமாக, அதற்கு உத்தர மருளிச்செய்கிறார் மூவுலகு இத்யாதி.

[மூவுலகுண்டுமிழ்ந்த.] யாவும் அழியும் பிரளயகாலத்தில் எம்பெருமான் அண்டங்களையெல்லாம் தனது திருவயிற்றில்வைத்து, அப்பிரளயம் நீங்கி ஸ்ருஷ்டிகாலம் வந்தவாறே வெளிநாடுகாண உமிழ்வன். உனது திருநாமங்களைக் கற்றதனாலுண்டான செருக்குக்கான் என்கிறார். (க)

பச்சைமா மலைபோல்மேனி பவளவாய் கமலச்செங்கண்
அச்சுதா! அமரரேறே! ஆயர்தம் கொழுந்தேயென்னும்
இச்சுவை தவிரயான்போ யிந்திர லோகமாளும்
அச்சுவை பெறினும்வேண்டே னரங்கமா நகருளானே. (உ)

| | | | |
|---|---|---|---|
| அரங்கமா நகருளானே !— ; | | அமரர் ஏறே | நித்யஸூரிகளுக்குத் தலைவனே ! |
| பச்சை மா மலை போல் மேனி | பசுமை நிறமுள்ள பெரிய மலை போன்ற திருமேனியையும் | ஆயர்தம் கொழுந்தே | இடையர் குலத்தில் தோன்றிய இளங்குமாரனே, |
| பவளம் வாய் | பவளம்போன்ற சிவந்த திருவாயையும் | என்னும் | என்று (எனது) வாயினால் சொல்லுவதனால் (எனக்கு) உண்டாகின்ற |
| செம் கமலம் கண் | செந்தாமரை மலர் போன்ற திருக்கண்களையு முடைய | இச் சுவை | இந்த அநுபவருசியை |
| அச்சுதா | அச்சுதனே ! | தவிர | விட்டொழியும்படி |

| | | | |
|---|---|---|---|
| யான்போய் | யான் (இவ்வுலகத்தினின்றும் நீங்கிப் பரமபதத்திற்குச்) சென்று | அச்சுவை | அந்த அநுபவருசியை |
| | | பெறினும் | அடைவதாயிருந்தாலும் |
| இந்திர லோகம் ஆளும் | (அந்தப்) பரமபதத்தை ஆளுகின்ற | வேண்டேன் | (அதனை) விரும்ப மாட்டேன். |

இப்படி திருநாமங்கற்ற ஆழ்வாரை நோக்கிப் பெரியபெருமாள் 'ஆழ்வீர்! நம் பேர் சொன்னவர்களுக்கு நாம் கொடுப்பதொரு நாடு உண்டு; அத்தைத் தருகிறோம், கொள்ளும்" என்ன; இவ்வுலகத்திலிருந்தபடியே திருநாமத்தைச் சொல்லி அதனால் பெறக்கூடிய இனிமைக்கு, பரமபதத்திற்போய் அநுபவிக்கின்ற அந்த அநுபவத்தினால் தோன்றும் இனிமையும் ஈடாகாது; அது எனக்கு வேண்டா என்கிறார். "ஸ்நேஹோ மே பரமோ ராஜந் த்வயி நித்யம் ப்ரதிஷ்டித: । பக்திஶ்ச நியதா வீர பாவோ நாந்யத்ர கச்சதி ॥—ஸ்நேஹோ மே பரமோ ராஜந் த்வயி நித்யம் ப்ரதிஷ்டித:—பக்திச்ச நியதா வீர பாவோ நாந்யத்ர கச்சதி." என்ற திருவடி வார்த்தையை நினைப்பது "ஸத்யம் ஶபே வாரணஶைலநாத! வைகுண்டவாஸேபி ந மேபிலாஷ:—ஸத்யம் சபே வாரணசைலநாத! வைகுண்டவாஸேபி ந மேபிலாஷ:" என்றார் தேசிகனும்.

பசுமை நீலம் கருமை என்ற நிறங்களை அபேதமாகக் கூறுவது கவிமரபாதலால் எம்பெருமானுடைய காளமேகத் திருவுருவத்திற்குப் பச்சைமாமலையை உவமைகூறினார். ஸாதாரண மலையானது எம்பெருமானுடைய அசைக்கலாகா நிலைக்கும் வளர்த்திக்கும் ஒப்பாகுமேயன்றி, காணப்புக்கவர்களின் கண்ணையும் நெஞ்சையும் குளிர்வித்து அவர்களுடைய ஸம்ஸார தாபங்களையெல்லாம் போக்குந் தன்மையும் எப்போதும் தியாகஞ்செய்தற்கு உரியதாயிருத்தலும் பெருங்கருணைக்கு இருப்பிடமாயிருத்தலும் முதலிய குணவிசேஷங்களில் ஒப்பாக மாட்டாமையால் 'பச்சைமா' என்ற அடைமொழி மலைக்குக் கொடுக்கப்பட்டது.

'அச்யுதன்' என்னும் திருநாமம்--தான் என்றும் நழுவாதவன் என்றும், (தன் அடிபணிந்தோரை) நழுவவிடாதவன் என்றும் பொருள்படும்

அமரர்—புண்யத்தின் மிகுதியால் மானிடப்பிறவிபெற்ற நம்மைவிட இன்னுஞ் சிறிதுகாலம் மாத்திரமே ஜீவித்திருக்கிற அக்கி இந்திரன் முதலிய ஸாதாரணதேவதைகளைப் போலன்றி எக்காலத்திலும் மரணமில்லாதவரான அநந்தன் கருடன் விஷ்வக்ஸேநர் முதலிய நித்யஸூரிகள். மேன்மைக்கு எல்லைநிலமான பிராட்டி பெரியதிருவடி திருவனந்தாழ்வான் முதலானோர்க்கு நியாமகனாயிருப்பதுபோலவே தாழ்வுக்கு எல்லைநிலமான இடையர்க்கும் எளியவன் என்று தோன்றுகைக்காக, "அமரரேறே! ஆயர்தம்கொழுந்தே!" என்றார். ஆ—பசு; அதனையுடையவர் ஆயர். எம்பெருமான் கிருஷ்ணாவதாரத்தில் ஒருத்திமகனாய்ப் பிறந்து ஓரிரவிலொருத்திமகனாயொளித்து வளர்ந்ததைப்பற்றி 'ஆயர்தம் கொழுந்து' எனப்பட்டது.

என்னுமிச்சுவை என்றதனால், எம்பெருமானது குணங்களை, அநுபவிக்க வேண்டியதில்லை ; அவனுடைய திருநாமங்களைக் கூறுதல் மாத்திரமே சுவை தருதற்குப் போதுமென்பது பெறப்படும்.

யான்—திருநாமஞ் சொல்லுகைக்குப் பாங்கான நாவையுடைய நான் என்றபடி. வேறொரு தேசத்தேறப்போய் அநுபவிக்குமளவும் விளம்பத்தைப் பொறுக்கமாட்டாத மிகுந்த அபிநிவேசமுடைய நான் என்றுமாம். போய் என்பதனால் போவதிலுள்ள அருமைப்பாட்டையும் இப்போது பயன் எளிதிற் கைப்பட்டிருத்தலையும் குறிப்பித்தனர். "வரால் முயல்விட்டுக் காக்கைபின் போவதே."

இந்திரன் முதலிய சொற்களெல்லாம் முக்கியவ்ருத்தியாகப் பரமாத்மாவையே குறிக்குமென்பதும் மற்றைத் தேவர்களைக் குறிப்பது இலக்கணையாலென்பதும் வேதாந்திகளின் கொள்கையாதலால் 'இந்திரலோக' மென்பது ஸ்வர்க்கலோகத்தைக் குறியாமல் எம்பெருமானுக்கே உரிய பரமபதத்தைக் குறித்தது.

"இந்திரலோகமாளுமச்சுவை இனிதன்று" என்னாமல், "அச்சுவை பெறினும் வேண்டேன்" என்றது—தாம் பரமபதாநுபவத்தைப் பழித்தவராகாமல் திருநாமஸங்கீர்த்தனத்தில் தமக்குள்ள ஆதராதிசயத்தை விளக்குதற் பொருட்டாம். பரமபதாநுபவமென்கிற பதார்த்தமே கிடையாதென்றும், சாஸ்த்ர மர்யாதைக்காக அது உண்டென்று ஒருகால் இசைந்தாலும் அது சுவையற்றதாமென்றும் உபந்யஸிக்கிற ஆழ்வாரொருவர் உளரிறே ; திருமங்கையாழ்வார் திருமடல்களை நோக்குக.

"அரங்கமாநகருளானே! அச்சுவை பெறினும் வேண்டேன்" என்றது பரமபதத்தி லிருக்கிறதைவிட்டு இவ்வழகையும் சீலத்தையும் இங்குள்ளார்க்கு முற்றூட்டாக அநுபவிக்கக் கொடுக்கவந்து கிடக்கிற இது போதாதோ? தாழ்ந்தார்க்கு முகங்கொடுக்கிற நீர்மையை அநுபவிக்கைக்கு அங்குள்ளாரும் இங்கே வரவேண்டியிருக்க, என்னை அங்கே போகவிடப்பார்ப்பதென்? என்ற கருத்துந்தோன்றும்.

"ப்ரவாளம்" என்ற வடசொல் பவளமெனத் திரிந்தது. மேனி வாய் கண் என்ற உம்மைத்தொகைகள் அச்சுதனைக் கொண்டு முடியும். ஏறு—ஆண்பாற் சிறப்புப்பெயர். இதற்கீடாக வடநூலார் 'ரிஷப' (ரிஷப) என்பதைச் சொல்வர் ; [" புருஷர்ஷப: "] 'தவிர ஆரும்' என அந்வயம். பெறினும் என்ற உயர்வு சிறப்பும்மை பெறுதலின் அருமையைக் குறிக்கும். வேண்டேன் என்ற தன்மை யொருமை எதிர்மறை முற்றில் எதிர்மறை ஆகாரம் புணர்ந்து கெட்டது. (௨)

வேதநூல் பிராயம்நூறு மனிசர்தாம் புகுவரேலும்
பாதியு முறங்கிப்போகும் நின்றவிப் பதினையாண்டு
பேதைபாலக னதாகும் பிணிபசி மூப்புத்துன்பம்
ஆதலால் பிறவிவேண்டே னரங்கமா நகருளானே. (௩)

அரங்கமாநகருளானே!—;

| | |
|---|---|
| மனிசர் தாம் | மநுஷ்யர்கள் |
| வேதம் நூல் | வேதசாஸ்திரத்திற்படியே |
| நூறு பிராயம் புகுவரேலும் | நூறுபிராயம் வாழ்ந்திருப்பர் களேயானாலும் |
| பாதியும் | அந்த சதாயுஸ்ஸில் பாதியான ஐம்பது வருஷமும் |
| உறங்கி போகும் | உறக்கத்தாலே கழியும்; |
| நின்ற இப் பதினை யாண்டு | மிருக்கிற ஐம்பது வருஷம |
| பேதை | சிசுவாயிருக்கும் அவஸ்தையாயும் |
| பாலகன் | 'சிறுபயல்' என்னும்படி யான அவஸ்தையாயும் |
| அது ஆகும் | நெஞ்சால் நினைக்கவும் தகாத யௌவநாவஸ்தை யாயும் |
| பிணி | வியாதியையமாயும் |
| பசி | ஐந்து இந்திரியங்கட்கும் ஐந்து விஷயங்களிலு முண்டான ஆசையைத் தொலைக்குங் காலமாயும் |
| மூப்பு | கிழத்தனமாயும் |
| துன்பம் | மற்றும் பல துன்பங்க ளாகவும் கழியும்; |
| ஆதலால் | இப்படி ஆயுஸ் முழுவதும் அனர்த்த பரம்பரையாய்க் கழிகிறபடியால் |
| பிறவி | ஜந்மத்தை |
| வேண்டேன் | விரும்புகிறேனில்லை. |

உலகத்தில் மானிடப்பிறவி யென்பது ஜந்மாந்தர ஸஹஸ்ரநற்றவங்களாலே பெறக்கூடியது; அதனை வருந்திப் பெற்றாலும், கர்ப்பத்திலேயும், பிறந்தவுடனும் நாலுநாள் கழித்தும் சிலமாதங்கள் கழித்தும் சிலவருடங்கள் கழித்தும் இறக்கக்கூடியவர்கள் பெரும்பான்மையரேயன்றி, வேதசாஸ்த்ரத்தில் "ஶதாயுர் வை புருஷ:" [மனிதன் நூறு பிராயம் வாழ்பவன்] என்று கூறியுள்ளபடி தீர்க்காயுஸ்ஸாக வாழக்கூடியவர் மிகச் சிறுபான்மையரே; விதிவசத்தால் சிலர் நூறு பிராயம் புக்கு வாழப்பெற்றாலும் அவரது வாழ்நாள் கழியும் வகையை ஆராய்ந்தால் ஒருநொடிப்பொழுதாவது நற்போதாகக் கழிய வழியில்லை. ஸூர்யன் அஸ்தமித்து மீண்டும் உதிக்குமளவும் உறங்குவது ஒரு நியமமாக வந்துவிட்டபடியால் அஹோராத்ரமாகிய ஒரு தினத்துக்கு உள்ள அறுபது நாழிகையில் முப்பது நாழிகை உறக்கத்தில் கழிகிற கணக்கில் பாதி ஆயுஸ்ஸாகிய ஐம்பது வருஷம் உறக்கத்தால் கழிந்ததாகிறது; மற்ற பாதிவாழ்நாளில்–தன்னுடைய ஹிதாஹிதம் தாயின் அதீனமாயிருக்கும் சிசுத்வாவஸ்தையாய்ச் சிலகாலமும், எத்தனை தீம்புகள் செய்தாலும் சிறிவொன்றுதபடி செல்வப்பிள்ளை பருவமாய்ச் சிலகாலமும், பிறகு யௌவநம் வந்துபுகுந்து விஷயாந்தரங்களிலே மண்டித்திரியும் பருவமாய்ச் சிலகாலமும், இங்ஙனே இந்திரியச் சிறையிலே அகப்பட்டுத் தடுமாறுமிக்க இடிவிழுந்தாற்போலே வந்து புகுகிற கிழத்தனமாய்ச் சிலகாலமும், "அத்யுத்கடை: புண்யபாபைரிஹைவ ஃபலமஶ்நுதே" [வரம்புகடந்த புண்யபாபங்களின் பலனை இப்பிறவியிலேயே அநுபவிக்கிறான்] என்றபடி – யௌவநத்திற் செய்த எல்லைகடந்த குறும்புகட்குப் பலனாக எய்தும் பிணிகளால் வருந்துவதாய்ச் சிலகாலமும், பசியினால்

ஒன்றும் தோன்றாதபடி இடர்ப்படுவதாய்ச் சிலகாலமும், ஒருபக்கத்தில் பிள்ளை செத்தான் என்று கேட்டு அழுவதும், மற்றொருபக்கத்தில் மனைவி செத்தாள் என்று கேட்டு அழுவதுமாய் இப்படி ஸம்ஸாரத் துன்பங்களில் ஆழ்ந்து செல்லும் நாளாய்ச் சிலகாலமும் கழிவதால் இத்துன்பங்களை அநுபவிப்பதற்கு இன்னும் சிறிது ஆயுஸ் கடன் வாங்கிக் கொள்ளவேண்டியதாமே யன்றி உள்ள வாழ்நாளில் ஆத்மாவைப்பற்றிச் சிறிதாகிலுஞ்சிந்திக்கப் பொழுது கிடைப்பரிது; ஆதலால் இப்பிறவி எனக்கு வேண்டா என்கிறார்.

கீழ்ப்பாட்டில் 'பரமபதம் எனக்கு வேண்டா' என்ற ஆழ்வாரை நோக்கி எம்பெருமான் "ஆழ்வீர்! உமக்குப் பரமபதம் வேண்டாவாகில் கோயிலோடே தோள்தீண்டியான ஸம்ஸாரத்திலேயிருந்து திருநாமத்தை அநுபவியும்" என்றருளிச் செய்ய; "அது தன்னையும் நிரூபித்தவாறே திருநாமம் சொல்லுகைக்கு அவகாசம் அரிதாம்படி துக்கபரம்பரையேயா யிருந்தது; ஆகையாலே எனக்கு ஸம்ஸாரத்திலிருப்பும் வேண்டா" என்று ஆழ்வார்கூற 'திருநாமம் சொல்லுகைக்கு அவகாச மில்லாதபடி ஸம்ஸாரத்துக்கு நீர்சொல்லுகிற குறை என்?' என்று எம்பெருமான் கேட்டருள ஸம்ஸாரத்தினுடைய தோஷங்களை இப்பாட்டால் உபபாதிக்கிறாரென்க.

"இத்தால், பழகிப்போருகிற ஸம்ஸார யாத்ரையிலும் ஜுகுப்ஸை பிறக்கும்படி திருநாமம் இனிதென்று அம்முகத்தாலே திருநாமத்தினுடைய போக்யதாப்ரகர்ஷத்தைச் சொல்லுகிறது" என்பர் பெரியவாச்சான்பிள்ளை.

**வேதநூல்**—வேதமென்கிற சாஸ்த்ரம்; அன்றியே, வேதமும் மற்றுமுள்ள சாஸ்த்ரங்களுமென்றுமாம். **உறங்கி** - உறங்க என்றவாறு; எச்சத்திரிபு. **பதினையாண்டு** - பத்தாலே பெருக்கப்பட்ட ஐயாண்டு - ஐம்பதாண்டுகளென்றபடி. "நின்றதிற் பதினையாண்டு" என்றும் சிலர் ஓதுவர்.

பேதை பாலகன் என்ற அடைவின்படியே யௌவனபருவத்தையும் வாய் விட்டுச் சொல்லாதொழிந்தது - அப்பருவத்தின் மிக்க கொடுமையை விளக்குதற்காம். துஷ்டன் பெயரை நாக்கொண்டு கூறக் கூசுமவர் 'அந்தப்பயல்' என்றே சொல்லுமாபோலே. அப்பருவத்தின் கொடுமையை இவ்வாழ்வார் நன்கு கைகண்டவராதலால் அதனை நினைத்தவாறே அஞ்சி நடுங்கி **அதாகும்** என்கிறார். 'பேதைத்தனமே நன்று' என்னும்படியன்றோ இப்பருவத்தின் அறிவுகேடு இருப்பது.

இப்படி "பிறவி வேண்டேன்" என்ற ஆழ்வாரை நோக்கி எம்பெருமான் "ஆழ்வீர்! 'அச்சுவை பெறினும் வேண்டேன்' என்று பரமபதமும் வேண்டா என்கிறீர்; 'பிறவி வேண்டேன்' என்று ஸம்ஸாரமும் வேண்டா என்கிறீர்; நம் கையிலுள்ளது இவ்விரண்டு விபூதியேயன்றோ? இரண்டுக்கும் குறை கூறுகின்றீர்; 'நின்றால் ஆனை, இருந்தால் ஆனை, கிடந்தால் ஆனை' என்பாரைப் போலே நீர்படுத்துகிறபாடு என்!" என்று மூட்டிக்கொள்ள, **அரங்கமாநகருளானே!** என்கிறார்; கீழ்க்கூறிய இரண்டு விபூதிக்கும் மேற்பட்டு மூன்றாவது

விபூதியென்னும்படியான கோயிலிலே எனக்கு ஓர் இருப்பு அமைக்கலாகாதோ? என்பது உட்கருத்து.

கோயிலில் குடிவாழ்ந்தால் பேதைப் பருவத்திலே அந்நப்ராசநத்துக்கென்றாகிலும் ஸந்நிதிக்குள் கொண்டு புகுவர்கள்; பால்யாவஸ்தையில் விளையாடும்போதும் பெருமாள் புறப்பாடு அருளிப்பாடு முதலியவற்றை அநுகரிக்கும்படியாயிருக்கும்; யௌவநம் வந்தால், தான் விரும்பின விஷயாந்தரங்களைக் காணவேண்டியாகிலும் ஸந்நிதிக்குள்ளே புகலாயிருக்கும்; மூப்படைந்து உள்ளே புகமாட்டாத நாளைக்கு நம்பெருமாள் இவன்வாசலிலே வந்து நிற்கலாயிருக்கும்; ஆக இப்படிகளாலே கனவிலும் காண்பது பெருமாள் வடிவழகேயாயிருக்குமாகையாலே கோயில் வாஸம் அடிக்கழஞ்சு பெற்றுச்செல்லா நிற்குமென்றருளிச்செய்வர். (௩)

மொய்த்தவல் வினையுள்நின்று மூன்றெழுத் துடையபேரால்
கத்திர பந்துமன்றே பராங்கதி கண்டுகொண்டான்
இத்தனை யடியரானார்க் கிரங்கும் நம்மரங்கனாய
பித்தனைப் பெற்றுமந்தோ! பிறவியுள் பிணங்குமாறே. (௪)

| | |
|---|---|
| மொய்த்த | அடர்ந்துகிடக்கிற |
| வல் வினையுள் நின்று | கொடிய பாபராசியினுள்ளே நின்று |
| மூன்று எழுத்து உடைய பேரால் | கோவிந்த நாமத்தாலே |
| கத்திரபந்தும் அன்றே | க்ஷத்ரபந்துவுமன்றோ |
| பராங்கதி | சிறந்த பதவியை |
| கண்டு கொண்டான் | கண்டு அநுபவிக்கப் பெற்றான்; |
| இத்தனை அடியர் ஆனார்க்கு | இவ்வளவு ஆநுகூல்யமுடையவர்கட்கும் |
| இரங்கும் | அருள்புரிகின்ற |
| நம் அரங்கன் ஆய பித்தனை | நம் அழகியமணவாளனாகிற ஆச்ரித வியாமுக்தனை |
| பெற்றும் | சேஷியாகப் பெற்றுவைத்தும் |
| பிறவியுள் | ஸம்ஸாரத்திலகப்பட்டு |
| பிணங்கும் ஆறே | வருந்துகிறவிதம் என்னே! |
| அந்தோ | ஐயோ! |

இப்பாட்டு முதல், பதினான்காம் பாட்டளவும் பகவத் விஷயத்திலே தம்மைப்போல் ஆழங்காற்படாமல் உடலுக்கே கரைந்து நைந்து திரியும் ஸம்ஸாரிகளின் இழவைக்கண்டு பொறுக்கமாட்டாமல் தளர்ந்து ஒருபக்கத்தில் ஆச்சரியப்பட்டும், ஒரு பக்கத்தில் வருத்தப்பட்டும், மற்றொரு பக்கத்தில் வெறுப்புற்றும் இன்னொரு பக்கத்தில் நிந்தித்துக்கொண்டும் பேசுகிறார்.

பகவதநுபவத்திலே ஊன்றி உகப்பேயாய்ச் செல்லுமிவர் ஸம்ஸாரிப் பாவிகளைப்பற்றிக் கரைந்து வருந்துவானேன்? என்னில்; இப்பாவிகள் அநியாயமாய் வகுத்த விஷயத்தை இழந்து படுகின்றனரே என்னும் துக்கம் பொறுக்கமாட்டாமையாலும், பகவத்விஷயம் பலர் கூடித்திரண்டு அநுபவிக்கவேண்டிய இனிய

விஷயமாதலாலும், "ஸ்வாத்வந்நம் நபுஞ்ஜீத" [இன்கனி தனி யருந்தான்] என்றபடி இனிய விஷயத்தைத் தனியாய் அநுபவித்து ஸாத்மிப்பித்துக் கொள்ளவல்ல தன்மையரல்லராதலாலும் துணைகூட்டிக்கொள்ளத் தேடுகிறாரென்க.

கொடும்பாவிகளான எங்களுக்கு எம்பிரான் திருநாமங்களை உச்சரிப்பதற்கு யோக்யதை உண்டோ? தேவபோஷ்யமான புரோடாசத்திலே நாய் வாய்வைக்கக் கடவதோ?" என்று சில ஸம்ஸாரிகள் அயோக்யதாநுஸந்தானம்பண்ணி அகலப் பார்க்க, அவர்களை நோக்கி, 'ஆதர்காள்! நன்கு சொன்னீர்கள்; க்ஷத்ரபந்து என்பவனிற்காட்டிலும் வேறொரு கொடியபாபிஷ்டன் இவ்வுலகில் உளனென்று நீங்கள் கேட்டதுண்டோ! அவனுடைய கொடுமையை நீங்கள் புராணத்திலே விரிவாகக்கேட்டிருக்கலாமே; அப்படிப்பட்ட பாவியுமன்றோ கோவிந்த நாமத்தை உச்சரித்து நற்கதி கண்ணினன். அன்றியும், பொய்யான அன்பை அபிநயித்துக் காட்டுவார் பக்கலிலும் பிச்சேறி மேல்விழுந்து பற்றுவானாயிருந்தான் எம்பெருமான்; இவற்றையெல்லாம் நீங்கள் அறிந்துவைத்தும் படுகுழியில் வீழ்ந்து படுவதே! இஃது என்ன கொடுமை! என வியக்கிறார்.

மொய்த்த வல்வினை—பாபராசிகள் கோடிக்கணக்காகச் சேர்ந்து 'நான் முன்னே நான் முன்னே' என்று மேல்விழுந்து மொய்த்துக்கொண்டு கிடக்கிறபடி; தேன் கூட்டை ஈ மொய்த்துக் கொள்ளுமாபோலே; "நெய்க்குடத்தைப் பற்றி ஏறு மெறும்புகள்போல் நிரந்து, எங்கும் கைக்கொண்டு நிற்கின்ற நோய்காள்" என்ற பெரியாழ்வார் திருமொழியையும் நோக்குக. மொய்த்தவல்வினையுள் நின்று—மஹாபாபிஷ்டனாயிருந்துவைத்து என்றபடி.

மூன்றெழுத்துடைய பேரால்—இன்ன திருநாமமென்னாதே ரஹஸ்யமாய்ச் சொல்லிற்று—ருசி பிறந்த பின்பு 'அந்தத் திருநாமம் என்?' என்று விரும்பிக் கேட்டால் அப்போதைக்கு உபதேசிப்போமென்றும், "மூன்றெழுத்ததனை மூன்றெழுத்ததனால்" என்று பெரியாழ்வார் மறைத்தாற்போல.

கத்திரபந்து—பிராமணர்களுள் அதமனை 'ப்ரஹ்மபந்து' என்கிறாப் போலே, க்ஷத்ரியர்களுள் அதமனை க்ஷத்ரபந்து என்கிறது. "நம்முதலிகள் கோஷ்டியில் 'நாலூரான்' என்றாற்போலே ரிஷிகள் கோஷ்டியில் 'க்ஷத்ரபந்து' என்றால் செவிபுதைக்கும்படியாயிருப்பது" என்பர் பெரியவாச்சான் பிள்ளை. நாலூரானுடைய கொடுமை கூரத்தாழ்வான் சரிதத்தில் காணத்தகும்.

பராங்கதி—பரகதி என்றவாறு; அதாவது பரமபதப்ராப்தி. கோவிந்தநாம ஸங்கீர்த்தநத்தால் பாபராசியில்நின்றும் விடுபட்டவளவேயன்றி, ஐச்வரியம் கைவல்யம் முதலிய க்ஷுத்ர பலன்களைப் பெற்றொழியாதவளவேயுமன்றி நித்ய ஸூரிகளுடைய நித்யாநுபவத்தையன்றோ பெற்றது.

கத்திரபந்துமன்றே—க்ஷத்ரபந்துவின் உபாக்யானம் ஸ்ரீவிஷ்ணுதர்மத்தில் தொண்ணூற்றேழாவது அத்யாயத்தில் பரக்கக்கூறப்பட்டுள்ளது; அதன் சுருக்கம் வருமாறு:—

மிகக்கொடிய நடத்தைகளையுடையனாய், பல்வகைப் பாவங்களும் உருவெடுத்து வந்தனவென்னும்படி மஹாபாபியான க்ஷத்ரபந்து என்பானொருவன் இருந்தான்; அவன் தனது கொடுமையினால் தாய் தந்தை மக்கள் மித்திரர் அனைவராலும் கைவிடப்பட்டவனாய், காட்டிலே திரிந்துகொண்டு ஜீவஹிம்ஸையினால் வயிறுவளர்த்துவந்தான். இங்ஙனம் நெடுநாள் சென்றவளவில், ஒருநாள் ஒரு மாமுனிவர் கொடிய வெய்யில் வேளையில் வழிபோகாநிற்கையில் வழிதப்பி, இப்பாவி திரியுங் கானகத்திலே புகுந்து இவனது கண்ணுக்கு இலக்காயினர். அவரைக்கண்டதும் அவருடைய பரிதாபத்தைக் கண்ட இவனுக்குத் தன்னையுமறியாமல் அம்முனிவர் விஷயத்திற் காருண்யமுண்டாகி, 'மாமுனிவரே! இஃது உம்முடைய வழியன்றே; வழிதப்பிவந்தீர்போலும்; உற்றுநோக்கிப் பாரும்' என்று முனிவரை நோக்கிக்கூற, அவரும் உணர்ந்து, பொறுக்க முடியாத தாஹத்தையுடையராய் ஒரு தடாகத்தைத் தேடிச்செல்லுகையில் அருகே ஒரு அழகிய பொய்கையைக்கண்டு, தாபமிகுதியால் சடக்கென அக்குளத்திற்போய் விழுந்திட்டார். அப்போது அருகிருந்த க்ஷத்ரபந்து தனது கையிலிருந்த வில்லையும் அம்புகளையும் எறிந்துவிட்டு, அம்முனிவரைப் பிடித்துத்தூக்கித் தேற்றித் தாமரைக்கிழங்குகளை உணவாகக்கொடுத்து விடாயைப் போக்கி மகிழ்வித்தான். பிறகு அவர் கரைமீதேறி ஒரு மரத்தடியில் உட்கார, அவரது கால்களின் நோவுதீர நன்றாகப் பிடித்து உபசாரங்களைச்செய்த க்ஷத்ரபந்துவைநோக்கி அம்முனிவர், 'பேருபகாரம்புரிந்த பெரியோனே! யாருடைய சிறந்த குலத்திற் பிறந்தவன் நீ? உனது வரலாறுகளைக் கேட்க விரும்புகிறேன்' என்ன! அதுகேட்ட அவனும் 'முனிவர் கோமானே! நான் வைச்யவம்சத்தில் விச்ரவஸ்தன் என்பவற்கு மகனாய்த்தோன்றியவன்' என்று தொடங்கித் தனது கொடுமைகளையெல்லாம் ஒன்றும் ஒளிக்காமல் உள்ளபடி சொல்ல; அவற்றைச் செவியுற்ற முனிவர் இவனை நல்வழியிற் செலுத்தவேணுமென்ற கருத்துக்கொண்டு 'அப்பா! இனி இத்தீயகுணங்களையெல்லாம் விட்டிட்டு ஜீவகாருண்யத்தையே பரமதர்மமாகக் கடைப்பிடிக்க உன்னாலாகாதோ?' என்று கேட்க; அதற்கு அவன், 'காமம், க்ரோதம், லோபம், மோஹம், மதம், மாத்ஸர்யம் என்னும் இக்குணங்கட்குப் பிறப்பிடமான நான் அவற்றைவிட்டுப் பிரிந்து ஒரு க்ஷணகாலமும் இருக்ககில்லேன்; என்மனம் என்வசமன்று; இது தவிர வேறு நியமமுண்டாகில் சிரமேற் கொள்ளக் காத்திருக்கிறேன்' என்ன; எப்படியாவது இவனை வழிப்படுத்தவேணுமென்னும் பேரவாக்கொண்ட முனிவர் 'இது மாட்டாயாகில், எப்போதும் கோவிந்த! கோவிந்த! என்று சொல்லிக்கொண்டிருக்கவாவது உன்னால் முடியுமோ? இருமினாலும் தும்மினாலும் கோவிந்த! என்றே சொல்லிக்கொண்டிருப்பாயாகில் உனக்கு மிக்க நன்மையுண்டாம்' என்று சொல்லிவிட்டுப் போயினர். அதுமுதலாக க்ஷத்ரபந்து கோவிந்த நாமத்தை இடைவிடாது ஸங்கீர்த்தனம் பண்ணிக்கொண்டிருந்தான். சிலகாலங் கழித்து அவன் மரணமடைந்து அந்தணர்குலத்தில் பூர்வஜந்ம

ஸ்மரணத்துடன் பிறந்தான். உடனே அவனுக்கு இக்கொடிய ஸம்ஸாரத்தில் மிக்க நிர்வேதம் உண்டாயிற்று. இப்படிப்பட்ட உத்தமோத்தமமான ப்ராஹ்மண குலத்தில் எனக்குப்பிறவி நேர்ந்ததும் பூர்வஜந்ம ஸ்மரணமுண்டானதும் நான் முன்பு பண்ணின கோவிந்தநாம ஸங்கீர்த்தநத்தின் பயனன்றோ? ஆகவே எனக்கு மேலான நன்மையை விளைத்த அந்த ஸ்ரீகோவிந்தனையே நான் ஆராதனஞ்செய்து, * நீண்டவழும்புஞ் செந்நீருஞ் சீயுநரம்புஞ் செறிதசையும் வேண்டா நாற்றமிகு முடலைவிட்டு * மாயவன் சேற்றள்ளற் பொய்ந்நிலத்தைக் கடந்து நலமந்தமில்லதோர் நாடாகிய பரமபதத்தை அடையக்கடவேன் என்பதாகத் துணிந்து அங்ஙனமே செய்து பரமபாகவதனாகி வீடுபெற்றனன் என்பதாம்.

இத்தனையடியரானார்க்கு—க்ஷேத்ரபந்துவைப்போல ஸ்வல்பம் ஆநுகூல்ய முடையவர்கட்கு என்றும்; ‘நாரணன் த்வேஷி, நீ த்வேஷன்’ என்று ஒருவர் சொன்னால் ‘ஆ! அப்படியா?’ என்று மார்புதட்டி மறுப்பதற்கு முன்வர மாட்டாத அத்வேஷமுடையார்க்கும் என்றும் இரண்டுவகையாகப் பொருள் கூறுப.

பித்தன்—இது செய்யத்தகும், இது செய்யத்தகாது என்ற விவேகமற்றவன் பேயனெனப்படுவான்; எம்பெருமானும் அடியார் திறத்திலுள்ள வ்யாமோஹாதிசயத்தினால் பரிமாறும் முறையில் அடைவுகெட்டு முறைமாறுபவனாதலால் பித்தனெனப்பட்டது. பகவத் விஷயத்திலே உந்மஸ்தகமாக ஆழுமவர்களைப் பேயர் என்னுமாபோலே, பாகவத விஷயத்திலே உந்மஸ்தகமாகப் பரிமாறுபவனைப் பித்தனென்னக் குறையில்லையே. அந்தோ!—ஹந்த. (௪)

பெண்டிரால் சுகங்களுய்ப்பான் பெரியதோ ரிடும்பைபூண்டு
உண்டிராக் கிடக்கும்போதும் உடலுக்கே கரைந்துநைந்து
தண்டுழாய் மாலைமார்பன் தமர்களாய்ப் பாடியாடித்
தொண்டுபூண் டமுதமுண்ணாத் தொழும்பர்சோ றுகக்குமாறே. (௫)

| | |
|---|---|
| பெண்டிரால் | மனைவியரால் |
| சுகங்கள் | ஸகல ஸுகங்களையும் |
| உய்ப்பான் | அநுபவிப்பதாகக்கருதி |
| பெரியது ஓர் இடும்பை | மிகப்பெரிதான துயரங்களை |
| பூண்டு | மேற்கொண்டு |
| இரா | இராப்பொழுதிலே |
| உண்டு | புசித்து |
| கிடக்கும் போதும் | படுக்கையிலே சாயும் பொழுதும் |
| உடலுக்கே கரைந்து | சரீரத்திற்காகவே வலைப் பட்டு |
| நைந்து | நெஞ்சு உளைப்பட்டிருந்து, |
| தண் துழாய் மாலை மார்பன் தமர்கள் ஆய் | குளிர்ந்த திருத்துழாய் மாலையைத் திருமார்பிலணிந்த பெருமானது அடியாராய் |
| பாடி | (அவன் குணங்களை வாயாரப்) பாடி |
| ஆடி | (பரவசராய்க்) கூத்தாடி |
| தொண்டு பூண்டு | (இவ்வகையான) சேஷவ்ருத்தியை மேற்கொண்டு |
| அமுதம் உண்ணா தொழும்பர் | (பகவத்குணாநுபவமாகிற) அமுதத்தைப் புசிக்கப் பெறாத நீசர் |
| சோறு உகக்கும் ஆறே | சோற்றை விரும்பும் வகை என்னே! |

"அந்தோ! பிறவியுட்பிணங்குமாறே" என்று ஸம்ஸார வாழ்க்கையை வெறுத்த ஆழ்வாரைநோக்கிச் சிலர் "ஏன்காணும்! பதினாறு பிராயத்துப் பெண்கள் சிலம்பொலிக்கக் குலாவி யுலாவுமிடத்திற்குப் பொல்லாங்கு சொல்லுகை உரியதோ? பெண்களோடணைந்து பலவகைச் செல்வங்களையும் அநுபவித்துச் சுகமடைவதிற்காட்டில் வேறு பேறு உண்டோ?" என்று ஆக்ஷேபிக்க, அவர்களை க்ஷேபித்துக்கூறுவது-இப்பாட்டு.

பெண்களோடு அணைந்து சுகத்தை அநுபவிக்க விரும்புதல் தீயோடு அணைந்து விடாய்தீர நினைப்பதையும், ஆடுகிற பாம்பின் நிழலிலே ஒதுங்கி ஸுகம் பெற நினைப்பதையு மொக்குமென்பர்—பெண்டிரால் சுகங்களுய்ப்பான் பெரியதோர் இடும்பைபூண்டு என்கிறார். ஐயோ! துக்கத்திற்கு ஸாதநமானவற்றையே சுகத்திற்கு ஸாதனமாக நினைப்பதே! இப்படியுமொரு மயக்கமுண்டோ? பிழைக்கவேணுமென்று நினைப்பாரும் விஷத்தையுண்பரோ?

"இவன் கால்நலத்தாலே பெருப்பெருத்த செல்வமுண்டாம்; இவள் பக்வையானவளவிலே காமரஸங்களைப் பரமசுகமாகத் தருவள்; பிறகு ஸந்தான ஸம்ருத்தி யுண்டாம்; இவ்வகைகளாலே நமக்குப் பரமசுகத்தைத் தருவதாக்கும் இந்த ஸம்ஸாரம்" என்று ஒவ்வொருவனும் நினைத்துப் பெண்டிரைக் கொண்டு ஒருநொடிப்பொழுதிலே துக்கசாகரத்தில் விழுந்து மடிகின்றனரே! என்று வயிறெரிகிறார்.

பெரியதோர் இடும்பைபூண்டு—ஸுக ஸாதநமாக நினைத்துத் தாம் கொண்ட பெண்டிரை உகப்பிப்பதற்காக ம்ருத்யுதாநம் வாங்கவேணும், பாஹிம்ஸை பண்ணவேணும், பொற்களவு செய்யவேணும், ராஜ தண்டனைகளை அநுபவிக்கவேணும், ஐயோ! இப்படிகளாலே பெருப்பெருத்த துக்கங்களை எதிரிட்டுக் கொள்ளுகிறார்களே! முதலிலே பெண்டிரைக் கொள்வதற்கு ஸாதநமாகச் செய்யும் செயல்களும் துக்கரூபம்; கொண்ட பெண்டிரைப் பாதுகாப்பதற்காகச் செய்யும் செயல்களும் துக்கரூபம்; இவ்வளவேயுமன்றி அப்பெண்டிரால் இவன் அடைவதும் பூர்ணதுக்கமே. "நசிபோயின் சங்கிரேன்மின் இருமி பிளைத்தீர், உள்ளக்கூசியிட்டீர்" என்று கதவடைத்துக் காற்கடைக் கொள்ளுவர்களே. "பெரியதோரிடும்பை எய்தி" என்னுமல் பூண்டு என்ற சொல்நயத்தால் கழுத்திலே மாட்டிக்கொண்ட வாயோடுபோலே பிறகு தன்னாலும் கழற்றிக்கொள்ள முடியாமை விளங்கும்.

உண்டிரா—தாம் கொண்ட பெண்டிரை உகப்பிப்பதற்காகப் பகலெல்லாம் சூதனாய்க்கள்வனாகித் தூர்த்தரோடிசைந்து போதுபோக்கவேண்டியிருப்பதால் ஒருபிடி சோறு உண்பதற்கும் அவகாசம் அரிதாய்விடும்; பின்னை இரவிலேயாய்த்து உண்பதற்குச் சிறிது அவகாசம் பெறுவது. பகலெல்லாம் அலைந்து ஒரு பிடிசோறு உண்டவாறே உடம்பு பரவசமாய் விழுந்துவிடுமாதலால் "கிடக்கும்போதும்" என்கிறார்.

அப்போதாகிலும் ஆத்மாவைப்பற்றிச் சிறிது கரையக்கூடுமோ என்று பார்த்தால், இல்லை; [உடலுக்கே கரைந்து நைந்து] பொழுதுவிடிந்தவாறே எங்கே சூதாடப்போகலாம், எங்கே களவாடப்போகலாம் என்றாற்போலே மீண்டும் தேஹயாத்ரையைப்பற்றின சிந்தையேயாய்த்து நிகழ்வது.

கரைந்து நைந்து—பகவத் விஷயத்திலே ஆழ்ந்தவர்கள் "நினைதொறும் சொல்லுந்தொறும் நெஞ்சிடிந்துகும்" என்றபடி படும்பாடுகளை யெல்லாம் அந்தோ! இவன் விஷயாந்தரங்களிற் படுவதே! என்று வயிறெரிகிறார்.

எவ்வளவோ பாவங்கள்செய்து பணங்களைத்திரட்டிக் கொணர்ந்து கொடுத்து ஆராதித்தாலும் முகஞ்சிதறப் புடைக்கிற மாதர்களின் முன்றானையையே பின்பற்றி ஓடுகின்றனரேயன்றி ஸௌலபமாய் ஸ்வரூபாநுரூபமான விஷயத்தைச் சிந்தித்து மகிழ்வாரில்லையே என்கிறார்—[தண்டுழாய் மாலை இத்யாதி.] 'எனக்கு ஆடு பலி கொடுக்கவேண்டா; ஊன்வாட உண்ணாது உயிர் காவலிட்டு உடலிற் பிரியாப் புலனைந்தும் நொந்துவாடத் தவஞ்செய்யவேண்டா; நீயும் நானும் ஒன்று, என்று இத்தனை உறவு பண்ணிக்கொண்டு வந்தால் போதும், அவர்களை நான் விடமாட்டேன்' என்ற கருத்துத்தோன்றத் திருத்துழாய் மாலையணிந்து நிற்கிற பிரானைப் பற்றுவாரில்லையே!

தமர்களாய்—'எம்பெருமானுடைய கோஷ்டியிற் சேர்ந்தவர்கள் நாங்கள்' என்றிவ்வளவேயன்றோ அவர்கள் காட்டவேண்டியது. இவ்வளவு ஸ்வரூபஜ்ஞானம் வாய்ந்தவாறே பின்னை அவர்கள் வெறுமனிருக்கமுடியுமோ? பாடியாடும்படியாகும். பிறகு "உனக்கே நாமாட் செய்வோம்" என்று அத்தாணிச்சேவகத்திற்கு அணுகலாகும்; அதிலே ஸகல ரஸங்களும் காணலாகும். இவ்வளவும் பெற்று மகிழவேண்டியவர்கள் "இப்படிப்பட்ட ரஸமொன்று உண்டு" என்றும் நினையாமல் விஷயாந்தரங்களை விரும்பிப் பாழாய்ப் போவதே!

தொண்டுபூண்டு அமுதமுண்ணா—"ஹஸ்த்யத்ரிநாத! தவ தாஸ்யமஹாரஸஜ்ஞ:"—ஹஸ்த்யத்ரிநாத! தவ தாஸ்யமஹாரஸஜ்ஞ:" என்று அறிவுடையார் எம்பெருமானுடைய அடிமையையே ஆராவமுதமாக அறுதியிட்டிருக்க, எச்சில் வாயிலே அமுதமுண்டென்று மயங்கி ஓடுவாரும் சிலரே.

தொழும்பர்—'இவனுக்குமேல் நீசனில்லை' என்னும்படி முதல் வகுப்பில் தேறினவர்; பரம நீசர். 'தொழும்பர்' என்று அடியவர்க்கும் பெயர்.

"[சோறு உகக்குமாறே.] மண்ணிற்காட்டில் சோற்றுக்கு வாசியறிந்து ஜீவிக்கிறபடி எங்ஙனே! நித்யமான ஆத்மவஸ்துவுக்கு பகவத்சேஷத்வமே தாரகமென்று அறியாதவன் அநித்யமான தேஹத்திற்குச் சோறு தாரகமென்று அறிந்து ஜீவிக்கிறானோ? பித்ராதிகள் ஜீவிக்கக்காண்கிற வாஸனைகொண்டு ஜீவிக்கிறானித்தனையிறே; வாசியறியுமவனாகில் ஆத்மாவுக்கு நன்மையெண்ணானோ? ஒன்றிலே விசேஷஜ்ஞானமுண்டாகில் மற்றையதிலும் அறிவுண்டாகாதோ?" என்ற வியாக்கியான ஸ்ரீஸூக்திகளின் போக்யதையைச் சிறிது அநுபவிக்க.

"கரைந்து நைந்து அமுதமுண்ணா" என இயையும். ... (௫)

மறஞ்சுவர் மதிளெடுத்து மறுமைக்கே வெறுமைபூண்டு
புறஞ்சுவ ரோட்டைமாடம் புரளும்போ தறியமாட்டீர்
அறஞ்சுவ ராகிநின்ற வரங்கனார்க் காட்செய்யாதே
புறஞ்சுவர் கோலஞ்செய்து புள்கவ்வக் கிடக்கின்றீரே. (௯)

| | | | |
|---|---|---|---|
| மறம் சுவர் | கொடுமையாகிற சுவரை | அறியமாட்டீர் | அறியமாட்டீர்; |
| மதிள் எடுத்து | மதிளாக எழுப்பியும், | அறம் சுவர் ஆகிநின்ற | தர்மமே ப்ரக்ருதியாக நிற்கிற |
| மறுமைக்கு | ஆமுஷ்மிக பலத்திற்கு | அரங்கனார்க்கு | அழகியமணவாளனுக்கு |
| வெறுமை பூண்டு | ஏழ்மையை மேற்கொண்டும் இருக்கிற நீங்கள் | ஆள் செய்யாதே | அடிமை செய்யாமல் |
| புறம் சுவர் | வெளிச்சுவராய் | புறம் சுவர் | வெளிச்சுவரான உடம்பை |
| ஓட்டை | அநித்யமான | கோலம் செய்து | அலங்கரித்து |
| மாடம் | சரீரமானது | புள் கவ்வ | பறவைகள் கவ்விக்கொள்ளும்படி |
| புரளும்போது | தரையில் விழும் காலத்தை | கிடக்கின்றீரே | கிடக்கின்றீர்களே. |

விஷயங்கள் அற்பமென்றும் அஸ்திரமென்றும் மேற்கூறிய ஆழ்வாரை நோக்கிச் சிலர் "விஷயங்களுக்கு அல்பாஸ்திரத்வம் முதலிய பலதோஷங்களுள்ளனவாயினும் அவற்றை நாங்கள் விடவேணுமென்று நியதியில்லை; ஒரு விஷயத்தில் பூர்ணமான அநுபவத்தைப் பெறுதொழிவோமாயினும் விஷயங்கள் பல உள்ளவாகையால் ஒன்றில் இல்லாத நன்மையை வேறொன்றிலே கூட்டிக்கொண்டு அநுபவிக்கிறோம் போம்" என்று சொல்ல, "அப்படியேயானாலும் அந்த விஷயங்களை அநுபவிக்கக்கூடிய வஸ்து ஸ்திரமாயிருக்கவேணுமே; அவ்விஷயங்களைப்போலவே போக்தாவும் அஸ்திரன்மீடீர்" என்கிறார் இப்பாட்டால்.

இவன் 'தீவழியிற்சென்று அநியாயமாய்க் கெட்டுப்போகிறானே! இவனுக்கு உரிய ஹிதங்களைச் சொல்லி இவனை மீட்போம்' என்று ஸஹஜ காருண்யபராவிகளான சில மஹாநுபாவர் இதஞ்செய்வதற்குக் கிட்டவந்தால் அவர்களை அபதார்த்தமாக நினைத்துத் துச்சமாகப் பேசும்படியான கொடுமையை மறம் என்கிறது. ஹிதஞ்சொல்லவந்த விபீஷணாழ்வானை "[illegible] த்வாம் து திக் குலபாம்ஸநம்" என்றிகழ்ந்த ராவணனோடொத்த குணசாலிகளாய்த்து மறஞ்சுவர் மதிளெடுப்பார். அமாநித்வம் முதலிய ஆத்மகுணங்களைத் தனக்கு அரணாகக் கொள்ளவேண்டியது போய், கொடுமையை அரணாகக் கொள்ளவேண்டும்படியாய்த்தே உங்கள் பாவம்! என்கிறார்.

"[illegible]—பூதபவ்ய பவந்நாத: கேசவ: கேசிஸூதந: ப்ராகாரஸ் ஸர்வவ்ருஷ்ணீநாமாபத்ஸ்வபயதோ ஹரி:' [பாரதம்-ஸபாபர்வம்] என்று அடியவர்க்கு மதிளாகச் சொல்லப்பட்ட எம்பெருமானைவிட்டு மறஞ்சுவரை நீங்கள் மதிளாகப் பற்றினபடி மிகவுமழகியதே!.

இப்படி கொடுமையையே காப்பாகக்கொண்டால் அதனால் பலிப்பது ஆமுஷ்மிகத்திற்கு ஒரு கைம்முதலில்லாமையே யன்றோ; அதனைச் சொல்லுகிறது - மறுமைக்கே வெறுமையூண்டு என்று. சரீரத்திற்குத் தாரகமாயிருப்பதைத் தேடுகிறாப்போல் ஆத்மாவுக்குந் தாரகமாயிருப்பதையும் சிறிது தேடியிருப்பானாகில் ஆமுஷ்மிகபலத்திற்கு அது ஒரு பற்றுசாகும்; அங்ஙனன்றியொழிந்தமையால் இவனுடைய வியாபாரம் ஆமுஷ்மிகத்திற்கு தாரித்ரியத்தை விளைத்துவிட்டதென்க.

'பரலோகத்திலே எமக்கு ஒரு நன்மை கிடையாவிடில் கிடையாதொழிக; பரலோகமென்று ஒன்று உண்டென்பதாகவே நாங்கள் நினைத்திலோம்; இஹலோகத்தில் நாங்கள் எய்தும் நன்மைக்கு ஒரு குறையில்லையே' என்று அவர்கள் சொல்ல, அதனை க்ஷேபிக்கிறார் - புறஞ்சுவரோட்டைமாட மித்யாதியால்.

புறஞ்சுவர் என்கிறது-தேகத்தை. சுவராவது உள்ளேகிடக்கிற வஸ்துவைக் காக்குமது; ஆத்மாவுக்குரிய நன்மைகளை உண்டாக்கி அதனைக் காப்பாற்றுதற்பொருட்டு எம்பெருமானால் தரப்பட்ட (சுவரென்னும்) சரீரத்தைக்கொண்டு அக்காரியத்தைச் செய்யாமல் புறம்பே வியாபரித்தபடியால் புறஞ்சுவர் என்ன வேண்டிற்று. ஓட்டைமாடம் என்றும் இச்சரீரத்திற்கே நாமாந்தரம் போலும். ஒரு ஓட்டைவீடானது 'அப்போது விழுந்தது, இப்போது விழுந்தது' என்னும்படி அஸ்திரமாயிருக்குமாபோலே இச்சரீரமும் 'இப்போதோ அப்போதோ' என்னும்படி நச்வரமாயிருக்குமாறு காண்க.

புரளும்போது அறியமாட்டீர்—இத்தகைய சரீரம் எப்போது கீழேவிழப்போகிறதென்று கேட்டால் அந்த ஸமயத்தை நீங்கள் அறிந்துசொல்ல வல்லீரல்லீர்; இன்று விழுந்தாலும் விழும்; நாளைக்கு விழுந்தாலும் விழும்; ஆகையாலே இந்த சரீரத்தை போக்தாவாக மாறுபட நினைத்து நீங்கள் பரக்க வியாபாரங்கள் செய்தாலும், இது மின்னின்னிலையிலதாதலால் இதை நம்பி ஒன்றுஞ் செய்யக்கூடியதாயில்லையே என்கை.

அன்றியே, இச்சரீரம் புரளுங்காலத்திலே உங்களுக்கு அறிவு நடையாடாதாகையால் "𑌪𑍍𑌰𑌾𑌣𑌪𑍍𑌰𑌯𑌾𑌣𑌸𑌮𑌯𑍇 𑌕𑌫𑌵𑌾𑌤𑌪𑌿𑌤𑍍𑌤𑍈𑌃 𑌕𑌣𑍍𑌠𑌾𑌵𑌰𑍋𑌧𑌨𑌵𑌿𑌧𑍌 𑌸𑍍𑌮𑌰𑌣𑌂 𑌕𑍁𑌤𑌸𑍍𑌤𑍇—ப்ராணப்ரயாணஸமயே கபவாதபித்தை: கண்டாவரோதநவிதௌ ஸ்மரணம் குதஸ்தே" [முகுந்தமாலை] என்றபடி அப்போது உங்களால் ஒன்றும் நன்மை தேடிக்கொள்ளமுடியாது; "அப்போதைக்கிப்போதே சொல்லிவைத்தேன்" என்றபடி செய்யுங்கள் என்று உபதேசிக்கிறாரென்றுங் கொள்ளலாம்.

அறஞ் சுவராகி நின்ற—தர்மமாகிற சுவர் வடிவெடுத்து வந்தாற்போலிராநின்ற; "𑌧𑌰𑍍𑌮𑌸𑌂𑌸𑍍𑌥𑌾𑌪𑌨𑌾𑌰𑍍𑌥𑌾𑌯 𑌸𑌮𑍍𑌭𑌵𑌾𑌮𑌿 𑌯𑍁𑌗𑍇 𑌯𑍁𑌗𑍇—தர்மஸம்ஸ்தாபநார்த்தாய ஸம்பவாமி யுகேயுகே" என்ற வசனப்படியே தர்மத்திற்குச் சுவராய் [ரக்ஷகராய்] நின்ற என்றுமாம்.

புறஞ்சுவர் கோலஞ்செய்து—“[illegible]—அஸந்நேவ ஸ பவதி, அஸத் ப்ரஹ்மேதி வேதசேத்” என்ற சுருதிப்படி ஆத்மாவானது பாழ்த்துக்கிடக்க, அவ்வாத்மாவை “[illegible]—ஸந்தமேநம் ததோ விது:” என்னும்படி ஸத்தாக்குகிறவழியிலே ஒரு முயற்சி செய்யாமல் இன்னடிசிலுண்பதும் பொன்னுடைமைபூண்பதும் பூந்துகில் சாத்துவதுமாய் நீங்கள் சரீரத்திற்குச் செய்கிற கோலங்கள் சவாலங்காரத்தோடும் சிதவாலங்காரத்தோடும் ஒக்குமென்றவாறு.

“புத்தகங்களை அகவாய்ப் பெருச்சாளி அறுத்துக்கிடக்க, தெருவுபாட்டை தாளும் துரும்பும் வைத்து அலங்கரிக்குமாபோலேயாய்த்து உடம்பைப் பேணுகை” என்பர் பெரியவாச்சான்பிள்ளை. [புத்தகம்—புதியவீடு]

“புள் உண்ணக் கிடக்கின்றீரே” என்னுமல் “கவ்வ” என்றதன் கருத்து—நன்றியறிவற்றவனுடைய மாமிசத்தைப் பறவைகளும் தின்னமாட்டா என்பது ஸித்தாந்தமாதலால், மஹோபகாரகனான எம்பெருமானிடத்து நன்றியறிவற்ற உங்களுடைய மாமிஸத்தைப் பறவைகளும் தின்னமாட்டா; கவ்வினவுடனே ‘இது க்ருதக்நமாம்ஸம்’ என்று எறிந்துவிடுமென்பதாம். (சு)

புலையற மாகிநின்ற புத்தொடு சமணமெல்லாம்
கலையறக் கற்றமாந்தர் காண்பரோ கேட்பரோதாம்
தலையறுப் புண்டும்சாகேன் சத்தியங் காண்மினையா
சிலையினா லிலங்கைசெற்ற தேவனே தேவனாவான். (எ)

| | | | |
|---|---|---|---|
| சிலை | சாஸ்திரங்களை | சாகேன் | நான் சாகமாட்டேன்; |
| அற கற்ற மாந்தர் | நன்றாக ஓதின மனிதர் | சத்தியம் | இது ஸத்தியம்; |
| புலை அறம் ஆகிநின்ற | நீச தர்மமாயிராநின்ற | ஐயா | ஸ்வாமிகளே! |
| புத்தொடு சமணம் எல்லாம் | பௌத்தமதம் க்ஷபணமதம் முதலிய எல்லாமதங்களையும் | காண்மின் | (ப்ரத்யக்ஷமாகக்காட்டுகிறேன்) பாருங்கள்; |
| காண்பரோ | நெஞ்சாலேதான் ஆராய்வார்களோ? | சிலையினால் | வில்லாலே |
| கேட்பரோ | காதுகொடுத்துத்தான் கேட்பார்களோ? (அதுகிற்க) | இலங்கை செற்ற | இலங்கையை நாசஞ்செய்த |
| தலை அறுப்புண்டும் | என் தலையானது அறுக்கப்பட்டாலும் | தேவனே | எம்பெருமானே |
| | | தேவன் ஆவான் | ஸர்வேச்வரனெனப்படுவான். |

‘தொண்டுபூண்டமுதமுண்ணுத்தொழும்பர்’ என்றும், “புள் கவ்வக்கிடக்கின்றீரே” என்றும் எங்களை இகழ்ந்துரைப்பதிற் பயனென்? ஸம்ஸாரத்தின் இயல்பு இப்படியிராநின்றது; அன்றியும் ‘தொண்டுபூண்டு அமுதமுண்போ

மென்று பார்த்தாலும் எந்தத்தேவனை வணங்கி வழிபடுவதென்று தெரியவில்லை; “வணங்குந்துறைகள் பலபலவாக்கி, மதிவிகற்பால் பிணங்கும் சமயம் பலபலவாக்கி, அவையவை தோறு அணங்கும் பலபலவாக்கி” (திருவிருத்தம்) என்றபடி உலகில் பல மதபேதங்களும் தேவதாபேதங்களும் உண்டாயிருக்கின்றன; இன்ன தேவதையைத்தான் வணங்கவேணுமென்று விளங்கவில்லை; இனி சாஸ்திரங்களை ஆராய்ந்து அறுதியிடுவோமென்று பார்த்தாலோ, அது ஒருமுகமாயில்லை; “ஏகோ ஹவை நாராயண ஆஸீத்—ஏகோ ஹ வை நாராயண ஆஸீத்” என்று ஒருபக்கத்திலே ஓதிவைத்து; மற்றொரு பக்கத்திலே “ந ஸந்ந சாஸச்சிவ ஏவ கேவல:—ந ஸந்நசாஸத் சிவஏவ கேவல:” என்றோதுகின்றது; மற்றும் பரஸ்பர வ்யாஹதமாகப் பல பேச்சுக்கள் காணப்படுகின்றன; ஆனபின்பு நாங்கள் பரதேவதா நிச்சயம்பண்ண மாட்டாமையாலே ஸம்ஸாரத்திலே ஆழ்கிறோம்; எங்கள் மீது குற்றமென்?” என்று சில ஸம்ஸாரிகள் கூற, அவர்களைத் தெளிவிக்க விரும்பிய ஆழ்வார், இவர்களுக்கு நாம் சாஸ்த்ரார்த்தங்களைப் பரக்க உபபாதித்து இன்னதுதான் பரதத்வமென்று சொல்லக்கடவோமல்லோம்; அங்ஙனாகில் “மதிதௌர்ப்பல்யாத் ந மததௌர்ப்பல்யம்—மதிதௌர்ப்பல்யாத் ந மததௌர்ப்பல்யம்” என்று உடனே உரைத்து நம்மை வாய்மூடப்பண்ணி விடுவார்கள்; “சாஸ்த்ரஜ்ஞாநம் பஹுக்லேசம் புத்தேச்சலநகாரணம்। உபதேசாத்தரிம் புத்த்வா விரமேத் ஸர்வகர்மஸு—சாஸ்த்ரஜ்ஞாநம் பஹுக்லேசம் புத்தேச் சலநகாரணம்—உபதேசாத் ஹரிம் புத்த்வா விரமேத் ஸர்வகர்மஸு” என்றபடி இவர்கள் நம்முபதேசத்தையே பரமார்த்தமாகக் கைக்கொள்ளுமவர்களாயிருந்தாலும் குறையில்லை; அப்படிப்பட்டவர்களுமல்லர் இவர்கள்; ‘இப்பாவிகள் எக்கேடாகிலும் கெடுக’ என்று ஒதுங்கியிருக்கவல்ல மனக்கொடுமையும் நமக்கு இல்லை; ஆனபின்பு இவர்களும் தெளிந்து நாமும் மகிழ்ந்தோமாகிற உபாயம் சபதங் கூறுகையேயாம் என நிச்சயித்து அங்ஙன் செய்கிறார் இப்பாட்டில்.

“தற்கச்சமணரும் சாக்கியப் பேய்களும் தாழ்சடையோன் சொற்கற்ற சோம்பரும் சூனிய வாதரும், நான்மறையும் நிற்கக் குறும்புசெய் நீசரும்” என்றாற்போலேயுள்ள அதிநீசமான மதங்களை விவேகிகள் நெஞ்சாலும் நினையார், காதாலும் கேளார் என்று ஆழ்வார் சொன்னவுடனே “நீர் இப்படி சொல்வதற்கு என்ன ஆதாரம்?” என்று எதிரிகள் கேட்க; குடப்பாம்பிற் கையிட்டுக் கூறுவாரைப்போலே “நான் சொல்வதில் உங்களுக்கு அவிச்வாஸமிருந்தால் ஒரு ப்ரத்யக்ஷப்ரமாணம் காட்டுகின்றேன் பாருங்கள்; இந்த வார்த்தையை நான் சொல்லிக்கொண்டே என் கழுத்தில் கத்தியை வீசுகிறேன்; என் வார்த்தை பொய்யாயின் தலை அறப்புண்டு நான் செத்துப்போவேன்; மெய்யாகில் அதனால் ஒரு விகாரமுமற்றிருப்பேன்; ஐயமுண்டேல் கண்டு கொண்மின்” என்று கத்தியை எடுக்கத் துணிகிறபடி.

இங்ஙனே இவர் பெருத்த ஆக்ரஹத்தோடு கண்கள் சிவக்க நாப்பிதுங்கப் பேசினபடியைக்கண்ட அவர்கள் "ஸ்வாமிந்! தேவர் கத்தியையும் எடுக்க வேண்டா; தலையையும் அறுத்துக்கொள்ளவேண்டா; இவ்வளவு பேச்சே அமை யும் எங்கள் விச்வாஸத்திற்கு; இனி ஆச்ரயிக்கத்தக்க தைவம் இன்னதென் பதை அருளிச்செய்யவேணும்" என்று ப்ரார்த்திக்க, "சிலையினாலிலங்கை செற்ற தேவனே தேவனாவான்" என்கிறார்.

தேவதைகள் தங்களுடைய அதிகாரத்தையும் யோக்யதையையும் அறிந்து கொள்ளாமல் மனம்போனபடியெல்லாம் இராவணனுக்கு வரங்கொடுத்துவிட்டு, பின்னைத் தங்கள் குடியிருப்பு இழக்கும்படி அவனாலே நெருக்குண்டு போக்கடி யற்றவனவிலே திருவடிகளிலே வந்து விழுவர்கள். "பேணலமில்லாவரக்கர் முந் நீர பெரும்பதிவாய் நீணகர் நீளெரிவைத் தருளாயென்று நின்னை விண்ணோர் தாள் நிலம் தோய்ந்து தொழுவர்" என்றபடியே. பிறகு அத்தேவர்களின் காரி யஞ்செய்கை எம்பெருமானுக்கே பணியிறே. ப்ரஹ்மாதிகளின் வரபலத்தாலே பூண்கட்டின லங்கையை வில்லாலே அழியச் செய்தருள்வன். அப்பெருமானே யாய்த்து உங்கள் விரோதியையும் போக்கி ரக்ஷிக்க வல்லவனென்கிறார்.

புத்தோடு—புத்தமென்ற வடசொல் புத்து எனத் திரிந்தது. சமணம்—க்ஷபணகருடைய மதம். கலையறக்கற்ற மாந்தர்—கூரத்தாழ்வான் போல் வார். "ச்ருதிஸ்ம்ருதீதிஹாஸங்களில் நிலைநின்றவர்களாய் வேததாத்பர்யம் கைப்பட்டவர்கள்; அவர்களாகிறார் - கூரத்தாழ்வான் போல்வாரிறே"! என்பர் பெரியவாச்சான்பிள்ளை.

"காண்பரோ கேட்பரோதான்" என்றவிடத்தில் ஓர் ஐதிஹ்யம் அருளிச் செய்வர்:—கூரத்தாழ்வான் "இஷ்டஸித்தி" என்கிற ஒரு புறமதச்சுவடி வாசித்துக்கொண்டிருந்த சிலரோடே கூடிச் சிறிது போதுபோக்கி எம்பெரு மானார் ஸந்நிதிக்கு விளம்பித்துவர, "என் இத்தனை விளம்பம்?" என்று உடை யவர் கேட்டருள, ஆழ்வானும் காரணத்தை உள்ளபடியே உரைக்க, உடையவர் "ஹா ஹா! 'கலையறக்கற்ற மாந்தர் காண்பரோ கேட்பரோதான்' என்ற அரு ளிச்செயல் என்னாயிற்று?" என்று புநஸ்ஸ்நாநம் செய்வித்தருளி ஸ்ரீபாததூளி யும் இடுவித்தருளினாராம்.

தலையறுப்புண்டே—ஸத்யமான வார்த்தையை நான் சொல்லிக்கொண்டே கழுத்தில் கத்தியை எறிந்தேனாகில் தலை அறுபடமாட்டாது ஸத்யம்; ஒருகால் தலை அறுப்புண்டாலும் உயிர் போகாதென்பது புநஸ்ஸத்யம்

சாவேன், சாகேன் என்பன பாடபேதங்கள்.

[சிலையினாலிலங்கை செற்ற.] ராமாவதாரத்தில் ஸீதாபிராட்டியை அப ஹரித்துச்சென்ற இராவணனைக் கிழங்கோடு கொலைசெய்த வரலாறு ப்ர ஸித்தம். ... ... ... ... ... (எ)

வெறுப்போடு சமணர்முண்டர் விதியில்சாக் கியர்கள்நின்பால்
பொறுப்பரி யனகள்பேசிற் போவதே நோயதாகிக்
குறிப்பெனக் கடையுமாகில் கூடுமேல் தலையையாங்கே
அறுப்பதே கருமங்கண்டா யரங்கமா நகருளானே. (அ)

அரங்கமா நகருளானே!—;

வெறுப்போடு — (பகவத் விஷயத்தைக் கேட்கவும் பொறாத) வெறுப்போடுகூடிய
சமணர் — க்ஷபணர்களும்
முண்டர் — சைவர்களும்
விதி இல் — பாக்யஹீனரான
சாக்கியர்கள் — பௌத்தர்களும்
நின்பால் — உன் விஷயத்திலே
பொறுப்பு அரியனகள் — பொறுக்கமுடியாத சில வார்த்தைகளை
பேசில் — சொல்லுவார்களாகில்
அதுவே நோய் ஆகி — அந்த நிந்தைகளைக் கேட்டதே வியாதியாய்
போவது — முடிந்து போவது (உத்தமம்; அங்ஙனன்றியே)
எனக்கு — (பகவத் விரோதிகளின் ஸத்தையையும் பொறாத) எனக்கு
குறிப்பு அடையும் ஆகில் — இலக்கு வாய்க்குமாகில் (அதற்குமேல்)
கூடுமேல் — (எனக்கு சக்தியும்) கூடுமாகில்
ஆங்கே — உன்னை நிந்தித்த அவ்விடத்திலேயே
தலையை அறுப்பதே — அவன் தலையை அறுத்துத் தள்ளுகையே
கருமம் கண்டாய் — செய்யத் தக்கதுகாண்.

சக்ரவர்த்தி திருமகனே ஆச்ரயிக்கத்தக்க தைவமென்று கீழ்க்கூறிய விடத்தும் அவன்பாலுள்ள நற்குண ஸம்ருத்தியை நச்சி அவனைச் சடக்கெனப்பற்றாமல் ஸம்ஸாரிகள் அந்யபரராயிருக்குமாற்றைக்கண்ட ஆழ்வார் 'நாம் இவ்வளவு முட்டிக்கொள்ளச் செய்தேயும் இவர்கள் நெஞ்சில் சிறிதும் பசையுண்டாகாதொழிந்தது இவர்கட்குப் புறச்சமயிகளோடுண்டான நெடுநாளைய துர்வாஸனையாலேயாகும்; ஆனபின்பு அப்படிப்பட்ட பகவந்நிந்தை பண்ணுகிற புறச்சமயிகளை உயிர்மாய்த்தாலன்றி நமது உபதேசம் பயன்பெறமாட்டாதெனத் துணிந்து தன் கருத்தை நம்பெருமான் திருமுன்பே விண்ணப்பஞ்செய்கிறார்.

வெறுப்போடு—ஒரு காரணத்தை முன்னிட்டன்றியே நிஷ்காரணமாக எம்பெருமானுடைய பெருமை என்றால் சீசீயென்று திரஸ்கரிக்கையாகிற வெறுப்போடுகூடிய புறச்சமயிகள், ஸாத்விகர் காது கொடுத்துக் கேட்கப் பொறாத உன் விஷயமான தூஷணங்களைப் பேசும்போது அப்பேச்சுக்கள் ஒரு ஸாத்விகன் காதில் விழுந்தால், அவன்றான் மெய்யே ஸாத்விகனாகில் அந்த க்ஷணத்திலேயே தன்னுடைய உயிர் துறக்க வேணும் என்கிறார்—முன்னிரண்டடிகளால். உயிர் துறப்பதற்கு நோய் முதலிய சில வ்யாஜங்கள் நேரவேண்டுமே என்று சிலர் நினைக்கக்கூடுமென்றெண்ணி "போவதே நோயதாகி" என்கிறார். பகவந்நிந்தையைக் கேட்பதற்கு மேற்பட்ட நோய்கூட உலகத்திலுண்டோ? என்பது கருத்து.

விஷ்ணுத்வேஷிகள் சொல்லுகிற தூஷணங்களை அநுவதிக்கவேண்டுமானால் அவற்றைத் தாம் முன்னம் நெஞ்சால்நினைத்தாகவேண்டுமாதலால் அங்ஙன் நினைப்பதையும் கொடிய பாவமாகக்கருதி "பொறுப்பரியனகள்" என்று ஸமுதாயமாகச் சொல்லுகிறார்.

"சமணர்முண்டர்" என்பதை உம்மைத்தொகையாகக் கொள்ளாமல், சமணராகிய முண்டர் என்றும் உரைப்ப.

விதியில் = "𑌦𑍈𑌵𑌂 𑌦𑌿𑌷𑍍𑌟𑌂 𑌭𑌾𑌗𑌧𑍇𑌯𑌂 𑌭𑌾𑌗𑍍𑌯𑌂 𑌸𑍍𑌤𑍍𑌰𑍀 𑌨𑌿𑌯𑌤𑌿𑌰𑍍𑌵𑌿𑌧𑌿𑌃—தைவம் திஷ்டம் பாகதேயம் பாக்யம் ஸ்த்ரீ நியதிர் விதி:" என்ற அமரகோசத்தின் படி-விதியாவது-பாக்யம்,-அத்ருஷ்டம். "அன்பாக்கியேத்தி அடிமைப்பட்டேனுனக்கு, என்பாக்கியத்தாலினி" என்றபடி எம்பெருமான் பெருமையைப் பேணுவதற்கு எவ்வளவோ அத்ருஷ்டம் வேண்டுமாதலால் அப்படிப்பட்ட அத்ருஷ்டமற்றவர்கள் சாக்கியர் என்கிறார்.

"போவதே" என்றவிடத்துள்ள ஏகாரத்தை அது என்பதோடுகூட்டி "அதுவே நோயாகிப் போவது" என உரைக்கப்பட்டது. எம்பெருமானுக்கு ஒரு அவத்யம் விளையக்கண்டால் தன்னுடையே உயிரைமாய்த்துக்கொள்ளுதற்கிடான உறுதி, பிள்ளை திருநறையூரரையர் போல்வாரான சில பெரியார்க்கே உள்ளதாம். [ஸ்ரீவசநபூஷணத்தில் அது காண்க.]

மஹாபலியானவன் ஒருநாள் ப்ரஹ்லாதாழ்வானிடத்திற்சென்று "சில காலமாக எனக்கு ராஜ்யலக்ஷ்மி குறைந்து வாராநின்றது; இதற்குக் காரணம் ஏதுவாயிருக்கக்கூடும்?" என்று கேட்க; ப்ரஹ்லாதன் "நீ அசுரர்கட்காகத் தேவர்களை மிகவும் நெருக்கினாய்; அவர்கள் திருப்பாற்கடலிலே சென்று பெருமானை அடிபணிய, அவர்களை வெற்றிபெறுவித்தற்பொருட்டு எம்பெருமான் அதிதி வயிற்றிலேவந்து புகுந்தருளினான்; கெடுவாய்! உன் செல்வம் முடிந்தது காண்" என்று சொல்ல; அது கேட்டவுடனே மாவலி பகவானைப்பற்றிச் சில தூஷணோக்திகளைச் சொல்ல; ப்ரஹ்லாதன் அது பொறாமல் "கெடுவாய்! என் முன்னே எம்பெருமானை நிந்திக்கின்றாய்; என் தலையை அறுத்தாயாகில் எனக்குப் பெருநன்றி செய்தவனாவாய்" என்றானாம்.

"போவதே நோயதாகி" என்பதற்கு வேறு வகையாகவும் பொருள் கூறலாம். "𑌗𑍁𑌰𑍋𑌰𑍍𑌯𑌤𑍍𑌰 𑌪𑌰𑍀𑌵𑌾𑌦𑍋 𑌨𑌿𑌨𑍍𑌦𑌾 𑌵𑌾𑌪𑌿 𑌪𑍍𑌰𑌵𑌰𑍍𑌤𑌤𑍇, 𑌕𑌰𑍍𑌣𑍌 𑌤𑌤𑍍𑌰 𑌪𑌿𑌧𑌾𑌤𑌵𑍍𑌯𑍌 𑌗𑌨𑍍𑌤𑌵𑍍𑌯𑌂 𑌵𑌾 𑌤𑌤𑍋𑌽𑌨𑍍𑌯𑌤𑌃॥" [பெரியோரைப்பற்றி நிந்தை நடக்குமிடத்தில் காதுகளை மூடிக்கொள்வதாவது, சடக்கென அப்பால் செல்வதாவது செய்யவேணும்] என்ற சாஸ்திரப்படி விலகிச்செல்வதென்று என்கிறாராகவுமாம்.

தூஷணை கேட்கப்பொறாமல் முடிந்துபோனாலும் விலகிப்போனாலும் தூஷித்தவனுக்கு என்ன பிராயச்சித்தம் செய்ததாயிற்றென்று ஒரு கேள்வி பிறக்கக்கூடுமாதலால், அவ்விஷயத்தில் தம்ஸித்தாந்தத்தை அருளிச்செய்கிறார்—குறிப்பெனக்கு இத்யாதியால்.

குறிப்பு—லக்ஷ்யம்; அதாவது தூஷித்த பேர்வழி. அவன் தூஷித்து விட்டு ஓடிப்போய்விடாமல் என் முன்னே நிற்பானாகில் என்றபடி கூடுமேல்—அவன் முன்னே நின்று கொண்டிருந்தாலும் அவனை அஞ்சாது கொலைசெய்யும்படியான வல்லமை தனக்கு வேணுமே; தாம் ஒருவனைக் கொல்ல முயன்று அவனால் தாம் கொலையுண்பாருமுண்டே; அங்ஙனன்றி, நினைத்தபடி செய்து நிறைவேற்றவல்ல வல்லமையும் வாய்க்குமாகில் என்றபடி. "குறிப்பினுக்கு" என்பது சிலர்பாடம்.

மரணதண்டனையானது ஒரு கொலைசெய்தவர்களுக்குச் ஶிக்ஷையாக அரசாங்கத்தாரால் விதிக்கப்பட்டிருக்கிறதேயொழிய, பகவந்நிந்தை பண்ணினவர்களுக்குக் கொலையை ஶிக்ஷையாக எங்கும் விதிக்கவில்லை; காமகாரத்தாலே விதியை மீறிக் கொலைசெய்யில் தமக்கு அநர்த்தமேயன்றோ பலிக்கக்கூடுமென்று ஶங்கித்துக் கூடுமேல் என்கிறார்; அதாவது- அரசாங்கத்தாரும் நமது ஸித்தாந்தத்திற்கு உடன்படக்கூடுமேல் என்றபடி என்பதாக இக்காலத்தோர் பொருள் கூறுப.

கருமம்—'கர்ம' என்ற வடசொல் திரிபு. ... ... (௮)

மற்றுமோர் தெய்வமுண்டே மதியிலா மானிடங்காள்
உற்றபோ தன்றிநீங்க ளொருவனென் றுணரமாட்டீர்
அற்றமே லொன்றறியீ ரவனல்லால் தெய்வமில்லை
கற்றினம் மேய்த்தவெந்தை கழலிணை பணிமினீரே. (௯)

மதி இலா — தத்வஜ்ஞானமில்லாத
மானிடங்காள் — மனிதர்களே!
மற்றும் — (நான் சொல்லுகிறவனைத்) தவிரவும்
ஓர் தெய்வம் — (சரணமாக அடையக் கூடிய வேறு) ஒரு தெய்வம்
உண்டே — உண்டோ? [இல்லை]
நீங்கள் — நீங்கள்
உற்ற போது அன்றி — (சரணமடைந்த அந்த க்ஷுத்ர தேவர்கட்கு) ஒரு ஆபத்து நேர்ந்த காலத்திலல்லாமல் (மற்றைக் காலத்தில்)
ஒருவன் என்று — (நான் சொல்லுகிற இவன்) ஒருவனே கடவுள் என்பதை
உணர மாட்டீர் — அறியமாட்டீர்கள்;

(நீங்கள் இப்படி அறியாமைக்குக் காரணமென்னவெனில்; வேதத்திலே)

மேல் — (பதப்பொருளுக்கு) மேற்பட்ட
அற்றம் — மறைபொருளை (தாத்பரியத்தை)
ஒன்று அறியீர் — சிறிதும் அறியமாட்டீர்கள்;

(இனி முடிவுப்பொருளை நீங்கள் உணருமாறு கூறுவேன்;)

அவன் அல்லால் — அந்த எம்பெருமான் தவிர
தெய்வம் இல்லை — (சரணமடையக்கூடிய) தெய்வம் (வேறொன்று) இல்லை; (ஆகையால்)

| | | | |
|---|---|---|---|
| கன்று இனம் மேய்த்த எந்தை | கன்றுகளின் கூட்டங்களை (மிக்க உகப்போடு) மேய்த்துவந்த எமது ஸ்வாமியான ஸ்ரீகிருஷ்ணனுடைய | கழல் இணை | இரண்டு திருவடிகளையும் |
| | | நீர் பணிமின் | நீங்கள் சரணமாகப் பற்றுங்கள். |

ஸம்ஸாரிகள் ஆழ்வார் பக்கலிலே வந்து "நாங்கள் பாஹ்யமதங்களில் ருசியாலே உம்முடைய எம்பெருமானை ஆச்ரயியா திருந்தோமல்லோம்; நீர் இராமபிரானைப் பற்றச் சொன்னீர்; அவனாகிறான் வாசலும் நடையுமாய் எங்களுக்குக் கிட்டவொண்ணாதாயிருப்பானொருவனாய்த்தே!; கிட்டினாலும் வஸிஷ்டாதிகள் அருகே இருந்து 'யோக்யரோ? அயோக்யரோ?' என்று ஆராயா நிற்பர்கள்; ஆகையாலே பரதசைக்கும் ராமாவதாரத்துக்கும் ஒரு வாசியில்லை; எங்களுடைய அயோக்யதையை ஆராயமாட்டாதானொருவன் பற்றக்கூடியவனாயிருப்பானாகில் அவனைக் காட்டித்தாரும்" என்று சொல்ல, ஆகில் சிறுமை பெருமைபாராதே நானே மேலவிழுந்து விஷயீகரிக்கிற கண்ணபிரானைப் பற்றுங்கோள் என்கிறார் - இப்பாட்டால்.

அன்றியே; "வேதங்களில் பிரமன் சிவன் அக்நி இந்திரன் என்றிவை முதலான தேவதாந்தரங்களின் பெருமை கூறப்பட்டிருக்கிறதேயன்றி உமது, பெருமானுடைய மஹத்துவம் எங்கும் கூறப்பட்டிருப்பதாகத் தெரியவில்லை; ஆகையாலே நாங்கள் உமது வழியைச் சாருகின்றிலோம்" என்று சிலர் வந்து கூற, அவர்களைநோக்கி விடையளிக்கிறார் என்றுங்கொள்ளலாம்.

தேவர்கள் பலரையும் பற்றிக் கூறுகிற வேதத்தின் உட்பொருளை நுட்பமாக ஆராய்ந்து அறியுந்திறமையில்லாமையால் நீங்கள் தேவதாந்தரங்களைப் பற்றுகின்றீர்கள்; 'ஒருகுறையும் வாராமல் உன்னைப் பாதுகாக்கிறேன்' என்று ப்ரதிஜ்ஞை பண்ணி பாணாஸுரனது வாசலிலே பரிவாரத்தோடு பாதுகாவலாயிருந்த சிவன் அந்த வாணாஸுரனை எதிர்த்துவந்த ஸ்ரீகிருஷ்ணனோடு போர் செய்யமாட்டாமல் தோற்று ஓடினபோது அந்தச் சிவனுடைய வலியின்மையை அந்த வாணன் கண்டறிந்ததுபோல, நீங்களும் சரணமாகப் பற்றியிருக்கிற தேவதாந்தரங்களுக்கு ஏதேனும் ஆபத்து சேர்ந்தால்தான் அத்தெய்வங்களின் பலஹீநத்வத்தைக் கண்டறிவீர்கள்: நீங்கள் இப்படி பரமாத்மாவைத் தவிர்த்து இதர தேவதைகளைப் பற்றுதற்குக்காரணம் நுமக்குப்பகுத்தறிவு இல்லாமையே. உண்மையில் ஸ்ரீகிருஷ்ணனைத்தவிர வேறு தெய்வமில்லை. ஆகையால் நீங்கள் அந்த ஸ்ரீக்ருஷ்ணபரமாத்மாவையே சரணமாகப் பற்றுங்களென்று உபதேசிக்கின்றனரென்க.

பெறுதற்கரிய மநுஷ்யஜன்மத்தைப் பெற்றிருந்தும் ஈடேறுதற்கு உரியதான பரமாத்மாவைப்பற்றிய தத்வஞானம் இல்லாமையால் எடுத்த ஜன்மமே வீணாய்விட்டதென்று குறிப்பிக்கும்படி "மதியிலாமானிடங்காள்" என்றார்.

"ஒண்டாமரையாள் கேள்வனொருவனையே நோக்குமுணர்வு" என்றபடி பரமாத்மாவைப்பற்றிய அறிவே அறிவெனப்படுமாதலால் மற்றை உலகவறிவு

இருந்தும் பரமாத்மாவைப்பற்றிய அறிவைப்பெறாத இவர்கள் மதியிலா மானிடங்களாயினர்; இதைப்பற்றியே "மானிடர்காள்!" என உயர்திணைவாய்பாட்டாற் கூறாது "மானிடங்காள்" என அஃறிணைவாய்பாட்டாற் கூறியதும். இது - இழிப்பினால் உயர்திணையில் அஃறிணைவந்த திணைவழுவமைதி

உற்றபோதன்றி உணரமாட்டீர்—உற்றபோதே நீங்கள் அவனொருவனை தெய்வமென்று உணர்வீர் என † இரண்டு எதிர்மறைகள் ஒருடன்பாட்டுப் பொருளை வற்புறுத்தின; "அவனல்லால் தெய்வமில்லை" என்றவிடத்தும் இப்படியே.

அற்றமேலொன்றறியீர்—வேதத்தில் பலவிடங்களிலும் தேவதாந்தரங்களைப் பற்றி (எம்பெருமானைப் போலவே) சிறப்பித்துக்கூறியிருப்பதுகண்டு அவற்றிற்கு ஆபாதப்ரதீதியில் (—மேல் நோக்கில்) தோன்றுகிற பொருளையே கருத்தாக எண்ணி "நாராயணபரா வேதா:—நாராயணபரா வேதா:" என்றபடி வேதங்கள் முழுவதும் ஸ்ரீமந்நாராயணனையே பரம்பொருளாகக் கருத்துப் பொருளாற் கூறுவன என்பதை உய்த்துணராமலிருக்கின்றீ ரென்றவாறு.

அற்றம்—மறைபொருள்; உட்கருத்து: அறு—பகுதி. "அவனல்லால் தெய்வமில்லை" என்று - தேவதாந்தரங்கள் இல்லை என மறுக்கின்றாரல்லர்; எம்பெருமானுக்கு சரீரமாகப் பலதேவதைகள் உள என்பதில் ஆக்ஷேபமில்லை; சரணமாகப் பற்றத்தக்க தெய்வம் வேறில்லை என்றுய்த்துச் சொல்லுவது.

"கற்றினம் மேய்த்த" என்ற அடைமொழியினால் எம்பெருமானது ஸௌலப்யத்தை வெளியிட்டவாறு. எந்தை - பரமஸ்வாமி. கழல் - வீரர் காலில் அணியும் வடம்; தானியாகுபெயராய்ப் பாதத்தை உணர்த்திற்று.

இரண்டு மூன்றாவது அடிகட்கு - உங்களுக்கு ஏதேனும் துன்பம் வந்தால் தான் தெய்வம் ஒன்று உண்டென்று நீங்கள் நினைக்கிறீர்கள்; மற்றைச் சமயங்களில் நாஸ்திக்யம் தவிர வேறொன்றை அறிவதில்லையென்று சிலர் பொருள் கூறுவர்: அற்றம் - அறுதல், கடவுள் இல்லையாதல்; நாஸ்திக்யம். இப்பொருளில், "மற்றுமோர் தெய்வமுண்டே" "அவனல்லால் தெய்வமில்லை" என்ற தொடர்கட்குப் பொருத்தமில்லை. இப்பொருள் வியாகரணத்திற்கும் ஒத்ததல்ல.

"அவனையல்லால்" என்பது அபபாடம்.

[கற்றினம் மேய்த்த] கண்ணபிரான்; * சாதுசனத்தை நலியுங் கஞ்சனைச் சாதிப்பதற்காக வஸுதேவ தேவகிகட்கு மகனாகப்பிறந்து * ஓரிரவிலொருத்தி மகனா யொளித்து வந்து திருவாய்ப்பாடியில் வளர்ந்து ஆநிரைமேய்த்த வரலாறு ப்ரஸித்தம் ... ... ... ... ... ... (க)

† அன்றி, மாட்டீர் என்பன.

நாட்டினான் தெய்வமெங்கும் நல்லதோ ரருள்தன்னாலே
காட்டினான் திருவரங்க முய்பவர்க் குய்யும்வண்ணம்
கேட்டிரே நம்பிமீர்காள் கெருடவாகனனும் நிற்கச்
சேட்டைதன் மடியகத்துச் செல்வம்பார்த் திருக்கின்றீரே. (௧௦)

எங்கும் — எல்லாவிடங்களிலும்
தெய்வம் — (அம்மன் பிடாரி முதலான க்ஷுத்ர) தேவதைகளை
நாட்டினான் — (ராஜஸர்க்கும் தாமஸர்க்கும் ஆச்ரயிக்கலாம்படி எம்பெருமான்) நிலைநிறுத்தி யிருக்கிறான்;
உய்பவர்க்கு — உஜ்ஜீவிக்க விரும்புமவர்கட்கு
உய்யும் வண்ணம் — உஜ்ஜீவிக்கலாம்படி
நல்லது ஓர் அருள் தன்னாலே — தனது ஒப்பற்றதொரு க்ருபையினால்
திரு அரங்கம் — அரங்கமாநகரை

காட்டினான் — காண்பித்தருளினான்;
நம்பிமீர்காள் — 'நமக்கு ஒன்றும் குறை யில்லை' என்று நினைத் திருப்பவர்களே!
கேட்டிரே — (நான் சொல்வதைக்) கேட்டீர்களா?
கெருட வாகநன் நிற்கவும் — கருடனை வாஹநமாகவுடைய பெருமான் விளங்கா நிற்கச்செய்தேயும்
(தேவதாந்தரங்களைப் பற்றுகிற நீங்கள்)
சேட்டை தன் மடியகத்து — மூதேவியிடத்திலின்றும்
செல்வம் பார்த்து இருக்கின்றீர் — ஐச்வரியம்பெற நினைத் திருக்கிறீர்கள்போலும்.

நீர் சொல்லுகிற எம்பெருமானொழிய வேறொரு தேவதையும் புகலன்றாகில், உலகில் பலபல தேவதைகள் அவ்வவர்களால் கொண்டாடப்படுவதற்கும், அக் கொண்டாட்டத்திற்கு ஏற்ப அத்தேவதைகள் பயன் அளித்துவருவதற்கும் என்ன காரணம்? பயன்கொடுக்கிற சக்திவாய்ந்த தேவதைகளைப் பற்றுவதால் என்ன பாதகம் விளையும்? என்று சில மாந்தர்கேட்க; அவர்களுக்கு விடையளிக்கிற பாட்டு - இது.

ஸத்வம், ரஜஸ், தமஸ் என்ற மூன்று குணங்களும் அமைந்த சேதநர்கட்கெல்லாம் அவரவர்களுடைய ருசிக்குத் தக்கபடி காரியஞ்செய்பவன் எம்பெருமானாதலால் ராஜஸருடையவும் தாமஸருடையவும் ருசிக்கு ஏற்ப அக்குணங்களுள்ள அம்மன் பிடாரி முதலிய க்ஷுத்ர தேவதைகளை எம்பெருமானே ஒவ்வொரு பேரிட்டு நாட்டினான். “[illegible] யேப்யந்யதேவதாபக்தா: யஜந்தே ச்ரத்தயாந்விதா: தேபி மாமேவ கௌந்தேய! யஜந்த்யவிதிபூர்வகம்” என்ற கீதையின்படியும், “ஆகாசாத் பதிதம் தோயம் யதா கச்சதி ஸாகரம்| ஸர்வதேவ நமஸ்கார: கேசவம் ப்ரதி கச்சதி—ஆகாசாத் பதிதம் தோயம் யதா கச்சதி ஸாகரம்—ஸர்வ தேவநமஸ்கார: கேசவம் ப்ரதி கச்சதி” என்கிற வசநப்படியும் அந்த க்ஷுத்ர தேவதைகளைக் குறித்துச் செய்யும் வணக்கவழிபாடுகள் யாவும் அத்தேவதைகட்கும் ஆத்மாவான ஸ்ரீமந்நாராயணனிடத்திற் போய்ச் சேர்ந்துவிடுமேயன்றி அவர்களுக்கே உரியனவாகமாட்டா. ராஜப்ரதிநிதிகள்

அவ்வோரிடங்களிலும் ப்ரஜைகளிடத்தில் பணங்களை (கப்பம்) வசூல்செய்து அவற்றைப் பிரதாந ராஜனிடத்தில் சேர்ப்பதுபோலவாய்த்து இத்தேவதைகளின் தொழிலும். "இறுக்குமிறை இறுத்துண்ண எவ்வுலகுக்கும் தன்மூர்த்தி, நிறுத்தினான் தெய்வங்களாக அத்தெய்வநாயகன்றானே" என்றும் "அவரவர் விதிவழியடைய நின்றனரே" என்றும் நம்மாழ்வாரு மருளிச்செய்தார்.

"நல்லதோரருள்தன்னாலே" என்பதை "நாட்டினான்" என்ற வினைமுற்றோடே கூட்டி அந்வயிக்கவுமாம். சாஸ்த்ரவிச்வாஸத்துக்கு இசையாதவர்களை வேதமானது அவர்களுடைய ருசிக்கீடாக அபிசாரம் முதலிய ஹிம்ஸைகளையும் கூறிப் படிப்படியாக நல்வழி சேர்த்துக்கொள்ளுமாறுபோல, எம்பெருமானும் அநந்யசேஷத்வத்துக்கு இசையாத ராஜஸ தாமஸ ப்ரக்ருதிகளை அவரவர்களுடைய குணானுகுணமாகப் பணியும்படி ராஜஸதாமஸ தேவதைகளைப் பரமக்ருபையாலே ஆங்காங்கு காட்டி, பிறகு காலகதியிலே ஸத்வம் தலையெடுத்து உஜ்ஜீவிக்கும் விரகு தேடுவார்க்கு உஜ்ஜீவநோபாயமாகத் தான் திருவரங்கம் பெரியகோயிலிலே வந்து சாய்ந்தருளினன் என்கிறார்.

அந்த க்ஷுத்ரதேவதைகள் க்ஷுத்ரமான பலன்களைக் கொடுக்கவல்லனவேயன்றி, மோக்ஷமாகிய உத்தம புருஷார்த்தத்தைக் கொடுக்க அவற்றுக்கு சக்தி இல்லை; அது உள்ளது எம்பெருமானொருவனுக்கேயாம்; இந்த தத்துவமறியாமல் முமுக்ஷுக்களாயிருப்பார் ஸ்ரீமந்நாராயணனைத் தவிர்த்து இதர தேவதைகளை ஆச்ரயிப்பது எங்ஙனே சொல்லலாயிருந்ததெனில்; ஐச்வரியத்தைப் பெற விரும்பின ஒருவன் அதனைத்தரவல்ல மஹாலக்ஷ்மியை உபாஸனை செய்ய வேண்டியிருக்க, அவளது திருவடிகளிற் புகாமல், உள்ள செல்வத்தையும் அடைக்கவல்ல மூதேவியைப்பற்றிப் பணியும் மூடனது செயலோடு ஒப்பிடலாமாயிருந்தது என்கிறார்.

இங்கு உபமேயமான அம்சத்தையும் உபமாநமான அம்சத்தையும் தனித்துச் சொல்லாமல் ஒருபோக்காகச் சொன்னது முற்றுவமை: தேவதாந்தரங்கள் பக்கல் பரமபுருஷார்த்தத்தைப்பெற நினைக்கை, சேட்டை தன் மடியகத்துச் செல்வம் பார்த்திருக்கை என்று இரண்டு பொருளில்லை; இதுவே அது, அதுவே இது என்ற கருத்துத்தோன்றும்.

நம்பீர்காள்—'நம்பிமார்கள்' என்பதன் விளி. இது பரிஹாஸோக்தி; 'இந்த ஸ்வாமி பரமயோக்யர்' என்னுமாபோலே. பகவத்விஷய ப்ராவண்யமுண்டானாலாய்த்து மெய்யே நம்பிமாராவது. கேட்டிரே என்று—அந்யபரரைத் துடைதட்டி யுணர்த்திக் கூறுகிறபடி. "கெருடவாகனனும்" என்றவிடத்துள்ள உம்மை நிற்க என்பதோடு கூட்டி உரைக்கப்பட்டது. மோனையின்பத்திற்காகக் கருடன் கெருடனாயிற்று.

சேட்டை—மூத்தவள் என்னும் பொருளதான 'ஜ்யேஷ்டா' என்ற வடசொல்விகாரம். மூதேவியென்பவள் பிராட்டிக்குமுற்பிறந்தவள். தாரித்திரியம்,

துரத்ருஷ்டம், உறக்கம், சோம்பல் மூடத்தனம் முதலியவை உள்ளவளை 'மூதேவி' என்று நிந்திப்பது ப்ரஸித்தம். ஆகையாலே மூதேவியென்பவள் ஸகல அசீலங்களுக்கும் மூலஸ்தாநம். ... ... ... (௧௦)

ஒருவில்லா லோங்குமுந்நீ ரடைத்துலகங்க ளுய்யச்
செருவிலே யரக்கர்கோனைச் செற்றநம் சேவகனார்
மருவிய பெரியகோயில் மதிள்திரு வரங்கமென்னா
கருவிலே திருவிலாதீர்! காலத்தைக் கழிக்கின்றீரே. (௧௧)

| | | | |
|---|---|---|---|
| ஒருவில்லால் | சார்ங்கம் என்கிற ஒரு வில்லாலே | மருவிய | பொருந்தி வாழ்வதற்கு இடமான |
| ஓங்கு முந்நீர் அடைத்து | கொந்தளிக்கிற கடலை அணைகட்டி | பெரிய கோயில் | பெருமை தங்கிய கோயிலாவது |
| உலகங்கள் உய்ய | லோகமெல்லாம் வாழும்படி | மதிள் திரு அரங்கம் | ஸப்தப்ராகாரங்கள் சூழ்ந்த ஸ்ரீரங்கக்ஷேத்ரம் |
| செருவிலே | போர்க்களத்திலே | என்னா | என்று சொல்லமாட்டாத |
| அரக்கர் கோனை | இராவணனை | கருவிலே திரு இலாதீர் | கர்ப்பநிர்ப்பாக்யர்களே ! |
| செற்ற | முடித்தருளின | காலத்தை | (பகவதநுபவத்துக்காகக் கண்ட) காலத்தை |
| நம் சேவகனார் | நமக்குத் தலைவரும் மஹாவீரருமான பெருமான் | கழிக்கின்றீர் | பாழே போக்குகிறீர்களே ! |

சிலஸம்ஸாரிகள் ஆழ்வார் திருவடிகளிலே வந்து, "சிலையினாலிலங்கை செற்ற தேவனே தேவனாவான்" என்று ஒருகால் இராமபிரானைப் பரதெய்வமென்கிறீர்; "கற்றினம் மேய்த்த எந்தை கழலிணை பணிமின்னீரே" என்று மற்றொருகால் கண்ணபிரானைப் பரதெய்வமென்கிறீர்; இன்னொருகால் "காட்டினான் திருவரங்க முய்பவர்க் குய்யும்வண்ணம்" என்னுகின்றீர்; இப்படி பலவற்றையும் சொல்லவே எங்களுக்கு ஒரு தத்வநிச்சயம் பிறக்கவழியில்லை; ஸித்தாந்தமாக ஒன்றைச் சொல்லவேணும்" என்றுகேட்க; ஐயோ! இப்படியும் ஒரு மயக்கம் இருக்குமா? இராமபிரானும் கண்ணபிரானுமாய் அவதரித்த பெருமான்றானே திருவரங்கம் பெரியகோயிலில் கண்வளர்ந்தருளுகிறான் என்று அநுஸந்திக்கத் தெரியவில்லையே! ஜாயமாநகால கடாக்ஷமில்லாமையாலன்றோ நீங்கள் இங்ஙனே திண்டாடுகிறது என்று ஆக்ஷேபித்துக்கூறுவது இப்பாட்டு.

‡ இராமபிரான் ஸமுத்ரராஜனை அடைக்கலம்பற்றி வழிவிடவேணுமென்று வேண்டிக்கொண்டவிடத்தும் அவன் வந்து முகங்காட்டாதொழிய, "ஒரு மீன்படுகுட்டம் நம்மை அஸமர்த்தராக நினைத்துவிட்டது; இனி ஒரு

‡ "கல்லால் கடலை அணைகட்டி யுகந்தாய்" என்னுமிங்கு, "ஒருவில்லா லோங்கு முந்நீரடைத்து" என்று இவர் அருளிச்செய்வதற்குக் கருத்து.

கைபார்த்துமத்தனை” என்று துணிந்து இளையபெருமாளை நோக்கி “வில்லைக் கொண்டுவா” என்று நியமித்தருளினபின்பு ஸமுத்ரராஜன் அஞ்சிநடுங்கி ஓடி வந்து முதுகைக்காட்டித் தன்மீது அணைகட்டிப் போகும்படி அமைந்தனனாத லால், ஒரு வில்லாலோங்கு முந்நீரடைத்து என்கிறார். ஓங்கு என்றது-கடலின் இயற்கையான கொந்தளிப்பைக் கூறுகிறபடி அன்று; இராமபிரான் சீற்றத் தாலே கையும் வில்லுமாய் நின்ற வீரவுருப்பைக்கண்டு நிறம்பெற்றுக்கொண்டு மேல் மண்டையைத் தூக்கி காலிலேவிழுமாபோலே திருவடிகளளவும்வந்து வெள்ளங் கோத்தபடியைக் கூறுவதாம்.

உலகங்களையெல்லாம் வாழ்விக்கக்கருதிய பெருமாள் தனித்தனியாக ஒவ் வொருவருடைய இருப்பிடத்திற்குஞ்சென்று அவர்களை வாழ்விப்பது அரிய காரியமென்றெண்ணி ஸதுபாயம் சிந்தித்து இராவணனொருவனைக் கொன்று விட்டால் உலகங்களையெல்லாம் வாழ்வித்தவாறாம் என்று அறுதியிட்டு ராவண ஸம்ஹாரம் செய்தருளினனென்ற கருத்துத்தோன்ற “உலகங்களுய்யச் செருவிலே அரக்கர்கோனைச் செற்ற” என்கிறார். பல்லாயிரம் பசுக்களை மேய்ப்பவனான கண்ணபிரான் ஒவ்வொரு பசுவுக்கும் புல்லுந்தண்ணீருங் கொடுத்துக் காப்பாற்றவேண்டிய அருமையைநோக்கி ப்ருந்தாவனத்தைப் பசும்புற்காடாக ஸங்கல்பித்து அவ்வரிய காரியத்தை எளிதில் நிறைவேற்றிக் கொண்டாற்போலவும், நம்மாழ்வாரொருவரை அவதரிப்பித்து நாட்டையடங்க லும் எளிதில் திருத்தினாற்போலவும் இராவணனொருவனைக்கொன்று உலகங் களையெல்லாம் எளிதில் வாழ்வித்தானாயிற்று.

நம் சேவகனார்—எம்பெருமானை நோக்கி ஒருவன் ஓர் அஞ்ஜலி பண்ணிவிட் டால் அவ்வடியான் திறத்தில் அவன் சேவகத்தொழிலும் செய்யும்படி பரமவிதே யனாயிருக்குமாற்றைக் கூறிற்றாகவுமாம். “இன்னார் தூதனென நின்றான்” னிறே.

நம் சேவகனார் மருவிய பெரியகோயில்—ராவணவதம்பண்ணி வினையற்ற பின்பும் அப்போதை பரிச்ரமத்தை இழந்த பிற்பாடர்க்கும் உதவுகைக்காக வன்றோ கோயிலிலே வந்து கண்வளர்ந்தருளுகிறது. “மாமுனிவேள்வியைக் காத்து அவபிரதமாட்டிய வடிதிறல்தோளனே! அசலகத்தம்மா” என்ற ஒற்றுமை நயமும் நோக்கத்தக்கது.

மதிள் திருவரங்கம்—ராமாவதாரத்திற்போலே இங்கும் சில ஆபத்து விளையுமோ என்றஞ்சித் திருமங்கையாழ்வார் போல்வாரான மங்களாசாஸந பரர்கள் காப்பாக இட்ட மதிளையுடைய ஸ்ரீரங்கம்.

கருவிலே திருவிலாதீர்—“ ஜாயமாநம் ஹி புருஷம் யம் பச்யேந் மதுஸூதந: । ஸாத்விகஸ்ஸது விஜ்ஞேயஸ்ஸவை மோக்ஷார்த்திகம்—ஜாயமாநம் ஹி புருஷம் யம் பச்யேத் மதுஸூதந:—ஸாத்விகஸ் ஸது விஜ்ஞேயஸ் ஸ வை மோக்ஷார்த்தசிந்தக:” என்றபடி கர்ப்பவாஸ ஸமயத்தில் எம்பெருமான் ஸத்வ குணத்தைச் செலுத்துவதற்காகக் குளிரநோக்குமொரு நோக்குண்டு; அதனைப் பெறாதவர்களன்றோ நீங்கள்; பெற்றிருந்தீர்களாகில் இத்தகைய விசித்திரங்கள் உங்களுக்குப் பிறவாவே.

ஆழ்வாரை நோக்கி எம்பெருமான், "ஆழ்வீர்! இந்த முரட்டு ஸம்ஸாரிகளைக் கட்டிக்கொண் டழுவதால் நமக்கு யாதுபயன் கைகூடும்? 'காலத்தைக் கழிக்கின்றீரே' என்று பிறரைக்குறித்துக் கூறுகின்ற நீர் பயனற்ற ப்ரயாஸங்களாலே வீண்போது போக்குகிறீரே; பராங்முகர்களைப்பற்றி நீர் ஏன் கவலைப் படுகின்றீர்?" என்றருளிச்செய்ய, அதற்கு உத்தரமாகக் கூறுவது-இப்பாட்டு.

திருநாமத்தின் பெருமையை நான் அறியாதிருந்தேனாகில் ஸம்ஸாரிகளைப் பற்றிக் கவலைப்படமாட்டேன்; மநுஷ்யஜன்மம் எளிதிற் பெறக்கூடுமாயின் நான் கவலைப்படமாட்டேன்; இவர்கள் உஜ்ஜீவநத்திற்காகச் செய்யவேண்டிய காரியம் மிகப்பெரிதாயின் கவலைப்படமாட்டேன். திருநாமங்களின் மேன்மையோ சொல்லுந்திறமல்ல; பெறுதற்கு அரிதான மானிடஜந்மத்தையோ இவர்கள் பெற்றிருக்கிறார்கள்; இவர்கள் செய்யவேண்டிய காரியமோ மிக அற்பமானது—'எம்பெருமான் ஊர் திருவரங்கம்' என்றிவ்வளவே சொல்லவேண்டுமத்தனை. இங்ஙனிருக்கவும் இவர்கள் விஷயாந்தரப் படுகுழியிலே தலைகீழாக விழுந்து வருந்துவர்களாகில் நான் எங்ஙனே கவலைப்படாதிருக்கமுடியும்? இவர்கள் சிறிது திருந்தினராகில் என் அநுபவத்திற்கு எவ்வளவோ துணையாகுமே! என்கிறார்.

முத்கலோபாக்யாநம் ஸ்ரீவிஷ்ணுதர்மத்திலே தொண்ணூறாறுவது அத்யாயத்திற் கூறப்பட்டுள்ளது. அதன் சுருக்கம் வருமாறு. முத்கலனென்பவன் பெரும்பாவிகளில் தலைவன்; அவன் ஒருநாள் கோதாநம் பண்ணும்போது 'க்ருஷ்ணாய-க்ருஷ்ணாய' என்று சொல்லி தாநஞ்செய்தான். பின்பு அவன் மாண்ட பிறகு யமகிங்கரர்வந்து நெருக்கி அவனை யமன்பக்கலிலே கொண்டு செல்ல, யமன் இவனை எதிர்கொண்டு ஸம்பாவனை செய்தான்: அதுகண்ட முத்கலன், "உன்னுடைய படர்கள் என்னை நெருக்கிக் கொண்டுவாராநிற்க, நீ என்னை கௌரவிப்பதற்கு என்னகாரணம்?" என்றுகேட்க; "உன்னுடைய மேன்மையை அவர்களுமறிந்திலர், நீயுமறிந்திலை;—க்ருஷ்ணநாமத்தை நீ ஒருகால் சொன்னாய் காண்!" என்று யமன் அதனைப் புகழ்ந்துகூற, இப்படி ப்ரஸங்காது ப்ரஸக்தமான இந்த ஸம்வாதம் நரகாநுபவம் பண்ணுகிறவர்களுடைய காதிலே விழுந்தவாறே அந்த நரகந்தானே துக்காநுபவ நிலமாயிருந்த நிலைமாறி ஆநந்தாநுபவ நிலமாய்விட்டதென்றால் இத்திருநாமத்தின் வைபவம் எப்படிப்பட்டதாயிருக்க வேணும்? "என்னை நீ ஸத்கரிப்பதற்குக் காரணமென்ன?" என்று முத்கலன் கேட்க, "முன்பு நீ க்ருஷ்ணநாமம் சொன்னாய்" என்று யமன் உத்தரமுரைத்த இவ்வளவேயாய்த்துப் பிறந்தது; யமன் தனக்குப் பாவகமாக அத்திருநாமத்தை உச்சரித்தவனல்லன்; முத்கலன் ப்ரார்த்திக்க அவனுக்கு உபதேசித்தவனுமல்லன்; நரகாநுபவம் செய்கிறவர்களின் காதிலே இது விழுந்து அவர்கள் உய்வுபெறவேணுமென்று நினைத்துச் சொன்னவனுமல்லன்; இனி இதனைக் கேட்டவர்களோ பாபம் பண்ணுகிற ஸமயத்திலே அநுதபித்து மீண்டு ப்ராயச்சித்தம் செய்துகொள்ளக்கூடிய காலத்திலே கேட்டவர்களல்லர்; பாபத்தி

னுடைய பலன்களை அநுபவிக்கும்போதாயிற்றுக் கேட்டது. அப்போதுதானும் இச்சையோடு கேட்டாருமல்லர்; யாத்ருச்சிகமாகத் திருநாமம் செவிப்பட்ட வித்தனையே: இப்படிப்பட்ட திருநாமமே இவ்வளவு பெருமையுடைத்தானால், பின்னை என் சொல்லவேண்டும்?

பாபபலாநுபவம் பண்ணும்போது யாத்ருச்சிகமாகத் திருநாமம் செவிப்பட்டாற்போலே பாபம் செய்யும்போது ஒருகடவையாவது திருநாமம் செவிப்பட்டிராதா? அதுகொண்டு அவன் நற்கதிபெறலாமன்றோ என்னில்; அப்போது விஷய ப்ராவண்யத்தால்வந்த செருக்காலே இவையொன்றும் செவிப்படா; துக்காநுபவம் பண்ணும் ஸமயத்தில்தான் "நல்வார்த்தை சொல்வார் ஆரேனும் கிடைப்பரோ?" என்று எதிர்பார்க்கிறவர்களாகையாலே செவிப்படும் என்க.

நரகமே சுவர்க்கமாகும்—நரகத்தையே ஸ்வர்க்கமாக்கவல்ல என்றபடி. பாபஸ்தாநம் புண்யஸ்தாநமாக உடனே மாறிவிடக்கூடுமோவென்று சங்கிக்க வேண்டா; இராவணன் கையைவிட்டுநீங்கி விபீஷணாழ்வான் கையில்வந்தவாறே லங்கை 'தாமஸபுரி' என்னும் பெயர் நீங்கி 'ஸாத்விகபுரி' என்று புகழ்பெற வில்லையோ? அதிஷ்டாதாவின் [—ஸ்தானத்தில் வஸிப்பவனுடைய] நிலை சீர்பட்டால் உடனே ஸ்தாநம் சீர்படத்தட்டில்லை.

நம்பி அவனதூர் அரங்கமென்றது—இப்படி பூர்ணனானவன் நித்யவாஸம் பண்ணுகிற தேசம் கோயில் என்று இவ்வளவுக்கு மேற்படச் சொல்லவேண்டியதுண்டோ? ஸாதநம் அதிஸ்வல்பமாய், பலன் கனத்திருக்கச் செய்தேயும் இத்தைச் சொல்லவொட்டாத பாபத்தின் கனமிருந்தபடியென்!. 'திருநாமம் சொல்லுகிறவர்கள் அருகிலிருக்கக்கூடாது' என்பாரும், அவர்களை நாட்டில் நின்றும் தூரத்துவாரும், திருநாமம் சொன்னதுவே ஹேதுவாக ஹிம்ஸிப்பாருமாயன்றோ ஸம்ஸார நிலையிருப்பது!

"ஒருவனுடைய அந்திமஸமயத்திலே திருமந்த்ரத்தை உபதேசித்து 'இத்தைச் சொல்லாய்' என்ன; அவனும் 'ஆமாகில் சொல்லிப்பார்க்கிறேன், ஆமாகில் சொல்லிப்பார்க்கிறேன்' என்று இத்தை அநேகமுருச்சொல்லித் திருமந்த்ரந்தன்னைச் சொல்லாதே செத்துப்போனான்; † இரண்டும் அக்ஷரமொத்திருக்கச்செய்தே சொல்லவொட்டிற்றில்லையிறே பாபபலம்!" என்ற வியாக்யாந ஸூக்தியை நோக்குக.

அளிய மாந்தர்—திருநாமம் சொல்லுகைக்கு உரிய நாக்குப்படைத்த அருமருந்தன்ன மநுஷ்யர்கள். "தாமுளரே தம்முள்ளமுள்ளுளதே தாமரையின் பூவுளதே ஏத்தும்பொழுதுண்டே" "நாவாயிலுண்டே நமோநாரணாவென்று ஓவாதுரைக்கு முரையுண்டே" இத்யாதி.

† "ஆமாகில் சொல்லிப்பார்க்கிறேன்" என்பதும் (மெய்யெழுத்து நீக்கி) எட்டெழுத்து, திருமந்த்ரமும் எட்டெழுத்து என்க.

அதனுக்கே கவல்கின்றேனே—என் குடும்பத்தைப்பற்றி நான் கரைகின்றேனில்லை; என்னுடைய பிராரப்தமான குடும்பத்தைப்பற்றியும் கரைகின்றேனில்லை; பிறர் குடும்பம் கெட்டுப்போகிறதே! என்பதற்காகவே கரைகின்றேனென்கிறார்.

"அயர்த்துவீழ்ந்து அழியும் மாந்தர்" என்பது அத்யாபகபாடம். (கஉ)

எறியுநீர் வெறிகொள்வேலை மாநிலத் துயிர்களெல்லாம்
வெறிகொள்பூந் துளபமாலை விண்ணவர்கோனை யேத்த
அறிவிலா மனிசரேல்லா மரங்கமென் றழைப்பராகில்
பொறியில்வாழ் நரகமெல்லாம் புல்லெழுந் தொழியுமன்றே. (கஙு)

| | |
|---|---|
| எறியும் நீர் | அலைகள் வீசுகின்ற தண்ணீரையும் |
| வெறி | (புவாலின்) நாற்றத்தையும் |
| கொள் | கொண்டிருக்கிற |
| வேலை | கடலினால் சூழப்பட்ட |
| மா நிலத்து | பெரிய இந்தப் பூலோகத்திலுள்ள |
| உயிர்கள் எல்லாம் | ஆத்மாக்கள் யாவும் |
| வெறி கொள் | நல்ல பரிமளமுடைய |
| பூ | அழகிய |
| துளபம் மாலை | திருத்துழாய் மாலையை அணிந்துள்ள |
| விண்ணவர் கோனை | தேவாதி தேவனை திருமாலை |
| ஏத்த | தோத்திரம் பண்ணுவதற்காகவே (ஏற்பட்டிருக்கின்றன;) |

(அவ்வாறு துதிப்பது அற்பஞானமுடையார்க்கு முடியாவிடினும்)

| | |
|---|---|
| அறிவு இலா மனிசர் எல்லாம் | தத்வஜ்ஞானம் நிரம்பாத அந்த மனிதர் யாவரும் |
| அரங்கம் என்று அழைப்பர் ஆகில் | (அபுத்தி பூர்வமாகவாவது) ஸ்ரீரங்கமென்று சொல்லுவர்களாகில் |

(அம்மாத்திரத்தாலேயே)

| | |
|---|---|
| பொறியின் வாழ் | பஞ்சேந்திரியங்களின் வசப்பட்டு வாழ்கின்ற |
| நரகம் எல்லாம் | (ஞானிகளுக்கு நரகமாகிய) இப்பிரபஞ்சம் முழுதும் |
| புல் எழுந்து | புல் முளைத்து |
| ஒழியும் அன்றே | பாழாய்ப்போய்விடுமன்றே. |

கீழெல்லாம் பிறருடைய அயர்த்தைக்கண்டு தாம் பொறுக்கமாட்டாமல் கவல்கிறபடியை வாய்விட்டுச்சொன்னார்; ஒன்றும் பயன்படவில்லை; இனி பரோபதேசத்தில் நின்றும் மீண்டுவிடுவோம் என்று பார்த்தார்; பிறர்க்கென்றே அவதரித்த இவர் எங்ஙனே சடக்கென மீளக்கூடும்? தீயகுணம் நிறைந்த பிள்ளையைப்பற்றி ஒன்றும் கவனிக்கக்கூடாதென்று தகப்பன் மீளநினைத்தாலும் அந்நினைவின்படி உடனே மீளமுடியுமோ? அப்படியே இவ்வாழ்வாரும் பிறருடைய துயரத்தைப்பற்றிக் கவலைப்படுவதினின்றும் உடனே மீளமாட்டாமல் அவர்களை நோக்கிக் கூறுகிறமுறையை மாத்திரம் விட்டிட்டு, தம் நெஞ்சோடு தாமே வருந்துகின்றார், இப்பாட்டில்.

மூலப்ரக்ருதியிலே அழுந்தி ஒளிமழுங்கிக்கிடந்த ஆத்மாக்களையெல்லாம் எம்பெருமான் தனது இன்னருளால் உஜ்ஜீவிப்பிக்க விரும்பித் தன்னை அடைய

மாறு காசரணம் முதலிய அவயவங்களையும் சாஸ்திரங்களையும் காட்டிக்கொடுத்
தான் என்ற நூற்கொள்கை; முன் இரண்டடிகளிற் குறிப்பிடப்பட்டது.
அதற்கு ஏற்ப, கட்வுளையடைந்து ஈடேறுவது தத்துவஞானத்தின் காரிய
மாதலால் அறிவிலாமனிசர்க்கு அது கைகூடாவிடினும், அவர்கள் யாவரும்
அபுத்தி பூர்வகமாகவாவது எம்பெருமான் நித்யவாஸஞ்செய்கின்ற திருவரங்கம்
பெரியகோயிலை ஒருதரமாவது வாய்விட்டுச் சொன்னாராகிலும், அவனது
ஊரைச்சொன்னதன் பயனாக அவ்வெம்பெருமானால் கடாக்ஷிக்கப்பெற்று
மோக்ஷத்தையடையத் தட்டில்லை; பின்பு பாபத்தின்பயனாக வாழ்கின்ற பிராணி
ஒன்றும் இங்கு இருக்கக் காரணமில்லாமையால் இந்தப் பூலோகம் முழுவதும்
புல் முளைத்துப் பாழாய்விடும்: இத்தனை எளியவழியையும் மேற்கொள்ளாமற்
கைவிட்டு இவ்வுலகத்தவர் அறிவுகேடரா யிருக்கின்றார்களே! என்று பின்
னிரண்டடிகளால் இரங்குகின்றனரென்க.

நலமந்தமில்லதோர் நாடாகிய பரமபதத்தை அடைந்து அங்கு "ஸர்வகந்த
ஸர்வரஸ:—ஸர்வகந்தஸ் ஸர்வரஸ:" என்கிற எம்பெருமானுடைய திருத்
துழாய் நறுமணத்தை அநுபவித்துக்கொண்டு அப்பிரானை ஏத்தி இனிதாக
இருக்கவேண்டிய சேதநர்கள் "வெள்ளத்திடைப்பட்ட நரியினம்போலே"
என்றபடி கலங்கிப் புலால்நாற்றம் வீசுகிற கடல்வெள்ளத்துக்கு உட்பட்ட இப்
பூமியிலே கிடந்து வருந்துகின்றார்களே! என்ற இரக்கப்பொருள் தோன்ற
"எழியுநீர் வெழிகோள்வேலை மாநிலத்துயிர்கள்" என்கிறார். மாநிலம்-ஐம்பதுகோடி
விஸ்தீர்ணையான பூமி.

அழைப்பராகில் என்றது—பெரும்பாவிகளான இவர்கட்குக் கடுஞ்சொற்
களைச்சொல்வது எளிதேயன்றி, அரங்கமென்று வாயாற்சொல்லுவதும் அருமை
என்பது தோன்ற.

யந்திரம்போல எல்லா அவஸ்தையிலும் தப்பாதபடி தன்பக்கலிலே அகப்
படுத்திக்கொள்ளவற்றாகையாலே பொறி என்று இந்திரியங்களைச் சொல்லுகிறது.
"இருள் தருமாஞாலத்து ளினிப்பிறவி யான்வேண்டேன்" என்னும் ஆழ்வார்
போன்ற அறிவுடையார்க்கு இந்த உலகவாழ்வு நரகம்போலத் தோன்றுமாத
லால், இந்த ஸம்ஸாரத்தை நரகம் என்றே கூறினர்.

இவ்வுலகத்திலுள்ளோர் யாவரும் எம்பெருமானுடைய திருப்பதியின் திரு
நாமத்தைச் சொன்னாராகில் அதுவே காரணமாகப் பரமபதத்தை அடைவராத
லால் அப்போது நரகத்திற்குச் செல்வார் ஒருவருமில்லாமற்போக, அந்நரகம்
புல்லெழுந்தொழியும் என்று உரைப்பாருமுண்டு; இப்பொருளில், பொறி இல்
என்று பிரித்து 'அழகு இல்லாத' எனப் பொருள் கொள்க. வாழ் - அசை.

"அறிவிலாமனிசரெல்லாம்" இத்யாதிக்கு இக்காலத்துக் காலக்ஷேபபரர்
கள் கூறும் கருத்து:—உலகத்திலுள்ள எல்லாமனிசரும் அரங்கமென்று
சொல்லுவர்களேயானால் எல்லாரும் பரமபதம் போய்ச்சேர்வர்கள்; பிறகு
நரகத்துக்குப்போவார் ஒருவர்கூடக் கிடைக்கமாட்டார்களாகையால் நரகம்

புல்மூடி ஒழிந்துபோய்விடும் ; எம்பெருமான் திருவாணையால் ஏற்படுத்தப்பட்ட ஒரு லோகம் அடியோடு ஒழிந்துபோவது நியாயமன்றாதலால் எல்லாரும் பரமபதத்துக்குப் போகக்கூடாதென்றெண்ணி எம்பெருமானே பலபேர்களை அரங்கமென்றழைக்க வொட்டாமற் செய்திருக்கிறான் என்று ஆலோசித்து ஆழ்வார் தம்மில்தாம் ஸமாஹிதராகிறார் என்பதாம். "போற்றி மற்றோர்தெய்வம் பேணப்புறத்திட்டு உம்மையின்னே தேற்றிவைத்தது எல்லீரும் வீடுபெற்றால் உலகில்லையென்றே" என்ற திருவாய்மொழியை இக்கருத்துக்கு ஸம்வாத ப்ரமாணமாகவும் காட்டுகின்றார். இது பொருத்தமான பொருளன்று.

கடற்கரை என்ற பொருளையுடைய 'வேலா' என்னும் வடசொல் வேலை எனத்திரிந்து இலக்கணையால் கடலுக்கு வாசகமாயிற்று. பூந்துளவம்-பூப்பெயர் முன் இனமென்மை தோன்றிற்று. 'துளஸீ' என்ற வடசொல் துளவமெனத் திரிந்ததென்பர். ஏத்த என்ற செயவெனெச்சம்-வருவித்து உரைக்கப்பட்ட வினைச்சொல்லைக்கொண்டு முடியும். (கரு)

வண்டின முரலும்சோலை மயிலின மாலும்சோலை
கொண்டல்மீ தணவும்சோலை குயிலினம் கூவும்சோலை
அண்டர்கோ னமரும்சோலை அணிதிரு வரங்கமென்னா
மிண்டர்பாய்ந் துண்ணும்சோற்றை விலக்கிநாய்க் கிடுமினீரே. (கசு)

| | | | |
|---|---|---|---|
| வண்டு இனம் | வண்டுகளின் கூட்டங்களானவை | அண்டர் கோன் | தேவர்கட்குத் தலைவனான ஸ்ரீரங்கநாதன் |
| முரலும் | காநம் செய்யாநிற்கப்பெற்ற | அமரும் | நித்யவாஸம் பண்ணப்பெற்ற |
| சோலை | சோலைகளையுடையதும், | சோலை | சோலைகளை |
| மயில் இனம் | மயில்களின் கூட்டங்களானவை | அணி | ஆபரணமாகவுடையதுமான |
| ஆலும் | கூத்தாடாநிற்கப்பெற்ற | திரு அரங்கம் என்னா | ஸ்ரீரங்கம் என்று சொல்லமாட்டாத |
| சோலை | சோலைகளையுடையதும், | | |
| கொண்டல் | மேகங்களானவை | மிண்டர் | நன்றியறிவில்லாத மூர்க்கர்கள் |
| மீது அணவும் | மேலேவந்து படியாநிற்கப்பெற்ற | பாய்ந்து உண்ணும் சோற்றை | மேல்விழுந்து உண்ணுகிற சோற்றை |
| சோலை | சோலைகளையுடையதும் | | |
| குயில் இனம் | குயில்களின் கூட்டங்கள் | | |
| கூவும் | ஒன்றையொன்று அழையாநிற்கப்பெற்ற | விலக்கி | (அவர்கள் உண்ணக் கூடாதபடி) தடுத்து |
| சோலை | சோலைகளையுடையதும், | நீர் நாய்க்கு இடுமின் | நீங்கள் (அந்தச்சோற்றை) நாய்க்கு இடுங்கள். |

பிறரை நோக்கிப் பலமுகமாக உபதேசித்தும், அவர்கள் விஷயமாகத் தமக்குள்ளே தாம் வருத்தப்பட்டும் போந்த ஆழ்வார் "கழுதைக்குபதேசம் காதிலே ஓதினாலும் அழுகைக் குரலன்றி அங்கொன்றுமில்லை" என்கிறாப்போலே விமுக

ரான இப்பாவிகளைக்கொண்டு நாம் பெறுவதொரு பயனில்லையென்று நிச்ச யித்து அவர்களை வெறுத்து, இத்தனைகாலமாக அவர்களை நெஞ்சால் நினைத் தும் அவர்களோடு வார்த்தையாடியும் தாம் அடைந்த பாபமும் தாபமும் தீரும் படி சோலை வாய்ப்பை முன்னிட்டுக் கோயிலை அநுபவித்து, ஐயோ! இப்படிப் பட்ட அநுபவம் எல்லார்க்கும் வருத்ததாயிருக்க இத்தை அநாதரித்துவிட்டு இதற்காக ஏற்பட்ட வாயைச் சோறு உண்பதற்கு ஸாதநமாக்குவதே! நன்றி யறிவற்ற பாவிகள் தின்னுஞ் சோற்றை விலக்கி மிக்க நன்றியறிவுடைய நாய்க்கு இடுவாரில்லையோவென்று கர்ஹித்துப் பரோபதேசத்தினின்றும் திருப்பிவிடு கிறார்.

இதுவரை பகவத்விஷய விரோதிகளான பாவிகளை நினைத்ததற்கும் அவர்க ளோடு ஸம்பாஷணை செய்ததற்கும் ப்ராயச்சித்தமாக "வண்டினமுரலுஞ் சோலை" இத்யாதியைப் பரமபோக்யமாகத் தாம் அநுஸந்திக்கச் செய்தேயும், மீண்டும் "திருவரங்கமென்னாமிண்டர்" என்று அப்பாவிகளையே நினைக்கிறார்- அவர்களையொழிய இவர்க்கு ஒரு க்ஷணமும் செல்லாதுபோலே. ஸம்ஸாரத்தி லேயே நெடுநாள் ஊன்றினவன் கொண்டபெண்டிர் மக்களுற்றார் சுற்றத்தவரோ டுண்டான பற்றை அறுத்துக்கொண்டு பகவத்விஷய சிந்தையிலேயே போது போக்கவேணுமென்று பெருமுயற்சி செய்தாலும் பழையதான வாஸநையின் கனத்தினால் அந்த ஸம்ஸாரப்பற்றை விரைவில் அறுத்துக்கொள்ள முடியாமல் "அங்குற்றேனல்லே னிங்குற்றேனல்லேன்" என்றாற்போல இருகரையனாய்த் தடுமாறுமாபோலே, பராங்முகரையும் சீர்திருத்தி மங்களாசாஸநத்துக்கு ஆளாக்கிக்கொள்வதற்காகப் பாடுபடுகையாகிற ஒரு விலக்ஷண ஸம்ஸாரத்திலே நெடுநாளாக ஊன்றின இவ்வாழ்வார், மநோரதம் நிறைவேறப்பெறாத வருத் தத்தினால் அப்பாவிகளின் பற்றை அறுத்துக்கொள்ளவேணுமென்று பெருக்க முயன்றாலும் அஃது இவர்க்கு விரைவில் கைகூடுகிறதில்லை. மங்களாசாஸ நத்திற்கு ஆள் சேர்க்கப் படுகிறபாட்டின் உறைப்பு என்னே!

திருவரங்கமென்னாமிண்டர்—அவன் தங்களுக்காக வந்து கிடவாநிற்க, அவனுடைய தேசத்தை வாயாலே சொல்லவுங்கூட மாட்டாத மூர்க்கர். நரக வாஸம், கர்ப்பவாஸம் முதலானவை பிடரியைப் பிடித்துக்கொண்டு நிற்க, கேவலம் தேஹபோஷணத்திலேயே ஊன்றிக் கிடக்கிறவர்களுக்கு மேற்பட்ட மூர்க்கரும் உண்டோ?

["மிண்டர்பாய்ந்துண்ணுஞ் சோற்றைவிலக்கி நாய்க்கிடுமினீரே."] 'நேமி சேர் தடங்கையினானை நினைப்பிலாவலி நெஞ்சுடைப், பூமிபாரகருண்ணுஞ் சோற்றினை வாங்கிப் புல்லைத்திணிமினே" என்றார் பெரியாழ்வார்; இவர் நாய்க்கிடுங்களென்கிறார். தங்களை உத்தேசித்து வந்து கண்வளர்ந்தருளுகிற அந்த உபகாரத்தை அறியாத க்ருதக்நர் ஜீவிக்கிற ஜீவநத்தை விலக்கி, ஒருநாள் ஒருபிடி சோறிட்டவன் வாசலைப்பற்றிக் கிடக்குமத்தனை நன்றியறிவுடைய நாய்க் கிடுங்களென்கை.

நாய் நன்றியறிவுடையதென்பது உண்மையே; அதற்கு சோறிடவேணு மானால் தனக்கு உரிய சோற்றை இடட்டும்; பிறன் உண்கிற சோற்றைப் பிடுங்கி நாய்க்கு இடுவதற்கு என்ன அதிகாரமுண்டு? நியாயத்திற்குத்தான் சேருமா? என்று பரிஹஸிக்கவேண்டா; "யோऽஸத்யாஹ்ருத்ய ஸத்பாத்ரேப்ய: ஸத்பாத்ரேப்யோ ப்ரயச்சதி க்ஷுத்கோபிவஸஹஸ்ராணி ஸயாதி ஶ்ரேயஸாம் பதம்॥—யோ ஸாதுப் யோர்த்தமாதாய ஸாதுப்யஸ் ஸம்ப்ரயச்சதி கல்பகோடி ஸஹஸ்ராணி ஸயாதி ச்ரேயஸாம் பதம்" என்று—அஸத்துக்களின் பொருளைப்பறித்து ஸத்துக்களுக்கு இடும்படி சாஸ்த்ரம் விதித்திருக்கின்றதிறே: இவ்வர்த்தத்தை உண்மையாக அறிந்து அநுஷ்டானபர்யந்தம் வெளிக்காட்டியவர் திருமங்கையாழ்வாரென்க.

அண்டர்—இடையர்க்கும் தேவர்க்கும் பெயர். (கச)

மெய்யர்க்கே மெய்யனாகும் விதியிலா வென்னைப்போலப்
பொய்யர்க்கே பொய்யனாகும் புட்கொடி யுடையகோமான்
உய்யப்போ முணர்வினார்கட் கொருவனென் றுணர்ந்தபின்னை
ஐயப்பாடறுத்துத் தோன்று மழகனூ ரரங்கமன்றே. (கரு)

புள் கொடி உடைய — கருடனைக்கொடியாக வுடைய
கோமான் — ஸ்வாமியான திருமால்
விதி இலா என்னை போல — (நெடுங்காலம் எம்பெருமானது அருளைப் பெறுதற்கு ஏற்ற) நல்வினை இல்லாதிருந்த என்னைப்போல
மெய்யர்க்கு — அத்யவஸாயத்தி மூடையவர்க்கு
மெய்யன் ஆகும் — (தன் ஸ்வரூபத்தை) உள்ள படி காட்டித்தருவன்;
பொய்யர்க்கு — (எம்பெருமான் விஷயத்தில்) அத்யவஸாயத்தைப் பெற்றிராதவர்க்கு [எம்பெருமான் விஷயத்தில் பொய்மை கொண்டிருப்பவர்க்கு]
பொய்யன் ஆகும் — (தனது ஸ்வரூபத்தைக் காட்டித்தாராமல் தானும்) பொய்யனாயிருப்பன்;
உய்ய போம் உணர்வினார்கட்கு — உஜ்ஜீவிப்பதற்கு உரிய நல்லறிவு உடையவர்க்கு [கீழ்க்கூறிய மெய்யர்க்கு]
ஒருவன் என்று உணர்ந்த பின்னை — 'கடவுள் ஒருவன் உண்டு' என்று நல்லறிவு பிறந்த பின்பு
ஐயப்பாடு அறுத்து — பின்னும் வரக்கூடிய ஸந்தேகங்களைப்போக்கி
தோன்றும் — ஸேவை ஸாதிக்கிற
அழகன் — அழகையுடைய அந்த எம்பெருமானது
ஊர் — இருப்பிடம்
அரங்கம் — திருவரங்கமாகும்;

(அன்றே-அசை; தேற்றமுமாம்.)

தம் உபதேசத்தை மதியாத ஸம்ஸாரிகளைக்குறித்து ஹிதம் கூறுவதில் நின்றும் கால்வாங்கின ஆழ்வார் – 'இந்த ஸம்ஸாரிகளுக்குள்ளே ஒருவனை என்னைப் பரோபதேசம் பண்ணவல்லேனும்படி எம்பெருமான் தன் விஷயத்தில் படிப்படியாகப் பரமபக்தியளவான ஸாற்றத்தைப் பிறப்பித்து இப்படி நிர்ஹேதுகமாகக் கடாக்ஷித்தவாறு என்னே!' என்று தமது நன்றியறிவு தோன்றக் கொண்டாடுகிறார்: இதுவன்றோ அறிவுடையாருடைய செயல்.

'தைவம் உண்டு' என்று ஆதரவோடு அங்கீகரியாவிடினும் 'தைவம் உண்டு' என்று ஒருவன் சொன்னால் அதில் ஆக்ஷேபாதிகளாலே பகைமை பாராட்டாதிருக்கும் நிலை - அத்வேஷமெனப்படும்: இதுவே பரமபக்திக்கு முதற்படி எனப்படும். ஒரு அவஸ்தையில் ஒருவனுக்கு த்வேஷம் குடிகொண்டிருந்தால் அவன் அவ்வஸ்துவைப் பற்றிச் சிந்திக்கவேமுடியாது: அன்றி, 'நேசமுமில்லை, த்வேஷமுமில்லை' என்கிற நிலைமையிலிருந்தால் அவன் நாளடைவில் அவ்வஸ்துவிடத்தில் பரமபக்திபர்யந்தமான அன்பைப் பெற்றுவிடக்கூடும் என்பது அனைவர்க்கும் அநுபவஸித்தமான விஷயம். ஆனதுபற்றியே அத்வேஷமென்பது பரமப்ரீதிக்கு முதற்படியாகக் கொள்ளப்பட்டிருக்கின்றதென்க.

இத்தகைய அத்வேஷமுடையார்க்குத் தனது ஸ்வரூபத்தைக் காட்டிக்கொடுத்தும், அவ்வாறன்றிப் பகைமை கொண்டிருக்கும் நாஸ்திகர்க்குத் தனது ஸ்வரூபத்தைக் காட்டித்தாராமலும் இருப்பவனான எம்பெருமான், 'தெய்வம் ஒன்று உண்டு' என்று மாத்திரம் கருதுபவரான அந்த ஆஸ்திகர்க்கு 'நாம் அடையவேண்டிய அக்கடவுள் தான் யாவன்? அக்கடவுளை நாம் அடையுமிடத்து நமக்கு நேரக்கூடிய இடையூறுகளைத் தவிர்ப்போன் யாவன்?' என்று இவை முதலாகத் தோன்றுகிற ஸந்தேஹங்களையெல்லாம் தனது வடிவழகு முதலியவற்றால் போக்குவான்: அப்படிப்பட்டவன் நித்யவாஸம் செய்யுமிடம் திருவரங்கம் என்பது இப்பாட்டின் கருத்து. எம்பெருமானுடைய இத்தகைய தன்மையை இவர் தம் அநுபவத்தாலே உணர்ந்து கூறினராதலால் தம்முடைய க்ருதஜ்ஞதையை வெளியிடுவது இப்பாட்டு என உரைக்கப்பட்டதென்க.

'மெய்யர்க்கு' என்பதற்கு 'தத்வஜ்ஞானமுடையவர்கட்கு' என்று பொருள் கூறவேண்டியதாயிருக்க, அங்ஙன் கூறாது 'அத்வேஷமுடையார்க்கு' என்று கூறியது எங்ஙனே? இது ஸாப்தார்த்தமாகுமோ? என்று ஸங்கிக்கக்கூடும்; கேண்மின்;—'தத்துவஞானிகட்கு எம்பெருமான் தான் மெய்யனாவான்' என்று கூறினால் அதனால் எம்பெருமானுக்கு ஒரு சிறப்புத் தோன்றாதாகையாலும், எம்பெருமானது சிறப்பைக் கூறவேண்டியது இங்கு அவசியமாகையாலும் இங்ஙனே பொருள் கூறவேண்டியதாயிற்று. அர்த்தஸ்வாரஸ்யத்திற்காக ஸப்தத்தை நெருக்கி உரைப்பது ஸாஸ்த்ரஸம்மதமென்று கீழ் (முதற்பாட்டினுரையில்) கூறப்பட்டது காண்க.

மெய்யாவது - ஆஸ்திகபுத்தி. பொய்யாவது - நாஸ்திகபுத்தி; அதாவது - கடவுளுண்டு' என்பதை அங்கீகரியாமல் தாம் கண்ணால் காண்கின்ற பொருளையே நம்புகின்ற ஞானம்; ஆகவே இப்பாட்டில் மெய்யர் என்பது ஆஸ்திகரையும், பொய்யர் என்பது நாஸ்திகரையும் குறிக்குமென்க.

விதியிலா வென்னைப்போல என்பது † மத்திமதீபமாக மெய்யர்க்கு மெய்ய

---

† மத்திமதீபமாவது — ஒரு மாளிகையின் நடுவிலே வைக்கப்பட்ட விளக்கு முன்னும் பின்னும் வெளிச்சம் தருவதுபோல, நடுநின்ற சொல்லாவது சொற்றொடராவது முன்னும் பின்னும் சென்று இயைவது.

னுவதற்கும் பொய்யர்க்குப் பொய்யனுவதற்கும் உவமையாம். எங்ஙனேயெனில் ; நான் நாஸ்திகபுத்திகொண்டு கடவுளின் உண்மையைமறந்து உலகப்பொருள்களிடத்துப் பற்றுக்கொண்டு திரிந்த கீழ்நாள்களிலெல்லாம் அவ்வெம்பெருமானும் என்னைக்கிட்டாமல், தான் ஒருவன் உளன் என்றும் தோன்றாதபடி உபேக்ஷித்திருந்தான் ; எனக்கு ஆஸ்திகபுத்தியால் எம்பெருமானிடத்து அத்வேஷம் தோன்றிய இப்போதோ அவ்வெம்பெருமான் தனது ஸ்வரூபமெல்லாம் நன்கு தோன்றுமாறு விசேஷஜ்ஞானத்தைப் பிறப்பித்தானெனக் காண்க.

ஞானம் பிறந்தபின்பு இவ்வாழ்வார் தம்மைக்குறித்து "விதியிலாவென்னை" என்று வெறுத்துக்கூறுவது — முன்னமே எம்பெருமானைக்கிட்டித் தாம் ஈடேறவேண்டியிருக்க, அங்ஙனமில்லாமல் நெடுநாள் அவனை யிழந்துகிடந்த தமது தௌர்ப்பாக்யத்தை நினைப்பதனாலாம். "பழுதேபலபகலும் போயினவென்று அஞ்சியழுதேன்" என்றார் பொய்கையாழ்வாரும்.

இப்படி ஆஸ்திகபுத்திமாத்திரத்தையே வியாஜமாகக்கொண்டு தத்வஜ்ஞானம் நிரம்பாத உயிர்களையும் எம்பெருமான் காத்தருள்வதற்குக் காரணம் — அவர்கட்கெல்லாம் தாம் ஸ்வாமியாயிருப்பதே என்பது தோன்றக் கோமான் என்றார். "ஸம்பந்நராயிருக்குமவர்களேயாகிலும் ஒருகாசு விழுந்தவிடத்தே போய்த் தேடாநிற்பர்களாய்த்து - தந்தாம் வஸ்துவை விடமாட்டாமையாலே" என்ற வியாக்யான ஸூக்தியை நோக்குக.

உய்யப்போமுணர்வு—ஆஸ்திகபுத்தி. அல்லது, யாத்ருச்சிக ஸுக்ருதமடியாக 'நாம் ஆர்?' நாம் நின்றநிலை என்?' என்றும் 'மேல்நமக்குப் போக்கடி ஏது?' என்றும் பிறக்கிற ஆராய்ச்சியுணர்வாகவுமாம்.

ஒருவனேன்றுணர்ந்தபின்னை—கேவலம் தேஹமே அன்று உள்ளது ; தேஹாதிரிக்தமாயிருப்பதொரு ஆத்மா உண்டு ; அவனுக்கு ஸ்வாமியாயிருப்பானொரு எம்பெருமானுமுண்டு, என்னும் அறிவு பிறந்தபின்பு என்றபடி.

ஐயப்பாடு—ஐயம், படு என்ற இரண்டு சொற்கள் சேர்ந்து ஒருசொல்தன்மைப்பட்டு ஐயப்படு என்று முதனிலையாகி அது ஐயப்பாடு எனத்திரிந்தது ; முதனிலைதிரிந்த தொழிற்பெயர். (கரு)

சூதனய்க் கள்வனுகித் தூர்த்தரோ டிசைந்தகாலம்
மாதரார் கயற்கணென்னும் வலையுள்பட் டழுந்துவேனைப்
போதரே யென்றுசொல்லிப் புந்தியிற்புகுந்து, தன்பால்
ஆதரம் பெருகவைத்த வழகனூ ரரங்கமன்றே. (கசு)

சூதன் ஆய் — { (முதலில்) சூதிலே ஊன்றினவனாய்
கள்வன் ஆகி — { (பிறகு) களவிலே ஆழ்ந்தவனாய்

தூர்த்தரோடு இசைந்த காலம் — { விஷயாந்தர ப்ரவணரோடே பொருந்தியிருந்த காலத்திலே

| | |
|---|---|
| மாதரார் | ஸ்திரீகளுடைய |
| கயல் கண் என்னும் | கயல்போன்ற கண்களாகிற |
| வலையுள் பட்டு | வலையினுள்ளே அகப்பட்டு |
| அழுந்தி வேனே | அழுந்திக்கிடக்கிற என்னை |
| போதர் என்று சொல்லி | 'அடா! இப்படிவா' என்று அருளிச்செய்து |
| புந்தியில் புகுந்து | என்மனஸ்ஸிலே வந்து புகுந்து |
| தன்பால் ஆதரம் பெருக வைத்த அழகன் | தன்னிடத்திலே அன்பை வளரச்செய்த அழகையுடைய எம்பெருமானது |
| ஊர் | இருப்பிடம் |
| அரங்கம் | திருவரங்கமாகும். |

(அன்றே—அசைநிலை ; தேற்றமுமாம்)

எம்பெருமானால் தாம் பெற்றபேற்றை மற்றொருவகையாகப் பேசுகிறார். முன்னிரண்டடிகளால்-தாம் முன்பு நின்றநிலையைக் கூறி, பின்னடிகளால்-இப்போது பெற்ற நன்மையைக் கூறுகிறார்.

ஒருவன் விஷயாந்தரங்களிலே அகப்பட்டால் அந்த சப்தாதிவிஷயங்களை இஷ்டப்படி அநுபவிப்பதற்குப் பணம் விசேஷமாக வேண்டுமாதலால் எவ்வழியிலாவது பணம் திரட்டவேண்டிச் சூதாடுவதிலும் களவுசெய்வதிலும் இறங்குவான்; சூதாவது - பச்யதோஹரத்வம்? அதாவது - ப்ரத்யக்ஷக்களவு; 'கன்னக்களவன்று' என்கிற மாத்திரமேயொழிய, களவு என்பதில் தட்டில்லை. சூதாடுகிறவன் முதலில் விசேஷலாபம் வரக்கண்டு மேன்மேலும் அதிலே முயல்வான்; அடைவிலே, சூதில்பெற்ற பொருளையும் இழந்து ஏற்கனவே கையிலுள்ளதையுமிழந்து, கௌபீநம்வரையில் அனைத்தையும் கொதுகை வைத்துத் தோற்கும்படியான நிலைமைக்கு வருவான்; இதில் இவ்வளவு தலையானவாறே பிறகு கன்னக்களவிலே கைவைப்பான். அதிலே ஏகாகியாகத் திருடுவது சிலநாள்வரையில்; தேர்ச்சிபெற்றவாறே நீவட்டிக் கொள்ளையி லிறங்குவான்; அது ஒருவனுக்குச் செய்யக்கூடிய காரியமன்றாகையால் பலரையும் துணைகூட்டிக்கொள்வான். நானும் தூர்த்தரோடு நெருங்கினவாறே அவர்கள் மாதரார்கயற்கணென்னும் வலையில்பட்டழுந்தும்படி செய்வார்கள். அதற்கு மேற்பட்ட ஆபத்து வேறொன்று சொல்லவேண்டா. இத்தனையும் தமக்கு உண்டானதாகச் சொல்லுகிறார் இவ்வாழ்வார்.

ஸ்வாபதேசத்திலே சூதாவது—விவேகியாயிருப்பானொருவன் "ஈச்வரசேஷனான ஆத்மா உண்டு; ஸர்வசேஷியான ஈச்வரனுண்டு; புண்யபாப வகுப்பு உண்டு, பரலோகமுண்டு" என்றிப்படி நற்பொருள்களையெடுத்து விளம்பினால் மாயச்சொற்களாலே "இவையொன்றுமில்லை" என்று அவன் கையெழுத்திடும்படி அவனை மயக்கிமிக்க நாஸ்திகனாக்கித் தன்வகுப்பில் இணைக்கிக்கொள்ளுகை. களவாவது—"கிம்தேந ந க்ருதம் பாபம் சோரேணாத்மாபஹாரிணா" என்றபடி-எம்பெருமானுக்கு சேஷமாய் கௌஸ்துபஸ்தாநீயனான ஆத்மாவைத் தன்னதென்றிருக்கை.

இப்படிப்பட்ட அபசாரிதங்களாலே எம்பெருமானுடைய அலம்புரிந்த நெடுந் தடக்கைக்கும் எட்டாமல் நெடுந்தூரஞ்சென்ற என்னை அவ்வெம்பெருமானுடைய அழகானது 'பயலே! இங்குவா' என்றழைக்க, அதை நான் செவியிலேற்றுக்கொள்ளாமற்போக, பின்னையும் அவ்வழகு என்னை விடமாட்டாதே என் நெஞ்சினுள்ளே வந்து சிக்கனப்புகுந்து ஸ்திரமாகக்குடியிருந்து எம்பெருமான் பக்கலில் நான் மிக்க ஆதாரம் வைக்கும்படி செய்த விசித்திரம் என்னே! என்று சிந்தித்து உருகுகின்றனர்-பின்னடிகளில்.

இங்கு முக்கியமாகக் கவனிக்கவேண்டிய விஷயம்:—"தன்பால் ஆதரம்பெருக வைத்த" என்ற அடைமொழியை அழகனிடத்திலே அந்வயித்துப் பொருளுரைப்பர் பெரும்பான்மையர்; அது மிக்க சுவைக்கேடு; அவ்வடைமொழியை அழகிலே அந்வயிக்கவேண்டும்:—எம்பெருமான் ஓர் அழகு உடையவன்; அவ்வழகு எப்படிப்பட்டதென்றால், சூதனாய்க் கள்வனாகி......வலையுள்பட்டழுந்துவேனைப் போதரேயென்று சொல்லிப் புந்தியிற்புகுந்து தன்பால் ஆதரம் பெருகவைத்தது-என்றிங்ஙனே உய்த்துணர்க. தன்பால்-எம்பெருமானிடத்திலே என்றபடி. "பக்திவர்த்தகமான கர்மஜ்ஞானஸ்தானத்திலே நிற்கிறதாய்த்து இவர்க்கு வடிவழகு. இவர்க்கு ஸம்சயத்தை அறுக்கைக்கும் ஆதரத்தைப் பெருக்குகைக்கும் ஸாமக்ரி ஒன்றேயாய்த்து" என்ற வ்யாக்யானபங்க்திகளை உற்று நோக்குக. ... .... ... ... (கசு)

விரும்பி நின்றேத்தமாட்டேன் விதியிலேன் மதியொன்றில்லை
இரும்புபோல் வலியநெஞ்ச மிறையிறை யுருகும்வண்ணம்
சுரும்பமர் சோலைசூழ்ந்த வரங்கமா கோயில்கொண்ட
கரும்பினைக் கண்டுகொண்டேன் கண்ணிணை களிக்குமாறே! (கஎ)

விரும்பி நின்று { ஆதரத்தோடே ஒருபடிப்பட நின்று

ஏத்த மாட்டேன் { ஸ்தோத்ரம் பண்ணமாட்டாதவனாயிராநின்றேன்;

விதி இலேன் - { (கைகூப்புதல் முதலிய) காயிகவ்யாபாரங்களும் செய்யப்பெறாதவனாயிராநின்றேன்,

மதி ஒன்று இல்லை { ('ஈச்வரன் ஒருவன் உண்டு' என்கிற) ஒரு அறிவும் (எனக்கு) இல்லை;

(இப்படிப்பட்ட என்னுடைய)

இரும்பு போல வலிய நெஞ்சம் } இரும்பைப்போல் கடினமான கல்நெஞ்சானது

இறை இறை உருகும் வண்ணம் } கொஞ்சம் கொஞ்சமாக உருகும்படி;

சுரும்பு அமர் வண்டுகள் பொருந்திய

சோலை சூழ்ந்த சோலைகளாலே சூழப்பட்ட

மா அரங்கம் { மாட்சிமை தங்கிய ஸ்ரீரங்கத்தை

கோயில் கொண்ட { இருப்பிடமாகத் திருவுள்ளம் பற்றின

கரும்பினை { பரமபோக்யனான எம்பெருமானை

என் கண் இணை { எனது இரண்டு கண்களும்

கண்டு கொண்டு } பார்த்துவண்ணமாய்

களிக்கும் ஆறு ஏ { மகிழ்ச்சியடைகிற விதம் என்னே!

(என்று ஆச்சர்யப்படுகிறபடி.)

தரித்ரனுக்கு நித்ய பாயஸம் கிடைத்தாற்போலே, ஒருவகை யோக்யதையுமில்லாத கல்நெஞ்சனான எனக்கு அழகிய மணவாளன் ஸேவை ஸாதிக்கப் பெற்ற பாக்யத்தை நான் என்னவென்று சொல்லுவேன் என்று தடுமாறுகின்றனர்.

மனஸ்ஸு, வாக்கு, காயம் என்ற மூன்று வகையுறுப்புகளில் ஒன்றினாலும் நான் பகவத்விஷயத்தில் அந்வயிக்கப்பெறவில்லை; சிறிதுகாலமாகிலும் ஒருபடிப்பட நிலைத்துநின்று உண்மையான அன்புடன் ஸ்தோத்ரஞ் செய்யுமவனல்லேனாதலால் வாய்படைத்த பயன் பெற்றிலேன்; ("நின் தலையைத் தாழ்த்து இருகைகூப்பென்றால் கூப்பாத பாழ்த்தவிதி" என்றபடி) ஒரு அஞ்ஜலியும் நேராகச் செய்யமாட்டாதவனாகையால் காயம்படைத்த பயனும் பெற்றிலேன்; எம்பெருமானுடைய ஸ்வரூபம் ரூபம் குணம் விபூதி இவற்றைப்பற்றி விசேஷமாகச் சிந்திக்க மாட்டாமற்போனாலும், 'எம்பெருமான் ஒருவன் உண்டு' என்று அவனுடைய ஸத்தையையாகிலும் சிந்திக்கலாமே; அதுவும் சிந்தித்திலேனாதலால் மனம்படைத்த பயனும் பெற்றிலேன். இனிமேலாவது மநஸ்ஸைத் திருத்திக்கொள்ளக்கூடுமோ வென்று பார்த்தாலும், அதற்கும் யோக்யதையில்லாதபடி மனம் கல்லாய்க்கிடக்கிறது.

["இரும்புபோல் நெஞ்சம்" என்னுமளவே போதுமாயிருக்க, 'வலிய' என்று விசேஷித்ததற்குக் கருத்து யாதெனில்; "இரும்புபோல்" என்று சொன்னவுடனே நமது நெஞ்சுக்கு இரும்பை உவமை கூறியது ஒக்குமோவென்று ஆராய்ந்தார்; இரும்பை நெருப்பிலே காய்ச்சி நிமிர்த்துக்கொள்ளலாம்; நமது நெஞ்சு ஒருபடியாலும் ஸர்வசக்தனாலும் நிமிர்க்க முடியாதிருத்தலால் இவ்வுபமானம் ஒவ்வாது, வேறு எவ்வுபமானமும் ஏலாது என்றெண்ணி, வலிய என்றார். ஸாமாந்யமாக, 'கடினமான நெஞ்சு' என்னலாமேயொழிய, இன்னதுபோல் கடினமானதென்று சொல்லமுடியாதென்க.]

இத்தன்மைய கல்நெஞ்சம் கரையும்படியாயன்றோ எம்பெருமான் கோயிலிலே கண்வளர்ந்தருள்வது! "[illegible] ॥—கதளவகுள ஜம்பூபூகமாகந்த கண்ட த்வயஸரஸநீராமந்தார ஸஹ்ய கன்யாம்: ப்ரபல ஜலபிபாஸாலம்பமாநாம்பு தைவகப்ரமதா தருப்ருந்தம் வந்த்யதாமந்தரீபம்" என்று ஸ்ரீரங்கராஜஸ்தவத்திலே பட்டர் மங்களாசாஸநஞ் செய்தருளியபடி சோலைவாய்ப்பு அமைந்த அரங்கமாநகரில் அமர்ந்தநாதனை என் கண்கள் கண்டுகளிக்கும் விதத்திற்கு நான் என்ன பாசுரமிடுவேனென்கிறார்.

உபநிஷத்திலே "ரஸோ வை ஸ:" என்று எம்பெருமானை ரஸமயனாக ஓதியிருப்பதால், இவரும் ('கரும்பு போன்றவனை' என்னாமல்) கரும்பினை என்று ஸாக்ஷாத் கரும்பாகவே கூறுகின்றார்.

[என் கண்ணிணை களிக்குமாறே] நித்யமுக்தர்கள் “ஸதா பஶ்யந்தி ஸூரய: —ஸதா பச்யந்திஸூரய:” என்னும்படி பரவாஸுதேவனை எப்போதும் ஸேவித்து மகிழ்கிற மகிழ்ச்சிதானும் எனது மகிழ்ச்சிக்கு ஒப்பாகவற்றோ? இஃது ஒரு அத்விதீயமான மகிழ்ச்சிகாணீர்! என்பது கருத்து

உருகும் வண்ணம் என்பது-கோயில்கொண்ட என்பதனோடு அந்வயிக்கும்; கண்டுகொண்டு என்பதனோடு இயையுமென்பாருமுளர். (கஎ)

இனிதிரைத் திவலைமோத வெறியுந்தண் பரவைமீதே
தனிகிடந் தரசுசெய்யும் தாமரைக் கண்ணனெம்மான்
கனியிருந்தனைய செவ்வாய்க் கண்ணனைக் கண்டகண்கள்
பனியரும் புதிருமாலோ என்செய்கேன் பாவியேனே. (கஅ)

| | | | |
|---|---|---|---|
| திரை திவலை | அலைகளிலுண்டான திவலைகளானவை | கனி இருந்தனைய செம் வாய் கண்ணனை | கொவ்வைக்கனி போன்று சிவந்த வாயையுடையனான கண்ணபிரானை |
| இனிது மோத | இனிதாக அடிக்க, [வீச] | | |
| எறியும் | கொந்தளிக்கிற | | |
| தண் | குளிர்ந்த | கண்ட கண்கள் | ஸேவிக்கப்பெற்ற (எனது) கண்களில் நின்றும் |
| பரவை மீது | கடல்போன்ற திருக்காவேரியிலே | பனி அரும்பு | குளிர்ந்த கண்ணநீர்த்துளிகள் |
| தனி கிடந்து | தனியே வந்து கண்வளர்ந்தருளி | உதிரும் | பெருகாநின்றன; |
| அரசு செய்யும் | செங்கோல் செலுத்துகிற | பாவியேன் | (கண்ணாரக்கண்டு களிக்கைக்குப்) பாக்கியமில்லாத நான் |
| தாமரை கண்ணன் | புண்டரீகாக்ஷனாய் | | |
| எம்மான் | எமக்குத் தலைவனாய் | என் செய்கேன் | ஏது செய்வேன்? |

எம்பெருமானை ஸேவிக்கப்பெற்றமைக்கு உகந்து உரைத்த ஆழ்வார், கண்களினுடைய களிப்புக்குப் போக்குவீடான ஆநந்தக்கண்ணீர் பெருகப்பெற்று, ‘ஐயோ! இக்கண்ணீர் அரும்பரும்பாகத் துளித்துக் கண்களை மறைத்து எம்பெருமானை இடைவிடாது ஸேவிக்கவொட்டாமல் இடைச்சுவராய்த் தடை செய்கின்றனவே! கைக்கு எட்டினது வாய்க்கு எட்டாதொழியும்படி மஹா பாபத்தைப் பண்ணினநான் இந்த துக்கத்திற்கு எங்குப்போய் முறையிட்டுக் கொள்வேன்’ என்று வெறுக்கிறார்.

பரவை என்று கடலுக்குப் பெயர்: திருப்பாற்கடலிலே கண்வளர்ந்தருளுகிறவன் திருக்காவிரியிடையிலே வந்து கண்வளர்ந்தருள்வதாக அநுஸந்திக்கிறார் என்னலாம்: அன்றியே, காவேரிதான் ஒரு பெருங்கடல் பெருகுமாபோலே பெருவெள்ளங் கோத்துப் புரளுகையாலே காவேரியையே கடலாகச் சொல்லிற்றாகவுமாம். முற்றுவமை.

**தனி கிடந்து** - பிராட்டிமாருமில்லாமல் பரதேசியாய்க் கிடக்கிறானென்றபடியன்று; இவைவறிந்து பரிமாறும் நித்யமுக்தாதிகளை ஒருகாடாக வுடையவன் அவர்களையெல்லாம் விட்டுவிட்டு, ஸம்ஸாரிகள் பக்கல் நசையாலே "ஒருவனாகிலும் கிடைக்கக்கூடுமோ?" என்று வந்து கிடக்கும்படியைச் சொல்லுகிறது. **தனி** - ஒப்பில்லாதபடி என்றுமாம்.

அரசு செய்கையாவது - விரோதிநிரஸநம் செய்கை; அதாவது — 'அஹம் மம' என்றிருக்கும் ஸம்ஸாரிகளின் பாழான நிலைமையைக் குலைத்து 'நம:' என்னும்படி செய்துகொள்ளுகை. 'ஸோஹம்' என்பாரை 'தாஸோஹம்' [தாஸோஹம்] என்னப்பண்ணவல்ல வடிவழகு படைத்தவனிறே எம்பெருமான். "பொங்கோதஞ் சூழ்ந்த புவனியும் விண்ணுலகும், அங்காதுஞ் சோராமே ஆள்கின்ற எம்பெருமான், செங்கோலுடைய திருவரங்கச் செல்வனார்" என்ற நாய்ச்சியார்திருமொழியை இங்கு அநுஸந்திக்க. "அரசு செய்யுந் தாமரைக் கண்ணன்" என்ற சொற்போக்கால்-எம்பெருமான் தனது திருக்கண்ணழகால் அனைவரையும் அகப்படுத்திக் கொள்ளுகிறான் என விளங்கும்.

"இப்ப்ரஹ்மாஸ்த்ரத்துக்கு அகப்பட்டார் ஆரென்னில்; [எம்மான்] நான் தோற்று என்னை எழுதிக்கொடுத்தேன்: ஸம்ஸாரிகளுக்கும் இவ்வருகான என்னைத் தோற்பித்த கண்களுக்கு இனி வெல்லவொண்ணாத நிலமுண்டோ?" என்ற வியாக்யான ஸ்ரீஸூக்திகளின் ரஸத்தைச் சிறிது பருகுக.

பெரியபெருமாளை ஸேவித்தால், அவதாரத்திற் பிற்பட்டவர்கட்கும் உதவுகைக்காகக் கண்ணபிரான்தான் வந்து கண்வளர்ந்தருளுகிறானென்று ஸ்மரிக்கலாம்படி யிருக்குமாதலால் கண்ணனை என்கிறார்: "கோவலனாய் வெண்ணெயுண்டவாயன்........அண்டர்கோனணியரங்கன்" என்றார் திருப்பாணாழ்வாரும். இவ்விடத்திலே பட்டர் அருளிச்செய்யும்படி:—"யசோதைப்பிராட்டி பிள்ளை மனம் கன்றாமல் தீம்பிலே கை வளரும்படி வளர்த்த மொசுமொசுப்பெல்லாம் பெரியபெருமாள் பக்கலில் தோற்றியிருக்கும்: வஸிஷ்டாதிகளாலே ஸுஶிக்ஷிதராய் வளர்ந்து வடிந்த விநயமெல்லாம் தோற்றும்படியான சக்ரவர்த்தி திருமகனை ஸ்மரிக்கலாம் படியிருக்கும் - நம்பெருமாளைக் கண்டால்" என்று.

**இனிது + திரை** - இனிதிரை; கடைக்குறை. **இருந்தனைய**-இருந்தாலனைய; இருந்தாற்போன்ற என்றபடி. ஆல் ஓ - வியப்பிடைச்சொற்கள்; இரக்கமும் கூப்பிடும் தோற்றுகிற குறிப்பிடைச் சொற்களுமாம். என்-எவன் என்னும் வினாவின் விகாரம். செய்கேன் - ககரவிடைநிலை எதிர்காலம் காட்டிற்று. (௧௮)

குடதிசை முடியைவைத்துக் குணதிசை பாதம்நீட்டி
வடதிசை பின்புகாட்டித் தென்திசை யிலங்கைநோக்கிக்
கடல்நிறக் கடவுளெந்தை யரவணைத் துயிலுமாகண்டு
உடலெனக் குருகுமாலோ என்செய்கே னுலகத்தீரே. (௧௯)

| | |
|---|---|
| உலகத்தீரே | உலகத்திலுள்ளவர்களே! |
| கடல் நிறம் கடவுள் | கடல்போன்ற கருநிறத்தை யுடைய கடவுளான |
| எந்தை | எம்பெருமான் |
| குடதிசை | மேற்குத்திக்கில் |
| முடியை வைத்து | திருமுடியை வைத்தருளியும், |
| குணதிசை | கிழக்குத் திக்கில் |
| பாதம் நீட்டி | திருவடிகளை நீட்டியும், |
| வடதிசை | வடக்குத் திக்கிலே |
| பின்பு காட்டி | (தனது) பின்புறத்தைக் காட்டியும் |
| தென்திசை | தெற்குத் திக்கில் |
| இலங்கை | (விபீஷணன் வாழுமிடமான) லங்கையை |
| நோக்கி | (அன்போடு) பார்த்துக் கொண்டும் |
| அரவு அணை | திருவனந்தாழ்வானாகிற படுக்கையில் |
| துயிலும் ஆ | யோகநித்திரை செய்யுந் தன்மையை |
| கண்டு | காண்பதனால் |
| எனக்கு உடல் உருகும்— | |
| ஆவோ | ஐயோ |
| என் செய்கேன் | (நான்) என்ன செய்ய மாட்டுவேன். |

கண் முதலிய அவயவங்களுக்கு உண்டாகிற விகாரமேயல்லாமல் அவற்றுக்கு ஆச்ரயமாய் அவயவியான சரீரமும் கட்டழியாநின்றதே! இதற்கு என் செய்வேன்! என்கிறார். அழகியமணவாளன் நான்கு திக்குகளுக்கும் தன் ஸம்பந்தமுண்டாம்படி சேஷசாயனனாய் யோகநித்திரை செய்தருள்வதை ஸேவித்துத் தமது சரீரம் நீராய்க்கரைந்து உருகிச் செயலற்றிருத்தலை உலகத்தார்க்கு வியப்போடு அறிவிக்கின்றனரென்க.

பூமியின் ஸ்ருஷ்டி - மநுஷ்யதிர்யக்ஸ்தாவரங்களான பொருள்கள் வாழ்தற்காக என்றும் ஆகாசத்தின் ஸ்ருஷ்டி - தேவர்கள் வாழ்தற்காக என்றும் ஏற்பட்டிருக்கிறது; திக்குகளின் ஸ்ருஷ்டி வ்யர்த்தம் என்று நினைக்கவேண்டா; சேதநர்க்குத் தன்மீது அன்பை யுண்டாக்குமாறு எம்பெருமான் தான் பள்ளி கொள்வதற்காகவே திக்குகளை ஸ்ருஷ்டித்ததும் என்று இப்பாட்டால் கூறுவதாக விசேஷார்த்த முரைப்பர்.

மேலைத்திக்கு-உபயவிபூதிக்கும் தலைமை வஹித்தலைத் தெரிவிக்குமாறு தான் சூடின திருவபிஷேகத்தையுடைய திருமுடியை வைப்பதனாலும், கிழைத்திக்கு - ஸகலலோகமும் உஜ்ஜீவிக்கும்படி சரணமடைதற்குரிய தனது திருவடிகளை நீட்டுவதனாலும், வடக்குத்திக்கு - முரட்டு ஸம்ஸ்க்ருதம் நடையாடுவதாகி ஆழ்வார்களின் செவிக்கினிய சாச்சொல் நடையாடாத தேசமாகையாலே அத்திக்கிலுள்ளாரெல்லாரும் ஈடேறுதற்கு ஏற்படவேண்டிய பின்னழகை யெல்லாம் காட்டுவதனாலும், தெற்குத்திக்கு - தனது அந்தரங்க பக்தனான விபீஷணாழ்வானுக்காகத் தனது திருக்கண்களைவைத்து அன்போடு நோக்குவதனாலும் என இவ்வாறு நான்கு திக்குகளும் பயன் பெறுமென்க. விபீஷணாழ்வான் சிரஞ்ஜீவியாய் என்றும் இலங்கையில் வாழ்ந்து வருகின்றானென்பது நூற்கொள்கை.

இப்படி நாற்றிசையிலுள்ளாரும் பயன்பெற வேண்டுமென்று ஒரு வ்யாஜம் வைத்து எம்பெருமான் பள்ளிகொண்டதும் ஆழ்வார் பொருட்டாகவே யாயிற்றென்ற கருத்து மூன்றுமடியில் தோன்றும். (எந்தை)

உடல் உருகும்-உணர்வுடைய ஜீவன் உருகுவதன்றி ஜடபதார்த்தமான உடம்பும் உருகுமென்றபடி. ["எனக்கு உடலுருகுமாலோ என் செய்கேனுலகத்தீரே"]—ஆற்றுப் பெருக்கிலே அருகிலுள்ள கரைகள் உடைந்தால் கரையைப்பாதுகாப்பவர்கள் கைவிட்டுக் கடக்கநின்று கூப்பிடுமாபோலே கூப்பிடுகிறார். பெரியபெருமாளழகைக்கண்டுவைத்துக் குறியழியாதே புறப்படுகிற ஸம்ஸாரிகளைப் பார்த்து, உங்களைப்போலே உடல் உருகாதே கல்லாயிருப்பதற்கு ஒரு உபாயம் சொல்லமாட்டீர்களோ? என்கிறார்.

குடக்குத் திசை-குடதிசை; திசையொடு திசைப்பெயர் சேர நிலையீற்று உயிர் மெய்யும் ககரவொற்றும் நீங்கிற்று. குணதிசை, வடதிசை என்பனவும் இவ்வாறே. திசை-திசா. முடி-கிரீடத்துக்கு வாசகமான இச்சொல் தானியாகுபெயராய், தலையைக்குறித்தது. இலங்கை-லங்கா; கடலிடைத்தீவு. ஆ-ஆறு என்பதன் குறை. கண்டு-செய்தென்னும் வாய்பாட்டு வினையெச்சம் காரணப் பொருளில் வந்தது. உலகத்தீரே-உலகத்தார் என்பதன் ஈற்றயல் திரிந்து ஏகாரம் மிக்குவந்த விளிப்பெயர்.

"உடலம் நெக்குருகுமாலோ" என்பது பாடபேதம்: நெக்கு-கரைந்து என்றபடி. (௰௯)

பாயுநீ ரரங்கத்தன்னுள் பாம்பணைப் பள்ளிகொண்ட
மாயனார் திருநன்மார்வும் மரதகவுருவும் தோளும்
தூயதாமரைக் கண்களும் துவரிதழ்ப் பவளவாயும்
ஆயசீர் முடியுந்தேசு மடியரோர்க் ககலலாமே. (உ௰)

| | |
|---|---|
| பாயும் நீர் | பாய்கின்றுள்ள காவிரி சூழ்ந்த |
| அரங்கம் தன்னுள் | கோயிலிலே |
| பாம்பு அணை | சேஷசயநத்திலே |
| பள்ளி கொண்ட | கண்வளர்ந்தருளாநின்ற |
| மாயனார் | ஆச்சரிய சக்திவாய்ந்த எம்பெருமானது |
| திரு நல் மார்வும் | பிராட்டி வாழ்கின்ற விலக்ஷணமான மார்பும், |
| மரதகம் உருவும் | மரகதமணிபோன்ற திருமேனி நிறமும் |
| தோளும் | திருத்தோள்களும் |
| தூய தாமரை கண்களும் | பரிசுத்தமான தாமரை மலர் போன்ற திருக்கண்களும் |
| துவர் இதழ் | சிவந்த அதரமும் |
| பவளம் வாயும் | பவளம்போன்ற வாயும் |
| ஆய சீர் முடியும் | வேலைப்பாடுள்ள அழகிய திருமுடியும் |
| தேசும் | (இவற்றாலுண்டான) தேஜஸ்ஸும். |
| அடியரோர்க்கு | ஸ்வரூபஜ்ஞாநமுடைய தாஸர்களுக்கு |
| அகலலாமே | இழக்கத்தகுமோ? |

கீழ் "பனியரும்பு உதிருமாலோ என் செய்கேன் பாவியேனே" என்றும், "உடலெனக் குருகுமாலோ என் செய்கே னுலகத்தீரே" என்றும் கதறின ஆழ்வாரை நோக்கிச் சில ஸம்ஸாரிகள் 'ஐய்! பகவத் விஷயத்திலே அகப்பட்டு ஏன் இங்ஙனே கதறுகிறீர்? அதில் ஊற்றத்தைவிட்டு எங்களோடே கூடினீராகில் 'என் செய்கேன்! என்செய்கேன்!!' என்று வாய்வெருவ வேண்டாதபடி தரித்து ஸுகமே வாழலாமே! உம்முடைய ஸ்வயம்க்ருதாநர்த்தம் மிகவும் அழகிது!" என்றாற்போலே சில சொல்ல; அதுகேட்ட ஆழ்வார், 'பாவிகாள்! கண்வளர்ந்தருளுகிற அழகைக்கண்டுவைத்து, 'இவ்வழகெல்லாம் நமக்காகவாயிற்று?' என்று களிக்கும்படியான ஸ்வரூபஜ்ஞானமுடைய எங்களுக்கு; "அஹம்-மம" என்றிருக்கிற உங்களைப்போல் அகலமுடியுமோ? என்கிறார்.

எம்பெருமானுடைய அதிசயங்களை வெறும் எட்டுப்புறத்தில் கேட்டுப்போகையன்றிக்கே, பரமபாவனமான திருவரங்கத் திருப்பதியிலே திருவனந்தாழ்வான்மீது "தன் தாளுந் தோளும் முடிகளும் சமனிலாத பல பரப்பி" என்றபடி ஸகல அவயவ ஸௌந்தரியமும் நன்கு விளங்கும்படி சாய்ந்தருள்கின்ற எம்பெருமானது திவ்ய தேஜஸ்ஸைக் காணப்பெற்றவர்களும் மீண்டு கால்பேர்ந்து விலகமுடியுமோ? என்க.

மாயனார் - தனது நெடுங்கைக்கும் எட்டாமல் "ஓடினேனோடி" என்னும்படி நெடுந்தூரம் ஸம்ஸாரத்திலுள் ஓடிப்போன என்னைப் பிடித்திழுத்துக்கொண்டவனுடைய சக்தி ஆச்சரியமாயிராநின்றது காணீர்! என்கிறார்.

தூய என்னும் அடைமொழி கண்களில் இயையும்: கடாக்ஷிக்கப் பெற்றவர்கள் பரிசுத்தராவதற்கு உறுப்பான பரிசுத்தியைச் சொல்லுகிறது. "ச்ரமணீ விதுரருஷிபத்னிகளைப் பூதராக்கின புண்டரீகாக்ஷன் நெடுநோக்கு-சாபமிழிக்கென்னப் பண்ணுமிறே" என்ற ஆசார்யஹ்ருதய ஸூத்ரார்த்தம் இங்கு அநுஸந்திப்பது.

தேசு - 'தேஜஸ்' என்னும் வடசொற் சிதைவு. (உ௦)

பணிவினால் மனமதொன்றிப் பவளவா யரங்கனார்க்குத்
துணிவினால் வாழமாட்டாத் தொல்லைநெஞ்சே நீசொல்லாய்
அணியினார் செம்பொனாய அருவரை யனையகோயில்
மணியனார் கிடந்தவாற்றை மனத்தினால் நினைக்கலாமே? (உக)

| | | | |
|---|---|---|---|
| பவளம் வாய் | பவளம்போன்ற அதரத்தையுடைய | அணிவினால் | அணிவுடன் |
| அரங்கனார்க்கு | அழகிய மணவாளன் விஷயத்திலே | வாழமாட்டா | வாழமாட்டாத |
| பணிவினால் | கைங்கர்யருசியால் | தொல்லை நெஞ்சே | கிழத்தன முள்ள மநஸ்ஸே! |
| மனம் அது ஒன்றி | கருத்தைப் பொருந்த வைத்து | அணியின் ஆர் | அழகினாலே பூர்ணமாய் |

| | |
|---|---|
| செம் பொன் ஆய அரு வரை அனைய | செவ்விய பொன்னாலே செய்யப்பட்ட சிறந்த மேரு பர்வதத்தையொத்த |
| கோயில் | கோயிலிலே |
| மணி அனார் | நீலமணிபோன்ற எம்பெருமான் |
| கிடந்த ஆற்றை | கண்வளர்ந்தருளுகிறபடியை |
| மனத்தினால் | நெஞ்சினால் |
| நினைக்கல் ஆமே | (அளவிட்டு) அறியக்கூடுமோ ? |
| நீ சொல்லாய் | நீயே சொல்லிக்காண். |

" கரும்பினைக்கண்டுகொண்டு " என்றும், " அரவணைத் துயிலுமா கண்டு " என்றும் அழகியமணவாளனை நீர் கண்ணால் கண்டமையாலன்றோ " என்செய்கேன் ! என்செய்கேன் !! " என்று தவிக்கிறீர் ; அப்பெருமான் பள்ளிகொண்டருளும்படியைக் கண்ணால் காணவேண்டா ; ஒரு மூலையிலே உட்கார்ந்து நெஞ்சினால் த்யாநஞ்செய்துகொண்டிரும் என்று சிலர் சொல்ல, அதற்கு உத்தரமாகத் தமது திருவுள்ளத்தை நோக்கிக் கூறுகின்றார் - அப்பெருமான் பள்ளிகொண்டருளுமாற்றை நெஞ்சினால்தான் நினைத்துத் தரித்திருக்க முடியுமோ ? என்கிறார்.

நெஞ்சால் நினைக்கமுடியாதென்பதை உபபாதிப்பன-முன் இரண்டடிகள்.

நெஞ்சே ! நீ வெகுகாலத்தைப் பாழே கழித்தவனல்லையோ ? நீ அறகூலப்பட்டிருந்தாயாகில் முன்னமே உஜ்ஜீவித்திருக்கலாமன்றோ ? அதற்காக நீ செய்திருக்கவேண்டிய காரியமும் அதிகமொன்றுமில்லை ; உன்னுடைய சிந்தனையை எம்பெருமான் விஷயத்திலே செலுத்தி அவனைப் பணிவதாக நிலைநிறுத்தி, ' இனி நாம் பணியவேண்டிய வ்யக்தி வேறில்லை ' என்று திண்ணிதாக அத்யவஸாயங்கொண்டிருந்தால் இவ்வளவேபோரும் உஜ்ஜீவநத்திற்கு; வெகுகாலமாக இப்படிப்பட்ட பணிவும் அத்யவஸாயமும் இல்லாமல் நெடுநாளாகப் பாழாய்ப் போனவனன்றோ நீ ; இப்படி சிறிதுகாலம் ஒரு விஷயத்திலே நிலைநிற்க மாட்டாத நீ எம்பெருமான் அரவணைமேல் சாய்ந்தருளும்படியை நினைப்பதென்றால் இது கூடுமான காரியமா என்பதை நீயே ஆராய்ந்துபார் என்கிறார் என்னவுமாம்.

[பணிவினல் மனமது ஒன்றி.] இங்கு மனம் என்று மநோவ்ருத்தியாகிய சிந்தனையைச் சொல்லுகிறது. ஒன்றி-பிறவினைப் பொருளில் வந்த தன்வினை ; ஒன்றுவித்து என்றபடி.

சிந்தனையைப் பணிவினல் ஒன்றுவித்தலாவது-எம்பெருமானைப் பணிவதாக முயற்சி செய்தல். " இதர விஷயங்களிலே போகிற நெஞ்சை அவற்றில் நின்றும் மீட்டு ப்ராப்த விஷயத்திலே ப்ரவணமாக்குவோமென்னும் உத்யோகமாத்ரமே யாய்த்து இவ்விஷயத்துக்கு வேண்டுவது " என்பர் பெரியவாச்சான்பிள்ளையும்.

நன்றாகப் பணிந்தபின்பு பலன் கைகூடுமேயன்றி, பணிவதாக முயற்சி செய்தலும் போருமென்கை சேருமோ ? என்று சங்கிக்கவேண்டா ; ஒரு த்ருஷ்டாந்தம் காண்மின் ; ஒருவன் ஒருவனை அடிப்பதாகக் கையைத் தூக்குகிறான் ; ஆனால் அவனுடைய கை எதிரியின் உடலில் படவில்லை ; கைபோங்கின

மாத்திரமே யுள்ளது; இவ்வளவேயாயினும், எதிரியானவன் உள்ளதனையும் 'இவன் என்னைப் பரிபவப்படுத்தினன்' என்று நால்வர் ஐவர் திரண்ட இடமெங்கும் இது ஒரு பெரிய ப்ரவாதமாகச் சொல்லிக் கொள்வதற்குக் காரணமாகின்றது; அவ்வாறாகவே, சேதநன் ஈச்வரனைப் பணியாவிடினும் பணிவதாக ஒருப்பட்டாலும் அவ்வளவைக் கொண்டு எம்பெருமான் "இவன் என்னை பஹுமானித்தான்" என்று உள்ளதனையும் சொல்லிக்கொண்டு காரியஞ் செய்தற்கு வ்யாஜமாகுமென்க "தொழக்கருதுவதே துணிவதுசூதே" என்ற திருவாய்மொழியையும் நோக்குக.

துணிவினால்—க்ருதாத்யவஸாயத்தினால் என்றபடி. வாழமாட்டாஎன்று—இத்தனைகாலமாக வாழாதொழிந்தமையைக் கூறியவாறு. [தோல்லை நேஞ்சே] இழவிலே உள்ள தொன்மையை [அநாதித்வத்தை] நெஞ்சிலே ஏறிட்டுக் கூறுகிறபடி; அநாதிகாலம் வாழ்ச்சியை இழந்தொழிந்த நெஞ்சே! என்றவாறு.

[அணியினார் இத்யாதி.] மஹாமேருவைப் புடைபடத் துளைத்து அதுவிம் மும்படி அதிலே ஒரு நீலரத்நத்தை அழுத்தினாற்போலாய்த்துக் கோயிலாழ்வார்க்குள்ளே பெரியபெருமாள் கண்வளர்ந்தருளுகிறபடி. "ஸ்ரீரங்க [illegible] ஸ்ரீபூமி [illegible] | [illegible] — ஸ்ரீரங்காக்தர்மந்திரம்தீப்ர சேஷம் ஸ்ரீபூமிதத்ரம்ய ஜாமாத்ருகர்ப்பம் | பச்யேம ஸ்ரீ திவ்யமாணிக்ய பூஷாமஞ்ஜூஷாயாஸ்துல்ய முந்மீலிதாயா:" என்ற பட்டர் ஸ்ரீஸூக்தி இவ்வருளிச் செயலின் கருத்தை ஒரு புடை உட்கொண்டுளதென்றுணர்க.

மணி அனார்—'அன்னார்' என்பது 'அனார்' எனத் தொக்கிக்கிடக்கிறது. (உக)

பேசிற்றே பேசலல்லால் பெருமையொன் றுணரலாகாது
ஆசற்றார் தங்கட்கல்லா லறியலா வானுமல்லன்
மாசற்றார் மனத்துளானை வணங்கிநா மிருப்பதல்லால்
பேசத்தா னாவதுண்டோ பேதைநெஞ்சே நீசொல்லாய். (உஉ)

பேதை நெஞ்சே } விவேகமற்ற மனமே!

பேசிற்றே { (வேதங்களும் வைதிக புருஷர்களும்) பேசின பேச்சுக்களையே

பேசல் அல்லால் { (நாமும்) பேசுவதே யல்லாமல்

பெருமை { (எம்பெருமானது) மேன்மையிலே

ஒன்று — ஏகதேசமும்

உணரல் ஆகாது — அறியமுடியாது;

ஆசு அற்றார் தங்கட்கு அல்லால் { உபாயாந்தரசம்பந்தமாகிற குற்றமற்றவர்களுக்குத் தவிர (மற்றையோர்க்கு)

அறியல் ஆவானும் அல்லன் } அறிய முடியாதவனுமாயிருக்கின்றான் (அவன்);

மாசு அற்றார் மனத்து உளானை { குற்றமற்ற பெரியோர்களின் நெஞ்சில் நித்யவாஸம் செய்பவனை

நாம் வணங்கி இருப்பது அல்லால் { நாம் வணங்கிக்கொண்டு காலங்கழிக்கலாமத்தனையொழிய

பேச தான் ஆவது உண்டோ { (அவன் பெருமையைக் கோவைப்) பாசுரமிட்டுப் பேசும்படியாயிராகின்றதோ?

நீ சொல்லாய்—.

நினைக்கமுடியாதாகில் வாய்விட்டுப் பேசினாலேயென்ன ; "மநஃ பூர்வோ வாகுத்தரஃ" என்றன்றோ சொல்லியிருப்பது ; மநஸ்ஸாலே பரிச்சேதிக்க வொண்ணாத விஷயத்தைப் பாசுரமிட்டு முடிக்கப்போமோ என்கிறார்.

பேசமுடியாதென்றால் பேசுவதை விட்டு விலகி வாய்மூட வேண்டாவோ? பின்னையும் பேசிக்கொண்டே இருக்கிறதென் ? என்ன ; ஊமையாகப் பிறவாமல் நாலாறு வார்த்தைகள் சொல்லும்படியாகப் பிறந்தோமாதலால், வேதங்களும் வைதிகோத்தமர்களும் சொல்லிப்போன பேச்சுக்களில் ஏதோ சிலவற்றைச் சொல்லிக்கொண்டிருக்கிறோமே யொழிய, எம்பெருமானுடைய பெருமைகளை யெல்லாம் அறிந்து பேசுகிறபடியன்று என்கிறார் முதலடியில்; "திறமுயர் கோலமும் பேருமுருவு மிவையிவையென்று, அறமுயல் ஞானச் சமயிகள் பேசிலுமங்கங்கெல்லாம், உறவுயர் ஞானச்சுடர் விளக்காய் நின்றதன்றி யொன்றும், பெறமுயன்றாரில்லையால் எம்பிரான பெருமையையே" என்ற திருவிருத்தத்தை ஒருபுடை ஒத்திருக்கும் இது.

அன்றியே ; "யதோ வாசோ நிவர்த்தந்தே—யதோவாசோ நிவர்த்தந்தே" என்று வேதம் பேசினபடியே நாமும் "எம்பெருமானுடைய பெருமையைப் பேசமுடியாது" என்று பேசுமத்தனையல்லது பெருமை அறியமுடியாது - என்றும் பொருள்படும்.

பெருமை அறியமுடியாதென்கிறீரே ; அப்படி சொல்லலாமா? "கண்ணுவசார் நலிவெய்த நல்லவமார் பொலிவெய்த, என்னாதனக ளெண்ணும் நன்முனிவரின்பந்தலைச் சிறப்பப், பண்ணார் பாடலின் கவிகள்" பாடின நம்மாழ்வார் போல்வார் அறிந்தபேர்களன்றோ? அவர்களுக்குங்கூடவா அறியமுடியாது? என்று கேட்க; அப்படிப்பட்ட சில மஹாநுபாவர்கள் தவிர மற்றையோர்க்கு அறியப்போகாதென்கிறார் - இரண்டாமடியால்.

ஆக - குற்றம் ; அது அற்றவர்கள்—நம்மாழ்வார் போல்வார் : எம்பெருமானைத் தவிர்த்து அசேதந க்ரியாகலாபங்களை உபாயமாக மதிக்கையாகிற குற்றமில்லாதவர்கள் ; நாகணைமிசை நம்பிரான் சரணே சரண் நமக்கென்று நாடொறு மேகசிந்தையராயிருக்கும் ஸித்தோபாய விஸ்வாஸிகள்.

அவ்வாழ்வார்களாவல்லாத நம்போலியர் செய்யவேண்டியதைக் கூறுவது மூன்றாமடி. மாசு என்றாலும் குற்றமே பொருள். பரமபுருஷார்த்தத்தை விட்டு அல்ப ப்ரயோஜநங்களிலே விருப்பமுற்றிருக்கையாகிற தோஷமற்ற பெரியாழ்வார் போல்வாருடைய திருவுள்ளத்திலேயே "வடதடமும் வைகுந்தமும் மதிள் துவராவதியும், இடவகைகளிகழ்ந்திட்டு என்பாலிடவகை கொண்டனையே" என்னும்படி நித்யவாஸம் செய்தருளுமவன் என்று சொல்லிக்கொண்டு வணங்குவதே நமது கடமை என்க. இப்படி நெடுநாள்வரை அநுஸந்திக்கவே, இப்படிப்பட்ட மஹாதிகாரம் நமக்கும் வாய்ந்து நமது நெஞ்சிலேயே எம்பெருமான் வஸிக்கும்படியான பாக்கியம் விளையுமென்பது உள்ளுறை. (உஉ)

கங்கையிற் புனிதமாய காவிரி நடுவுபாட்டுப்
பொங்குநீர் பரந்துபாயும் பூம்பொழி லரங்கந்தன்னுள்
எங்கள்மா லிறைவனீசன் கிடந்ததோர் கிடக்கைகண்டும்
எங்ஙனம் மறந்துவாழ்கே னேழையே னேழையேனே! (உரு)

| | |
|---|---|
| ஏழையேன் | (எம்பெருமானைக் கிட்டினால் அநுபவிக்க மாட்டாமலும், பிரிந்தால் தரிக்க மாட்டாமலும்) பேதைமைக்குணத்தை யுடைய நான் |
| கங்கையின் | கங்காநதியிற் காட்டிலும் |
| புனிதம் ஆய | பரிசுத்தியுடையதாகிய |
| காவிரி | காவேரிநதியினது |
| நடுவு பாட்டு | நடுவிடத்திலே |
| பொங்கு நீர் | பெரிய கிளர்த்தியோடு வருகின்ற (அந்நதியின்) நீர்ப்பெருக்கு |
| பரந்து பாயும் | எங்கும் பரவிப் பாய்தற்கிடமானதும் |
| பூம் பொழில் | அழகிய சோலைகளை யுடையதுமாகிய |
| அரங்கம் தன்னுள் | கோயிலிலே |
| எங்கள் மால் | (அடியமானை) எங்களிடத்தில் பேரன்பு உடையவனும் |
| இறைவன் | ஸர்வஸ்வாமியும் |
| ஈசன் | ஸர்வநியாமகனுமாகிய ஸ்ரீரங்கநாதன் |
| கிடந்தது | சயனித்திருப்பதாகிய |
| ஓர் கிடக்கை | ஒப்பற்ற பள்ளிகொண்ட திருக்கோலத்தை |
| கண்டும் | ஸேவிக்கப்பெற்ற பின்பும் |
| மறந்து | (அந்தக்கிடையழகை) மறந்துபோய் |
| எங்ஙனம் வாழ்கேன் | எவ்வாறு தரித்திருப்பேன் யான் |
| ஏழையேனே | ஒன்றுஞ் செய்யமாட்டாது திகைத்தவளவையே நிற்பேன். |

நினைக்கவும் பேசவும் முடியாதாகில் இவ்விஷயத்தை மறந்து தரித்தாலோ வென்ன; பெரியபெருமாளுடைய கிடையழகிலே அகப்பட்டநான் எங்ஙனே அதனைமறந்து வாழக்கடவேன் என்கிறார்.

உபயகாவேரி மத்தியிலே ஸ்ரீரங்கத்தில் அழகியமணவாளனது சயநதிருக் கோலத்தை ஸேவிக்கப்பெற்றபின்பு, யான் அந்தக் கிடையழகிலே மனம் ஈடுபட்டுப் புறம்பே செல்லமாட்டாது தவித்து வருந்துதலையொழிய அதனைமறந்து தரித்திருக்க உபாயமுண்டோ என்று-தாம் எம்பெருமானது கிடையழகில் ஈடுபட்டமையை இதனால் கூறுகின்றனரென்க.

கங்காநதியானது விஷ்ணுபாதத்தில் நின்றும் தோன்றியதாதலால் பரிசுத்தமானது; என்றாலும், சிவனுடைய சடைமுடியில் தங்கியதனால் 'ரௌத்ரம்' [ருத்ரஸம்பந்தமுள்ளது-சடைச்சாறு] என்று சொல்லுகிற ஒரு குறைவை அடைந்திட்டது; இந்தக் காவேரியோ அங்ஙனம் குறைபாடு ஒன்றுமில்லாததோடு அந்தக் கங்கையைத் தனது திருவடியில் நின்று முண்டாக்கின பெருமான் தான் மிக்க அன்புபூண்டு தன் நடுவிற் பள்ளிகொள்ளும் பாக்கியமும் பெற்றது

பற்றி, அந்தக் கங்கையைப் பார்க்கிலும் இது ஏற்றம் பெற்றதாகு மென்பர். "ஸௌசெளநாஸ்ஸாஜீவதஷ்டமமாம் விஷ்ணுவர்க்ஷணாஸர்வமாம் ஷூநாவமனா ஷஷ்வபு—பேனைர்ஹஸக்தீவ தத்கங்காம் விஷ்ணுபதீத்வ மாத்ரமுகாராம் ஷேமாபகா ஹந்த்வகம்" என்று பட்டரும் அருளிச்செய்தது காண்க.

[பொங்குநீர் பரந்து பாயும் பூம்பொழிலரங்கம்.] கோயிலைக் கிட்டுகின்றோ மென்கிற குதூஹலத்தினால் பெரிய கிளர்த்திகொண்டு தனது பெருமகிழ்ச்சி யெல்லாம் தோற்றுமாறு எங்கும் காவேரிநதி பாய்வதனால் எப்போதும் மலர்கள் மாறாத சோலைகள் சூழ்ந்த பெரியபெருமானது ஸௌகுமார்யத்துக்கு அநுகூல மான நீர்வளத்தையும், எப்போதும் இளவேனிற் பருவம்போலத் தோன்றுகிற பூஞ்சோலைகளையுமுடைய ஸ்ரீரங்கம்: இதனால் அத்தேசத்தினது தூய்மையும் இனிமையும் வெளியாமென்க.

இறைவன் என்பது-அவன் ஸகல பதார்த்தங்களுக்கும் தலைவன் என்பதை யும்; ஈசன் என்பது-தனது தலைமைக்குத் தகும்படி ஆளவல்ல திறமையுடையவ னென்பதையும் தெரிவிக்கு மென்ப.

கண்டும் மறந்து எங்ஙனம் வாழ்கேன்—இவ்விஷயத்தைக் கண்டு அநுப விப்பதற்கு முன்பாகில் மறந்தாலும் மறக்கலாம்; கண்டு அநுபவித்தபின்பு மறக்கும் வழி தெரியவில்லையே! மறக்க மருந்துண்டாகில் கொடுங்கள் என்கிறார்.

கவேரனுடைய மகள் என்னும் பொருளதான காவேரீ என்ற வடசொல் காவிரி எனத்திரிந்தது. நடுவு பாட்டு-பாட்டு-ஏழனுருபு; இடத்திலே. எங்கள்-தம்மைப்போன்ற அடியாரையும் உளப்படுத்திய தன்மைப் பன்மை. மால்-அன்பு; அதனையுடையவனுக்கு ஆகுபெயர். ஏழையேன்—"நுண்ணுணர் வின்மை வறுமை" என்றபடி 'அறிவில்லாதவன்' என்றவாறு. (உ௩)

வெள்ளநீர் பரந்துபாயும் விரிபொழி லரங்கந்தன்னுள்
கள்வனார் கிடந்தவாறும் கமலநன்முகமும் கண்டும்
உள்ளமே வலியையோலு மொருவனேன் றுணரமாட்டாய்
கள்ளமே காதல்செய்துன் கள்ளத்தே கழிக்கின்றாயே. (உ௪)

| | |
|---|---|
| வெள்ளம் நீர் | பெருக்கையுடைய காவேரியானது |
| பரந்து பாயும் | எங்கும் பரவிப்பாய்தற்கு இடமானதும் |
| விரி பொழில் | விசாலமான சோலைகளை யுடையதுமான |
| அரங்கம் தன்னுள் | கோயிலிலே, |
| கள்வனார் | அடியவர்களைத் கொள்ளை கொள்ளுமவனான அழகியமணவாளன் |
| கிடந்த ஆறும் | பள்ளிகொள்ளும்படியையும் |
| கமலம் நல் முகமும் | தாமரைமலர்போல் அழகிய திருமுகத்தையும் |
| கண்டும் | ஸேவிக்கப்பெற்ற பின்பும், |
| உள்ளமே | ஓ நெஞ்சே! |
| வலியை போலும் | நீ கல்லாயிராநின்றாய் போலும்! |
| ஒருவன் என்று | அவன் ஒப்பற்றவனென்று |

உணர மாட்டாய் { அறியமாட்டாய்; (இவ்விஷயத்தில்)
கள்ளம் காதலே செய்து { கபடமான பக்தியையே செய்துகொண்டு
உன் கள்ளத்தே { உனது கபடச் செய்கையிலேயே
கழிக்கின்றாயே காலத்தைக் கழிக்கிறாயே!

"எங்ஙனம் மறந்து வாழ்கேன்" என்று தம்மை நோக்கி எம்பெருமான் "ஆழ்வீர்! மறக்கமுடியாதென்கிறீரே, "விஜ்ஞாதஸ்யைவஹி விஸ்மரணப்ரஸக்தி:—விஜ்ஞாதஸ்யைவஹி விஸ்மரணப்ரஸக்தி:" என்றபடி நன்கு தெரிந்துகொண்ட பின்பன்றோ 'மறப்பு' என்கிற வார்த்தைக்கு இடமுண்டாவது: நீர் இப்போது என்னைப்பற்றி என்னதெரிந்துகொண்டீர்? தெரிந்துகொண்டால்தான் போதுமோ? ஆழ்ந்து அநுபவிப்பதற்கு உறுப்பானகாதல் வளரவேண்டாவோ? உம்மிடத்து எவ்வளவு காதல் குடிகொண்டிருக்கிறது? அதன் தன்மை எத்தகைத்து?" என்றாற்போலச் சில கேட்பதாகக் கொண்டு அதற்கு உத்தரமாகத் தம்மில் தாம் பேசுகிறார்.

எம்பெருமான் பரமபதத்தில் நித்யஸூரிகளோடு பரிமாறுவதை விட்டுவிட்டு இங்கே வந்து கண்வளர்ந்தருளுவது—உண்டியே உடையே உகந்தோடும் இம்மண்டலத்தவராகிய ஸம்ஸாரிகளை வசப்படுத்திக்கொள்வதற்காக வலைவீசுகிறபடியாதலால் கள்வனார் எனப்பட்டது. வேசியைக்கண்டு பேசவிரும்பியும், சோறுவாங்கி உண்ணக்கருதியும், திருவிழாக்களிலே திரண்டவர்கள் ஏமாந்திருக்கையில் கொள்ளையடிக்கக்கருதியும் இவ்வாறு பலவகை எண்ணங்களோடே கோயிலுக்கு புகுந்தவர்களை, வடிவழகு முதலியவற்றைக்காட்டி நாளடைவில் தனக்கு அற்றுத்தீர்ந்த அடியவராம்படி ஆக்கிக்கொள்ளுகிற எம்பெருமானைக் கள்வனென்னத் தடையுண்டோ? "செஞ்சொற் கவிகாள்! உயிர் காத்து ஆட்செய்மின் திருமாலிருஞ்சோலை, வஞ்சக்கள்வன் மாமாயன்" என்றாரே நம்மாழ்வாரும்.

இங்கு, "கள்வன்" என்னாதே கள்வனார் என்றது—பெரிய நிவட்டித் திருடர் என்றபடி. "பிசாசஸ்ய பிசாச பாஷயா வக்தவ்யம்—பிசாசஸ்ய பிசாச பாஷயா வக்தவ்யம்" என்றபடி—திருடனைப்பிடிக்கத் திருடனே வேண்டுமாதலால், ஆத்மாபஹாரத் திருடரான ஸம்ஸாரிகளைப் பிடிப்பதற்காக எம்பெருமான் தானும் திருடனாய்க் கிடக்கிறபடி. 'உன்னைப் பிடித்துக்கொண்டுபோக வந்திருக்கிறேன்' என்று ருஜுவாக வந்தால் கிடைப்பவர்களன்றே இவர்கள்: ராமக்ருஷ்ணாதி அவதாரங்களில் எதிரம்பு கோத்தவர்களிறே இவர்கள்.

தன் உடைமையைப் பெறுதற்கு இங்ஙனே வந்துகிடக்கிற கிடையையும், தாய்க்கொலை செய்பவனும் மயங்கி நிற்கும்படியான அழகுவாய்ந்த திருமுகமண்டலத்தையும் ஸேவிக்கப்பெற்றுமின்பு நெஞ்சே! சிறிதுகூட விகாரப்படாமல் கல்பிள்ளையார்போலத் திண்ணிதாயிருக்கின்றாயே! என்கிறார். "கீழ்ப்பிறந்த விகாரமெல்லாம் விஷய வைலக்ஷண்யத்தைப்பற்ற அஸத்ஸமமாயிருக்கிற தாய்த்து இவர்க்கு" என்பர் பெரியவாச்சான்பிள்ளை.

‘இப்போது எனக்கு வந்த வன்மை என்ன?’ என்று நெஞ்சானது கேட்க; ஒருவனென் றுணரமாட்டாய் என்கிறார்: உண்டு உறங்கும் ஸாமாந்யரைப் போலே இவனையும் நினைத்திருக்கிறாயே யொழிய ‘இஃது ஒரு விலக்ஷண வஸ்து’ என்று விவேகிக்கமாட்டுகிறிலையே! அப்படி விவேகித்திருப்பாயாகில் அவ்விஷயத்திற்குத் தகுதியாக விடாய்ப்பெற்றிருக்கவேணுமே; அது பெறாமை யாலே உன்னைக் கல் என்னத் தட்டேன்? என்கிறார்.

‘‘ஆழ்வீர்! நீர் இங்ஙன் சொல்லலாகாது; நான் சிறிதும் விகாரப்படாதிருந் தேனாகில், ‘கண்ணிணை களிக்குமாறே’ ‘பனியரும்புதிருமாலோ’ ‘உடலெனக் குருகுமாலோ’ என்று இப்போது நீர் சொன்னதெல்லாம் என்னுடைக் கடவது? நான் எவ்வளவோ விகாரப்பட்டுத்தானிருக்கிறேன்’’ என்று நெஞ்சு எதிர்த்துக்கூற; கள்ளமே காதல்செய்து உன் கள்ளத்தே கழிக்கின்றாயே என்கிறார்: ப்ராக்ருத விஷயங்களை விரும்பிப்போந்த வாஸனை இவ்விஷயத்திலும் தொடர்ந்த மாத் திரமேயொழிய, இதன் வைலக்ஷண்யத்துக்குத் தகுதியாக நீ காதல் கொண்டா யில்லை; கபடமான காதல்கொண்டாய் உன்னது, என்கை. (உ௪)

வலியை—முன்னிலை யொருமைவினைமுற்று. போலும்-அசை.

குளித்துமூன் றனலையோம்பும் குறிகொளந் தணமைதன்னை
ஒளித்திட்டே னென்கணில்லை நின்கணும் பத்தனல்லேன்
களிப்பதென் கொண்டுநம்பீ கடல்வண்ணா கதறுகின்றேன்
அளித்தெனக் கருள்செய்கண்டா யரங்கமா நகருளானே. (உ௫)

அரங்கமாநகருளானே!—;

குளித்து — ஸ்நாநம் பண்ணி

மூன்று அனலை — மூன்று அக்கிகளை

ஓம்பும் — வளர்ப்பதற்குரிய யோக்யதையைத் தருவதும்

குறி கொள் — கஷ்டப்பட்டுக் காப்பாற்றத் தக்கதுமான

அந்தணமை தன்னை — ப்ராஹ்மண்யத்தை

ஒளித்திட்டேன் — பாழாக்கிவிட்டேன்;

என் கண் இல்லை — (ஆத்மவிஷய ஜ்ஞானம்) என் பக்கல் இல்லை;

நின் கண் பத்தனும் அல்லேன் — உன் விஷயமான பக்தியும் உடையவனல்லேன் நான்;

(இப்படியிருக்க;)

கடல் வண்ணா—; நம்பீ—;

என் கொண்டு களிப்பது — (நான்) எதைக்கொண்டு ஆநந்தமடைவேன்?

கதறுகின்றேன் — (தூக்கத்துக்குப் போக்கு வீடாக) வாய்விட்டுக் கூப்பிடாநின்றேன்; (ஆதலால்)

எனக்கு — என் விஷயத்தில்

அளித்து அருள்செய் — மிகவும் க்ருபை செய்தருளவேணும்.

(கண்டாய்—முன்னிலையசை.)

‘‘நம் பக்கல் உள்ளது கபடபக்தியேயொழிய உண்மையானபக்தி சிறிதும் இல்லை; ஆனபின்பு இனி நாம் உய்வுபெற வீரகு ஏது?’’ என்று தளும்பிநின்ற ஆழ்வாரை நோக்கி எம்பெருமான், ‘‘ஆழ்வீர்! இங்ஙனே துயரப்படுவானேன்?

கர்மயோகம், ஜ்ஞாநயோகம், பக்தியோகம் என்று சாஸ்த்ரங்களில் உபாயமாகக் கூறப்பட்டவை பல உள; அவற்றை அநுஷ்டிப்பதற்கு ஏற்ற ப்ராஹ்மண்யம் உம்மிடத்தில் இராநின்றது; இனி உமக்கு என்ன குறை?" என்ன; ஐயோ! எனக்கு ஒன்றிலும் யோக்யதை இல்லையே என்று தமது வறுமையைக் கூறுகின்றார்.

அக்நிஹோத்ரம் முதலிய தீத்தொழில்களைச் செய்வதற்கு யோக்யதை கொடுப்பது ப்ராஹ்மண்யம் என்பது முதலடைமொழியால் விளங்கும். குறிகோள் என்பதனால்-இந்த ப்ராஹ்மண்யம் மிகவருந்திக் காப்பாற்றவேண்டிய தென்பது போதரும். ப்ராஹ்மணயோநியிற் பிறந்தவன் எவ்வளவு அக்ருத்யங்கள் செய்தாலும் ப்ராஹ்மணனாகவே இருக்கிறான் என்பது கிடையாதாகையாலும், சாஸ்த்ரங்களிலே பாபங்களைக் கூறும்போது ஜாதிப்ரம்சபாதக பாபங்கள் [அதாவது-ஜாதியில் நின்றும் நழுவச்செய்யவல்ல பாவங்கள்] என்று சில பாதகங்கள் கூறப்பட்டிருத்தலாலும் அப்படிப்பட்ட பாவங்களுக்கு ஆளாகாதபடி ஒழுங்காக இருந்தாலன்றி ப்ராஹ்மண்யம் நிலைத்து நிற்கமாட்டாதாகையால், குறிகோள் எனப்பட்டதென்க.

மூன்றனல்—த்ரேதாக்னி; அதாவது-கார்ஹபத்யம், ஆஹவநீயம், தக்ஷிணாக்னி. ஓம்புதல்-ஆராதித்தல்.

"அந்தணமைதன்னை ஒழித்திட்டேன்"—நான் ஒருவன் வரம்பு கடந்து காபேயமாகத் திரிந்தவனாதலால் ப்ராஹ்மண்யமென்பதே ஒன்று உலகில் கிடையாதென்று சொல்லும்படியாய் விட்டதென்கை. "ப்ரஷ்டராயிருப்பார் கண்டால் இன்னான் அதிகரித்த வர்ணத்திலே இவரன்றோ என்றுகொண்டு அவர்களுக்கும் அவத்யமாம்படி திரிந்தேன்" என்பது வ்யாக்யாநஸூக்தி.

ஆக, 'ஒழித்திட்டேன்' என்னுமளவால் கர்மயோகத்தில் தமக்குச் சிறிதும் அந்வயமில்லாமையை அருளிச்செய்து, "என்கணில்லை" என்பதால் ஜ்ஞாநயோகமில்லாமையைக் கூறி "நின்கணும் பத்தனல்லேன்" என்பதால் பக்தியோகமுமில்லாமையைக் கூறுகின்றார்.

இப்படி உன்னைப் பெறும்வழிகளிலே ஒன்றிலும் எனக்கு அந்வயமில்லாமையாலே நான் எதைப் பற்றாசாகக்கொண்டு களித்திருப்பேன்; ஏதாவது ஸ்வல்பம் கைம்முதலாவது என்னிடத்தில் இருக்குமாகில் 'பேற்றில் நமக்கு அதிகாரமுண்டு' என்று நினைத்து ஆறியிருக்கலாம். அங்ஙன் ஆறியிருக்க விரகில்லாமையால் ஐயோ! ஐயோ!! என்று கதறுகின்றேனென்கிறார் மூன்றாமடியால்.

'உம்மை நான் ரக்ஷிப்பதற்கு உறுப்பாக உம்மிடத்தில் ஒருகைம்முதலுமில்லை என்பது திண்ணமானபின்பு கதறிப் பயனென்? என்னை என் செய்யச் சொல்லுகிறீர்?' என்று எம்பெருமான் திருவுள்ளமாக; ஒரு கைம்முதலுள்ளவர்களைத்தான் ரக்ஷிப்பதென்று உனக்கு நியதியுண்டாகில் கோயிலிலே வந்து

சாய்ந்தருள்வானேன்? உன்னுடைய ஒப்புயர்வற்ற கருணைக்கு என்னைத் தவிர வேறு விஷயமுண்டோவென்னும் கருத்தை நான்காமடியில் வெளியிடுகிறார். ... ... ... ... ... (உ௲)

போதேல்லாம் போதுகோண்டுன் போன்னடி புனையமாட்டேன்
தீதிலா மோழிகள்கோண்டுன் திருக்குணம் சேப்பமாட்டேன்
காதலால் நேஞ்சமன்பு கலந்திலேனது தன்னாலே
ஏதிலே னரங்கர்க்கேல்லே என்சேய்வான் தோன்றினேனே. (உகூ)

| | |
|---|---|
| போது எல்லாம் | எல்லாக் காலங்களிலும் |
| போது கொண்டு | பூக்களைக்கொண்டு |
| உன் | உன்னுடைய |
| பொன் அடி | அழகிய திருவடிகளிலே |
| புனைய மாட்டேன் | ஸமர்ப்பிக்க மாட்டுவே னல்லேன்; |
| தீது இலா | குற்றமற்ற |
| மொழிகள் கொண்டு | சொற்களினால் |
| உன் | உன்னுடைய |
| திருக் குணம் | நற்குணங்களை |
| செப்ப மாட்டேன் | கீர்த்தனம் செய்யமாட்டுவே னல்லேன்; |
| காதலால் அன்பு | உண்மையான பக்தியால் உண்டாகிற அபிநிவேசத்தை |
| நெஞ்சம் | நெஞ்சிலே |
| கலந்திலேன் | வைத்துக்கொண் டிருக்கின்றேனில்லை; |
| அது தன்னாலே | ஆதலால் |
| அரங்கர்க்கு | அழகிய மணவாளனாகிய தேவரீர்க்கு |
| ஏதிலேன் | ஒரு காரணத்தாலும் ஸ்பர்சிக்கப் பெற்றவனல்லேன்; |
| | (இப்படிப்பட்ட நான்) |
| என் செய்வான் | எதற்காக |
| தோன்றி னேனே | பிறந்தேனோ (அறியேன்) |
| எல்லே | ஐயோ! |

"கடல்வண்ணா! கடல்வண்ணா!!" என்று கதறின ஆழ்வாரை நோக்கி எம்பெருமான், 'த்ரைவர்ணிகாதிகாரமான உபாயங்களில் உமக்கு அந்வயமில்லையென்றீர்; இருக்கட்டும்; ஸர்வாதிகாரமான அர்ச்சநம், ஸ்தோத்ரம் முதலியவற்றில் ஏதாவது அந்வயமுண்டோ?' என்று கேட்க, ஐயோ! ஒன்றிலும் அந்வயமில்லையே! என்று கையை விரிக்கிறார்.

"கள்ளார் துழாயுங் கணவலரும் கூவிளையும், முள்ளார் முளரியும் ஆம்பலும் முன் கண்டக்கால், புள்ளாய் ஓரேனமாய்ப் புக்கிடந்தான் பொன்னடிக்கென்று உள்ளாதார் உள்ளத்தை உள்ளமாக் கொள்ளோமே" என்றபடி கண்ணிற்கண்ட பூக்களைக் கொணர்ந்து பெருமாள் திருவடிகளிலே ஸமர்ப்பிக்க வேண்டியது ப்ராப்தமாயிருக்க, அது செய்யமாட்டுகிறிலேன்; இவ்வளவு கஷ்டமும் வேண்டா; வாயில்வந்த சில சொற்களைச்சொல்லி ஸ்தோத்ரமாவது செய்யலாமே; அதுவும் செய்யப் பெற்றிலேன்; அவ்வளவு ச்ரமமும் வேண்டா;

நெஞ்சிலேயாவது கொஞ்சம் ஸ்நேஹம் வஹிக்கலாமே; அதுவும் பெற்றிலேன்; இப்படி ஒருவிதத்தாலும் எம்பெருமான் விஷயத்திலே நான் கிஞ்சித்கரிக்கப் பெறாதவனானபின்பு, ஆட்டின் கழுத்தில் முலைக்கும் எனக்கும் ஒரு வாசியில்லை; என்னுடைய பிறவி வீண்! வீண்!! வீண்!!! என்கிறார்.

[காதலால் நெஞ்ச மன்பு இத்யாதி.] "நெஞ்ச மன்பு கலந்திலேன்" என்றால் போராதோ? "காதலால்" என்பதற்குப் பயனென்? எனில்; எம்பெருமான் ஆழ்வாரை நோக்கி, 'ஆழ்வீர்! நீர் என்னைப் பூக்கொண்டு பூசிக்கவும் வேண்டா; நாக்கொண்டு போற்றவும் வேண்டா? விஷயாந்தரங்களில் நீர் வைத்திருக்கிற அன்பை மீட்டு என் பக்கலிலே வைக்கமாட்டீரோ?' என்ன; 'பிரானே! நான் விஷயாந்தரங்களிலே அன்பு பூண்டிருக்கிறேனென்பது உண்மை; ஆனால் அவ்வன்பு வஞ்சனைக்காக ஏற்பட்டதேயொழிய உள்ளூறிய விச்வாஸமடியாகப் பிறந்ததல்ல; மாதர்களிடத்து நான் அன்பு பாராட்டுவது அவர்களுடைய ஆடை ஆபரணம் முதலியவற்றைக் கொள்ளை கொள்வதற்காகவாகுமேயன்றி, காதலால் அன்பு பாராட்டுகிறேனில்லை; இப்படி கபடமான அன்பை உன்னிடத்தில் செலுத்துவதிற் பயனென்? என்ற கருத்துத்தோன்றக் கூறுகின்றனரென்க.

(உசு)

குரங்குகள் மலையைநூக்கக் குளித்துத்தாம் புரண்டிட்டோடித்
தரங்கநீ ரடைக்கலுற்ற சலமிலா வணிலும்போலேன்
மரங்கள்போல் வலியநெஞ்சம் வஞ்சனேன் நெஞ்சுதன்னால்
அரங்கனார்க் காட்செய்யாதே அளியத்தே னயர்க்கின்றேனே. (உஎ)

| | |
|---|---|
| குரங்குகள் | வாநரவீரர்கள் (கிஞ்சித்கரித்து ஸ்வரூபம் நிறம் பெறுவதற்கு) |
| மலையை | மலைகளை |
| நூக்க | தள்ளிக்கொண்டுவர |
| தாம் | தாங்கள் [அணில்கள்] |
| குளித்து | நீரிலே முழுகி |
| புரண்டிட்டு | (கரையிலுள்ள உலர்ந்த மணலிலே) புரண்டு |
| ஓடி | ஓடி |
| தரங்கம் | அலைகளெறிகின்ற |
| நீர் | கடலை |
| அடைக்கல் உற்ற | அடைக்கையிலே ஒருப்பட்ட |
| சலம் இலா | கபடமற்ற |
| அணிலும் போலேன் | அணில்களையும் ஒத்திருக்கின்றேனில்லை; |
| மரங்கள் போல் | மரங்களைப்போலே |
| வலிய நெஞ்சம் | கடினமான நெஞ்சையுடையனாய் |
| வஞ்சனேன் | வஞ்சனையையே தொழிலாகவுடையனாய் |
| அளியத்தேன் | அருமந்த மநுஷ்யனான நான் |
| அரங்கனார்க்கு | அழகியமணவாளனுக்கு |
| நெஞ்சு தன்னால் | பாவநா ப்ரவ்ருத்தியாலுங்கூட |
| ஆள் செய்யாதே | அடிமை செய்யாமல் |
| அயர்க்கின்றேன் | அநர்த்தப்படாநின்றேன். |

மநுஷ்யனைப் பிறந்தவன் செய்யக்கூடிய கிஞ்சித்காரங்களில் மாத்திரமேயன்று எனக்கு அந்வயமில்லையென்பது; ஸாமாந்யமான திர்யக்குக்கள் செய்யக்கூடிய கிஞ்சித்காரமும் பாவியேன் செய்யப்பெற்றிலேன் என்று வருந்துகின்றார்.

ஸ்ரீராமாவதாரத்தில் பெருமான் இலங்கைநகர் எழுந்தருள்வதற்காகக் கடலில் அணைகட்ட நேர்ந்தபோது வாநரவீரர்கள் மலைகளைக் கொணர்ந்து எறிந்து கடலைத் தூர்ப்பதைக்கண்ட அணிற்பிள்ளைகள் 'இவ்வாநரங்கள் தமது சக்திக்கு இயன்ற காரியத்தைச் செய்து பெருமாள் விஷயத்திலே கிஞ்சித்கரித்தால் நாமும் நமது சக்திக்கு ஏற்றவாறு இப்பெரிய காரியத்திலே சிறிது கிஞ்சித்கரிப்போம்' என்றெண்ணி, எல்லா அணிற்பிள்ளைகளும் கடலிலே முழுகுவது, உடனே அந்த ஈரவுடம்போடே கரைமேல் மணலில் புரண்டு உடலில் ஒட்டிக்கொண்ட மணல்களைக் கடலிலேகொண்டு உதறுவதாய் இப்படிப்பட்ட ஒரு காரியத்திலே ஸேதுபந்தன கைங்கரியத்திற்கு உதவிபுரிந்ததாக ஒரு இதிஹாஸம் உண்டு; அதனை அருளிச்செய்கிறார் முன் இரண்டடிகளில். இவ்வரலாறு எந்தப் புராணத்தில் கூறப்பட்டிருக்கிறதோ அறியோம். இது ஆழ்வார் தாமாக ஸாக்ஷாத்கரித்த வ்ருத்தாந்தமென்பர் பெரியோர். மற்றையாழ்வார்கள் திவ்ய ப்ரபந்தங்களிலும் இவ்வாறு தாமாக ஸாக்ஷாத்கரித்த வ்ருத்தாந்தங்கள் சில கூறப்பட்டுள்ளமை அறிக.

“குரங்குகள்” என்ற விடத்துப் பன்மைக்குத் தகுதியாக 'மலைகள்' என்னாமல் மலையை என்றதின் கருத்தை அருளிச்செய்யுமிடத்துப் பெரியவாச்சான்பிள்ளை—“மலைகளாலே கடலைத் தூர்க்கிறவிடத்தில் மலைகளுக்குத் தொகையுண்டாய் ஸ்ரீவாநரவீரர்களுக்குத் தொகையில்லாமையாலே ஒரு மலையை அநேகர் கூடித் தொட்டுக்கொண்டு வருவார்களாய்த்து; ஒரு மலை ஒருவர்க்குப் பாத்தம் போராதபடி பெருமிடுக்கராயிருக்கச்செய்தேயும் உபாத்யாயனூசி போலே எல்லாரும் கிஞ்சித்கரித்து ஸ்வரூபம் நிறம்பெறவேணுமென்றிருக்குமவர்களாகையால் இப்படிச் செய்கிறார்களாய்த்து; ஸ்வரூப ஜ்ஞானமுடையாரோடு இல்லாதாரோடு வாசிபறத் துரும்பெழுந்தாடும் படியிறே அடிமை கொள்ளுகிறவர் கையும் வில்லுமாய் நின்றநிலைதான்!” என்றருளிச்செய்திருக்கும் அழகு பாரீர். “உபாத்யாய னூசி போலே” என்றதன் விவரம்:—ஒருபாத்யாயர்க்கு ஒருநாள் காலில் முள்தைக்க, அதை எடுப்பதற்காக ஊசிவேண்டி, மாணாக்கர்களை யழைத்து 'ஓர் ஊசி கொண்டுவரவேணும்' என்று நியமிக்க, உடனே பிள்ளைகளெல்லோரும் ஊசி கொண்டுவருவதற்குப் புறப்பட்டுப்போக ஒருவன் கையில் ஊசி அகப்பட்டவாறே மற்ற மாணாக்கர்கள் 'இதை ஒருவன் கொண்டுபோய்க் கொடுத்தால் அவனிடத்தில் மாத்திரம் உபாத்யாயர் உகந்திருப்பர்; நமக்கு என்னாயிற்று? இக்காரியத்தை எல்லாரும் கூடிச் செய்தோமாயிருக்கவேணும்; அப்படிப்பட்ட உபாயமென்?' என்று சிந்தித்து, 'ஒரு பெரிய பனைமரத்தில் இவ்வூசியைச் சொருகிவிட்டு அந்த மரத்தை எல்லாரு

மாகக் கூடிச் சுமந்துபோய் உபாத்யாயரெதிரில் போடவேண்டியது' என அறுதியிட்டு அங்ஙனமே செய்தனர்; முடிவில் பனைமரத்தில் ஊசியைத் தேடிப்பிடிக்க முடியாமற் போயிற்று; உபாத்யாயர் மாணுக்கர்களின் ஆஸ்தையின் கனத்தை நோக்கி மிகவியந்தனர் என்பது விநோத கதை. அவ்வாறாகவே வாநரவீரர்கள் ஒவ்வொருவரே பத்தெட்டு மலைகளைத் தூக்க வல்லவரேனும் ஒவ்வொரு மலையிலும் எல்லார்க்கும் அங்வயமுள்ளதாம்படி ஸிஞ்சிக்கரித்த ஆஸ்தாதிசயம் விளங்குமாறு, குரங்குகள் எனப் பன்மையும், மலையை என ஒருமையுமாக அருளிச்செய்தாரென்க.

வாநரங்கள் போலவும் அணிற்பிள்ளைகள் போலவும் சரீர ச்ரமப்பட்டு ஒரு கைங்கரியமும் செய்யமுடியாமற் போயினும், நெஞ்சாலேயாவது எம்பெருமானை நினைத்து அவ்வழியாலே பகவத் கைங்கர்யபரர்களில் ஒருவனாக நிற்கலாமே; அதுவுமில்லாமல் என் அருமருந்தன்ன மானிடப் பிறவியைப் பாழே போக்கினேனே! என்று கதறுகின்றார் பின்னடிகளில். (உஎ)

உம்பரா லறியலாகா வொளியுளார் ஆனைக்காகிச்
செம்புலா லுண்டுவாழும் முதலைமேல் சீறிவந்தார்
நம்பர மாயதுண்டே நாய்களோம் சிறுமையோரா
எம்பிராற் காட்செய்யாதே யென்செய்வான் தோன்றினேனே. (உஅ)

| | |
|---|---|
| உம்பரால் | (பிரமன் முதலிய) தேவர்களாலும் |
| அறியல் ஆகா | (இல்லையென்று பரிச்சேதித்து) அறிய முடியாத |
| ஒளி உளார் | தேஜோ மயமான பரம பதத்தை விபூதியாக வுடைய எம்பெருமான் |
| ஆனைக்காகி | கஜேந்த்ராழ்வானுக்காக, |
| செம் புலால் | சிவந்த மாம்ஸத்தை |
| உண்டு | புஜித்து |
| வாழும் | வாழ்கிற |
| முதலை மேல் | முதலையின் மேலே |
| சீறி | சீற்றங்கொண்டு |
| வந்தார் | (மடுவின் கரையிலே) எழுந்தருளினார்; |

(இப்படி ஆச்ரித பக்ஷபாதியாய் ரக்ஷிக்குமவனிருக்க;)

| | |
|---|---|
| நம் பரம் ஆயது உண்டே | (நம்முடைய ரக்ஷணத்தில்) நமக்கொரு பணுவுண்டோ? |
| நாய்களோம் | நாய்போல் நிக்ருஷ்டரான நம்முடைய |
| சிறுமை | தன்மையை |
| ஓரா | ஆராயாதவரான |
| எம் பிராற்கு | எம்பெருமானுக்கு |
| ஆள் செய்யாதே | அடிமைசெய்யப் பெறாமல் (இருக்கிற நான்) |
| என் செய்வான் | எதுக்காக |
| தோன்றினேன் | பிறந்தேன்! |

"அயர்க்கின்றேனே" என்று கதறுகின்ற ஆழ்வாரை நோக்கிச் சிலர், "ஆழ்வீர்! 'எம்பெருமானை நெஞ்சாலாவது நினைக்கப்பெறில் போதும், அதுவுங்கூட நான் நினைக்க முடியவில்லையே' என்று நீர் வருந்துவதில் பயனென்ன? நெஞ்சால் நினைத்த மாத்திரத்திலேயே அவன் வந்து நமக்கு

டக்கும் மஹர்ஷி
உதவப்போகிறானே? நீண்டகாலம் ஸமாதியில் ஸன்நிக்ம்மிடம் அவன்
களுக்கும் அவன் பெறுதற்கரியனாயிராநின்றானென்றால் உ...வனை நோக்கி
வருவதற்கு ப்ரஸக்திதான் ஏது? ஆனபின்பு நீர் வீணாக அவ.. ரக்ஷித்துக்
கதறுவதில் பயனில்லை; உம்முடைய சக்தியைக்கொண்டு உம்மை சொல்ல;
கொள்ளப் பார்ப்பதே உத்தமம்" என்றாற்போலே சில வார்த்தைகளைச்
அவர்கள் பேச்சுக்கு உத்தரமாக அருளிச்செய்யும் பாசுரம் இது.

மடுவின் கரையிலே முதலையின் வாயில் அகப்பட்டு வருந்தின கஜேந்த்ராழ்வான் "நாராயணா! ஓ! மணிவண்ணா நாகணையாய்!" என்று அழைத்தவாறே அரைகுலையத் தலைகுலைய மடுவின்கரையிலே ஓடிவந்தவனன்றோ எம்பெருமான்; இப்படி ஆச்ரித வாத்ஸல்யனும் ஆச்ரித பக்ஷபாதியான எம்பெருமானிருக்க அவனைக் கடகாகப்பற்றாமல் நம்மைநாமே ரக்ஷித்துக்கொள்ளப் பார்ப்பதும் ஒரு காரியமாகுமோ? ஆனால் பரமோத்க்ருஷ்டனான அவன் பரமநிக்ருஷ்டரான நம்மை ஒரு பொருளாக நினைப்பனோ என்று சிறிது சங்கிக்கலாம்; இதுவும் அவனுடைய ஸ்வரூபத்தை அறியாதாருடைய சங்கையாகும்; 'இவன் நீசன் இவன் உத்க்ருஷ்டன்' என்று ஏற்றத்தாழ்வுகளைப் பார்ப்பவனல்லன் எம்பெருமான். இப்படிப்பட்ட எம்பெருமான் விஷயத்திலே சிறிதும் அடிமை செய்யப்பெறாத பாவியேன் எதுக்காக ஒரு மனிதனாகப் பிறந்தேனென்று தலையிலடித்துக் கொள்ளுகிறபடி. பரமபதத்தை ஒளி என்ற சொல்லாற் கூறியது வடமொழி வேதப்ரக்ரியையை அடியொற்றியாம்.

"செம்புலாலுண்டு வாழும்" என்று முதலைக்கு இட்ட அடைமொழியின் கருத்து என்னென்னில்; "திர்யக்ஷ்வபி நவஹீவிபக்ஷதயாவபாஸ:— திர்யக்ஷு ஜ்ஞவஹீ விபக்ஷதயோபசார:" (அதிமாநுஷஸ்தவம்) என்றபடி எதிரியாக நினைக்கவும் தகாத ஒரு ஹீந ஜந்துவை எதிரியாக்கி அதன்மேல் கோபங்கொண்டது ஆச்ரித பக்ஷபாதத்தாலன்றோ என்னுங் கருத்து வெளிவரும்.

நம்பரம்—பளுவு என்னும் பொருளதான ஹர: என்ற வடசொல் பரமெனத் திரிந்தது. "ந்யஸ்யத்தாஷவஸேஷவரதநிஜபரம் நிக்ஷேபோ நிக்ஷேபோவ்வி—ந்யஸ்ய த்வத் பாதபத்மே வரத நிஜபரம் நிர்ப்பரோ நிர்ப்பயோஸ்மி" என்று அநுஸந்திப்பது அறிவுடையார் செயலாதலால் நமக்குப் பரமான தொன்றுமில்லையென்க.

[உம்பராலழியலாகா.] ஆனைக்காகி முதலைமேற் சீறிவந்தவரலாறு:—பாண்டி நாட்டில் இந்த்ரத்யும்நன் என்னும் அரசன் மிக்க விஷ்ணுபக்தியுடையனாய் ஒரு நாள் விஷ்ணுபூஜை செய்கையில் அகஸ்தியமாமுனிவன் அவனிடம் எழுந்தருள, அப்போது அவன் தன் கருத்து முழுவதையும் திருமாலைப் பூஜிப்பதிற் செலுத்தியிருந்ததனால் அம்முனிவனது வருகையை அறிந்திடானாய் அவனுக்கு உபசாரமொன்றுஞ் செய்யாதிருக்க, அம்முனிவன், தன்னை அரசன் அலட்சியஞ்

செய்தானென்று மாறாகக்கருதிக் கோபித்து 'நீ யானைபோலச் செருக்குற் றிருந்ததனால் யானையாகக்கடவை' என்று சபிக்க, அங்ஙனமே அவன் ஒரு காட்டில் யானையாகத் தோன்றினனாயினும் முன்செய்த விஷ்ணுபக்தியின் மஹிமையால் அப்பொழுதும் விடாமல் நாள்தோறும் ஆயிரந் தாமரைமலர்களைக் கொண்டு திருமாலை ஆராதித்துவருகையில், ஒருநாள் பெரியதொரு தாமரைத் தடாகத்தில் பூப்பறித்தற்குப்போய் இறங்கினபொழுது, அங்கே முன்பு நீர்நிலையில்நின்று தவஞ்செய்துகொண்டிருந்த தேவலனென்னும் முனிவனது காலைப்பற்றியிழுத்து அதனாற் கோபங்கொண்ட அவனது சாபத்தாற் பெரிய முதலையாய்க்கிடந்த ஹூஹூ என்னும் கந்தருவன் அந்த யானையின் காலைக் கௌவிக்கொள்ள, அதனை விடுவித்துக்கொள்ள முடியாமல் கஜேந்திரன் ஆதிமூலமே! என்று கூவியழைக்க, உடனே திருமால் பெரியதிருவடியின்மீதேறி அங்கு எழுந்தருளித் தனது சக்கராயுதத்தைப் பிரயோகித்து முதலையைத் துணித்து யானையை அதன்வாயினின்று விடுவித்து இறுதியில் அதற்கு முக்தியை அருள்செய்தனன் என்பதாம். இச்சரிதம் இவ்வாழ்வாரால், மேல் "பெண்ணுலாஞ் சடையினானும்" என்ற பாட்டிலும், திருப்பள்ளியெழுச்சியில் "கொழுங்கொடி முல்லையின்" என்ற பாட்டிலும் அநுஸந்திக்கப்பட்டுள்ளமை அறிக. . ... ... ... ... ... ... (உஅ)

ஊரிலேன் காணியில்லை உறவு மற்றொருவரில்லை
பாரில் நின்பாதமூலம் பற்றிலேன் பரமமூர்த்தி
காரொளி வண்ணனே கண்ணனே கதறுகின்றேன்
ஆருளர் களைகணம்மா அரங்கமா நகருளானே. (உகூ)

பாரில் — இந்தப் பூமியிலே

ஊர் இலேன் — தேவரீர் உகந்திருக்கும் திருப்பதிகளிலே பிறக்கப் பெற்றிலேன்;

காணி இல்லை — (திருப்பல்லாண்டு பாடுகை முதலானவற்றுக்காக விடப்பட்ட) காணியாட்சியும் எனக்கில்லை;

உறவு இல்லை — பந்துக்களுமில்லை;

மற்று ஒருவர் இல்லை — தோழன்மார் முதலானவர்களும் ஒருவருமில்லை.

நின் பாதம் மூலம் — தேவரீருடைய திருவடிகளையும்

பற்றிலேன் — (தஞ்சமாகப்) பற்றுதலுமில்லாநின்றேன்;

பரம மூர்த்தி — மிகச் சிறந்தவனே!

கார் ஒளி வண்ணனே — மேகத்தின் காந்திபோன்ற மேனி நிறமுடையவனே!

கண்ணனே — ஸ்ரீ க்ருஷ்ணனே!

கதறுகின்றேன் — (வேறு புகலற்று உன்னையே) கூப்பிடாநின்றேன்;

அம்மா — ஸ்வாமிந்!

அரங்கமா நகருளானே.—;

களைகண் ஆர் உளர் — (உன்னையொழிய வேறு) ரக்ஷகர் யார் இருக்கிறார்!

தமக்கு ஒருவிதத்தாலும் 'பேறு தப்பா'தென்று நிச்சயித்து விசாரமற்றிருப்பதற்கு இடமில்லாமையை விரிய உரைக்கும் பாசுரம் இது.

**ஊரிலேன்.**—வேறு எவ்வித யோக்யதையுமில்லாமற் போனாலும் ஸானக் ராமம், கோயில், திருமலை, பெருமாள்கோயில் முதலிய திவ்யதேசங்களில் ஜன்மமாவது கிடைத்தால் அதைக்கொண்டு உய்வு பெறலாம். அப்படிப்பட்ட ஒரு தேசத்திலும் எனக்குப் பிறவி நேரவில்லையே! என்கிறார்.

**காணியில்லை.**—திவ்யதேசத்தில் ஜன்மமில்லாவிடினும் உகரம்போகத்துணர்த்தமாக ஏதாவது கொஞ்சம் க்ராம பூமிகள் ஏற்பட்டிருந்தால் அங்குப் போகவேண்டிய காலங்களில் யாத்ருச்சிகமாக இடையிலே ஒரு திவ்யதேசஸேவை கிடைக்கக்கூடும் (முஸர்பாக்கத்தின் வழியிலே திருப்புட்குழி நேருமாபோலே); அப்படிப்பட்ட ப்ரஸக்தி நேருவதற்கு ஒரு குழியளவு காணியுமில்லையென்கிறார்.

இவையொன்றுமில்லையாகிலும் திவ்யதேசவாஸிகளோடே உறவு இருக்குமாகில் பந்துக்ருத்ய பரிபாலனத்துக்காகச் சிலகாலம் அங்குப்போகவும் அதடியாக பகவத்ஸேவை கிடைக்கவும் ப்ரஸக்தியுண்டு; அப்படிப்பட்ட உறவினர்களும் எனக்கில்லை; ஆனபின்பு ஒரு வழியிலும் உன்னைப்பெற உபாயமில்லாமையாலே, "மின்பாத மூலம் பற்றிலேன்" என்கிறார்.

இப்படி ஒரு கைம்முதலுமில்லாதவனென்ற காரணத்தினால் என்னை நீ விடலாகாது; கெட்டுப்போன உடைமையைப் பெறுவதற்கு உடையவன் முயற்சி செய்யுமாபோலே கெட்டுப்போன அடியேனைப் பெறுவதற்கு நீர் முயலவேண்டும்படியான இங்கொழிக்கவொழியாத உறவு இருப்பதை நோக்கவேணுமென்கிறார், பரமமூர்த்தி என்று தொடங்கி. ... ... ... (௨௯)

மனத்திலோர் தூய்மையில்லை வாயிலோரின்சொலில்லை
சினத்தினால் செற்றம்நோக்கித் தீவிளி விளிவன்வாளா
புனத்துழாய் மாலையானே பொன்னிசூழ் திருவரங்கா
எனக்கினிக் கதியென்சொல்லா யென்னையா ளுடையகோவே. (௩௰)

| | |
|---|---|
| புனம் துழாய் | தன்னிலத்திலே வளர்ந்து செவ்விதான திருத்துழாயை |
| மாலையானே | மாலையாக அணிந்துள்ளவனே ! |
| பொன்னி சூழ் | காவேரியாலே சூழப்பட்ட |
| திரு அரங்கா | ஸ்ரீரங்கத்தில் சாய்ந்தருளுபவனே ! |
| என்னை | அடியேனை |
| ஆள் உடைய | அடிமையாகக்கொண்ட |
| கோவே | ஸ்வாமியானவனே ! |
| மனத்தில் | (என்) மனஸ்ஸிலே |
| ஓர் தூய்மை இல்லை | தெளிவு கொஞ்சமும் இல்லை ; |
| வாயில் | வாயிலே |
| ஓர் இன் சொல் இல்லை | ஒரு நற்சொல்லும் கிடையாது ; |
| வாளா | நிஷ்காரணமாக |
| சினத்தினால் | கோபத்தாலே |
| செற்றம் நோக்கி | பகைமை தோற்றப் பார்த்து |
| தீ விளி விளிவன் | மிகக் கொடுமையாக வார்த்தை சொல்லா நிற்பேன் ; |

| | | | |
|---|---|---|---|
| எனக்கு | இப்படிப்பட்ட துர்க்குணங்கள் நிறைந்த எனக்கு | இனி | இனிமேல் |
| | | கதி என் | என்ன கதி? |
| | | சொல்லாய் | அருளிச்செய்யவேணும். |

"குளித்து மூன்றனலையோம்பும்" என்ற பாட்டுத்தொடங்கி ஐந்து பாட்டுக்களாலே தம்மிடத்தில் ஒருவித நன்மையும் கிடையாதென்பதை வெளியிட்ட ஆழ்வாரை நோக்கி எம்பெருமான், "ஆழ்வீர்! உம்மிடத்தில் ஒரு நன்மையும் இல்லையென்றீர்; இருக்கட்டும், ஒருவித நன்மையுமில்லாதாப்போலே ஒருவித தீமையுமில்லாதிருந்தாலும் போதும்; அப்படி உண்டோ?" என்று கேட்க; "ந நிந்திதம் கர்ம ததஸ்தி லோகே ஸஹஸ்ரசோ யந்ந மயா வ்யதாயி— நநிந்திதம் கர்ம ததஸ்திலோகே ஸஹஸ்ரசோயந்நமயாவ்யதாயி" என்ற ஆளவந்தாரைப்போலே என்னிடத்திலில்லாத தீமை உலகத்திலேயே இல்லை! எல்லாவித தீமைகளும் என் பக்கல் குடிகொண்டிருக்கின்றனவென்கிறார்.

மனத்தில் ஓர் தூய்மை இல்லை.—காமம், க்ரோதம், லோபம், மோஹம், மதம், மாத்ஸர்யம் என்று சொல்லப்படும் பல துர்க்குணங்களில் ஒன்றாவது குறைந்தால் கொஞ்சமாவது சித்தசுத்தி ஏற்படும், அப்படியுமில்லையென்கை.

நெஞ்சு பூர்ணமாகக் கெட்டுப்போயிருந்தாலும் வாயில் நாலு நல்லசொற்கள் வந்தாலாவது நாலுபேர் பார்த்து 'இவன் நல்லவன்' என்று சொல்லக்கூடும், இப்படியுமில்லை; தப்பிப்போயும் ஒரு நல்லவார்த்தை வாயில் வருவதில்லை. ஒருவன் நல்லாடை யுடுத்து நால்வர்க்கு நல்லனாகத் திரிந்தானாகில் அவனுடைய அந்த மேன்மையைப் பொறுக்கமாட்டாமல் நிஷ்காரணமாக அவர்களைப் பழித்துக்கூறும் சொற்களுக்கு எல்லையேயில்லை. "சினத்தினால் செற்றம் நோக்கி" என்றவிடத்திற்கு "ஓராளும் ஒரு நோக்கும் நோக்காவாய்த்துப் பார்ப்பது" என்றார் பெரியவாச்சான்பிள்ளை. அதாவது-இவன் க்ரூரமாகப்பார்க்கிற பார்வையொன்றிலேயே ஓராள் பைஸலாய் விடுவான் என்றபடி.

இப்படி தமது தீமைகளைப் பரக்க உரைத்த ஆழ்வாரை நோக்கி எம்பெருமான் "ஆழ்வீர்! பேற்றுக்கு ப்ரதிபந்தகம் எவ்வளவுவேணுமோ அவ்வளவும் உம்மிடத்தில் இருப்பதாகக் கூறுகின்றீர்; இப்படிப்பட்ட உம்மை நான் என் செய்யவல்லேன்; உம்முடைய கருமபலனை நீர் அநுபவிக்கக்கடவீர்" என்று உபேக்ஷைதோற்ற அருளிச்செய்ய, அதற்கு உத்தரமாகப் "புனத்துழாய் மாலையானே!" என்கிறார்; நம்முடைய குறைகளைப்பார்த்து அகலவொண்ணாதபடி, ஒழிக்கவொழியாத உறவே ஹேதுவாகக் கைப்பற்றக் கடவோமென்று காக்குமியல்வினனாயிருக்கு மிருப்புத்தோற்றத் தனிமாலை யிட்டிருப்பவரன்றோ தேவரீர்; நாங்கள் கருமபலனை அநுபவிப்பதற்கு நீ தனிமாலை யிட்டுக்கொண்டிருப்பானேன்? என்கை. ... ... ... ... ... (௯0)

தவத்துளார் தம்மிலல்லேன் தனம்படைத் தாரிலல்லேன்
உவர்த்தநீர் போலவென்றன் றுற்றவர்க் கோன்றுமல்லேன்
துவர்த்தசெவ் வாயினார்க்கே நுவக்கறத் துரிசனானேன்
அவத்தமே பிறவிதந்தா யரங்கமா நகருளானே. (௬௧)

அரங்கமா நகருளானே! —;

| | |
|---|---|
| தவத்துளார் தம்மில் | தபஸ்ஸை அநுஷ்டித்தவர்களில் |
| அல்லேன் | நான் சேர்ந்தவனல்லேன்; |
| தனம் படைத்தாரில் | (ததீயாராதனம் முதலிய வற்றுக்காகப்) பணம் ஸம்பாதித்தவர்களிலும் |
| அல்லேன் | சேர்ந்தவனல்லேன்; |
| என்றன் உற்றவர்க்கு | என்னைச் சேர்ந்தவர்களுக்கு |
| உவர்த்த நீர் போல | உப்புத்தண்ணீர்போல |
| ஒன்றும் அல்லேன் | ஒன்றுக்கும் உதவாதவனா யிரா நின்றேன்; |
| துவர்த்த செவ் வாயினார்க்கே | பழுப்பேறின அதரத்தை யுடைய மாதர்கட்கும் |
| துவக்கு அற | ஸம்பந்தம் அற்றுப்போம்படி |
| துரிசன் ஆனேன் | கள்ளனாயினேன்; |
| | (இப்படிப்பட்ட எனக்கு) |
| பிறவி | ஜந்மத்தை |
| அவத்தமே | வ்யர்த்தமாகவே |
| தந்தாய் | கொடுத்தாய். |

தவமாவது—சரீரத்தை வருத்தப்படுத்திச் செய்யும் காரியம்; முமுக்ஷுக்களாயிருப்பார் மோக்ஷார்த்தமாகத் தவம்புரிவர்கள்; புபுக்ஷுக்களாயிருப்பார் ஸ்வர்க்கம் முதலிய ப்ரயோஜநாந்தரங்களைக் குறித்துத் தவம் புரிவார்கள்: நான் ஒருவிதமான தவமும் செய்திலேன்.

உபநிஷத்திலே "யயாகயா ச விதயா பஹ்வந்நம் ப்ராப்நுயாத்" ["எந்தவிதத்தினாலாவது விசேஷமான அந்நத்தை ஸம்பாதிக்கவேண்டியது"] என்று ஓதிவைத்தது. "எந்த விதத்தினாலாவது' என்றது—களவுசெய்தோ, பிறனை மோசம் செய்தோ, கொலை செய்தோ, எப்படியாவது என்றபடி. இப்படியும் ஒரு சாஸ்த்ரம் கூறுமோ? என்று சங்கைபிறக்கும்; கேண்மின்:—"ந கஞ்சந வஸதௌ ப்ரத்யாசக்ஷீத" (ஒரு அதிதியையும் வீட்டிலிருந்து தாத்த லாகாது) என்று தொடங்கின ப்ரகரணமாதலால், நாடோறும் விருந்தோம்பு வதற்காக (அதிதி ஸத்காரத்தை ப்ரதாநவ்ரதமாகக் கொண்டு) கெட்ட வழியிலாவது வேண்டிய அந்நம் ஸம்பாதிக்க வேண்டுமென்று ஓதிற்று. இந்த ச்ருதியை அடியொற்றித்தான் திருமங்கையாழ்வார் போல்வார் அநுஷ்டித்ததும்: அவர்களுடைய அநுஷ்டாநத்தை நிர்மூலமென்னப் பார்த்தால் அவர்களை நாம் சிறந்த மெய்யடியார்களாகக்கொண்டு ஆராதிப்பது அநுசிதமேயாகும்.

" [illegible]

பக்ஷ்யேபயவிரஹிதஸ் ஸர்வதோபக்ஷித்வா ஸேவ்யாஸேவ்யௌ ஸமயாரஹிதஸ் ஸேவயாதோஷயித்வா । க்ருத்யாக்ருத்யே கிமபி நவிதந்கர்ஹிதம் வாபி க்ருத்வா கர்த்தும்யுக்தம்வரவரமுநே காங்க்ஷிதம் த்வத்ப்ரியாணாம்" என்று ஸ்ரீவரவரமுநி பாதகத்திலே எறும்பியப்பா அருளிச்செய்ததும் இந்தஸ்ருதியை ஆதாரமாகக் கொண்டேயாகும். ஆகையால் நல்விஷயத்தில் விநியோகத்துக்காகத் தீயவழியில் ஆர்ஜனம் செய்வது சாஸ்த்ராநுமதமே ; இது நிற்க :—இங்கு, தனம் படைத் தாரிலல்லேன் என்பதற்குக் கருத்து யாதெனில் ; இதுவரையில் நான் களவு, மோசம் முதலிய தீயவழிகளில் எவ்வளவோ பணம் ஸம்பாதித்திருப்பேன் ; அவற்றில் சிறிது பாகமாவது பாகவதாராதநத்திற்காகக் கல்பிக்கப்பட்டிருக் குமேயானால் திருமங்கையாழ்வாரைப்போலே நானும் அவாவற்று வீடுபெற்றுத் தொல்லைப் பழவினையை முதலரியத் தடையிராது ; அப்படி ஸத்விஷயத்திலே விநியோகப்படுகிற தனத்தை நான் படைக்கவில்லை என்பதாம்.

"பொருள் கையுண்டாய்ச் செல்லக்காணில் போற்றி யென்றேற்றெழுவர்" (திருவாய்மொழி—௯-௧-௩) என்றபடி கையில் நாலுகாசு நடமாடுமளவு கழிந் தால் பந்துக்களும் நோக்கமாட்டார்களென்ற கருத்துடன் இரண்டாமடி அரு ளிச்செய்கிறார். உவர்த்த நீர் போல-உப்புத் தண்ணீரை முகத்திலே இறட்டிக் கொண்டால் கண்விழிக்கவொண்ணாதபடி கரிக்குமாபோலே என்னை அவர்கள் நேர்முகம் பார்க்கமுடியாதபடி அவர்கட்கு நான் தீயனாய் விட்டேனென்கை.

நான் கெடுநாளாக விரும்பிப்போந்த பின்னிடை மடவார்கட்காவது நல்லனா யிருப்பேனோவென்றால், அதுவுமில்லை ; அவர்களிடத்திலும் என் கள்ளத் தன்மை உபயோகித்தபடியாலே அவர்களாலும் நிரஸ்கரிக்கப் பட்டே னந்தோ ! என்கிறார் மூன்றாமடியில். துவக்கு அற என்பதற்கு, ஸ்த்ரீகளோடு ஸம்பந்தம் அறும்படி என்று பொருள்கொள்ளாமல், 'உன்னோடுண்டான உறவு அறும்படி' என்று பொருள் கொண்டு ஸ்த்ரீகள் பக்கலிலேயே நான் கள்ளனாய்த் திரிந்தொழிந்தேன் என்று சிலர் உரைப்பது சுவைக்கேடு ; வ்யாக்யாநத்திற்கும் சேராது. செவ்வாயினார்க்கே என்றவிடத்து ஏகாரம்-உம்மைப்பொருளதாம். " தன்மைக்கு எல்லையான ஸ்த்ரீகளுக்குமாகாதே அவர்களாலும் பஹிஷ்கரிக்கப் பட்டேன் நானொருவனென்கிறார் " என்பர் பெரியவாச்சான்பிள்ளையும்.

இம்மூன்றடிகட்கும் உள்ளுறை பொருள் :—[தவத்துளார் இத்யாதி.] உன் னுடைய நிர்ஹேதுக விஷயீகாரத்துக்கு விரோதியாக நான் ஒரு ஸ்வப்ரவ்ருத்தி யும் செய்யவில்லை : கையில் காசுள்ளவனாயிருந்தேனாகில் ஆகிஞ்சந்யத்தில் குறை யுடையேனாவேன் ; அங்ஙனுமில்லை ; அகிஞ்சநர்களில் தலைவனாயிராநின்றேன். கொண்டபெண்டிர் மக்களுற்றார் சுற்றத்தவர் என்ற ஆபாஸ பந்துக்களோடே போதுபோக்காநின்றேனாகில் "சேலேய்கண்ணியரும் பெருஞ்செல்வமும் நன்மக் களும், மேலாத்தாய் தந்தையுமவரே யினியாவாரே" என்னும்நிலைவாய்ந்த பிறகு

நாம் கைப்பற்றுவோமென்று நீ ஆறியிருக்கலாம்; அங்ஙனுமில்லை; பந்துக்களுக்கு என்னால் ஆகக்கூடிய நன்மை ஒன்றுமில்லாமையாலே அவர்கள் என்னை விட்டொழிந்தனர்; சேலேய்கண்ணியரிடத்தும் நான் கள்ளனாய்ப் போந்தபடியாலே அவர்களும் என்னைத் தூரத்திவிட்டனர். இனி உன்னுடைய விஷயீகாரம் இடையூறின்றி உள்புகுரலாமென்றவாறு. இந்த உள்ளுறை பொருளுக்கு நான்காமடியோடே ஸங்கதி எங்ஙனேயென்னில்; இப்படி உன் விஷயீகாரத்திற்கு நான் உசிதனாயிருக்கச்செய்தேயும் என்னை நீ உபேக்ஷிப்பதால் என்னை நீ விணைபடைத்தாயிறே என்கிறார். அவத்தம்—அவத்யம் என்ற வடசொல் விகாரம். ... ... ... ... (௩௧)

ஆர்த்துவண் டலம்பும்சோலை யணிதிரு வரங்கந்தன்னுள்
கார்த்திர ளனையமேனிக் கண்ணனே உன்னைக்காணும்
மார்க்கமொன் றறியமாட்டா மனிசரில் துரிசனாய
மூர்க்கனேன் வந்துநின்றேன் மூர்க்கனேன் மூர்க்கனேனே. (௩௨)

| | |
|---|---|
| வண்டு | வண்டுகள் |
| ஆர்த்து | ஆரவாரம் செய்துகொண்டு |
| அலம்பும் | அலைந்துகொண்டிராநின்ற |
| சோலை | சோலைகளாலே |
| அணி | அழகு பெற்றிருக்கிற |
| திரு அரங்கம் தன்னுள் | ஸ்ரீரங்கத்திலே (பள்ளி கொண்டருளாநின்ற) |
| கார் திரள் அனைய | மேகஸமூஹத்தை ஒத்த |
| மேனி | திருமேனியையுடைய |
| கண்ணனே | பெருமானே! |
| உன்னை காணும் மார்க்கம் ஒன்று | உன்னை ஸாக்ஷாத்கரிக்கக் கூடிய உபாயமொன்றையும் |
| அறியமாட்டா | அறியமாட்டாதவனாய், |
| மனிசரில் | மனிதர்களுக்குள் |
| துரிசன் ஆய | கள்வனாய், |
| மூர்க்கனேன் | பிடித்தது விடமாட்டாத மூடனாகிய அடியேன் |
| வந்து நின்றேன் | (வேறுபுகலற்று, தேவர் திருமுன்பே) வந்து நின்றேன்; |
| மூர்க்கனேன் மூர்க்கனேன் | என்னுடைய தன்மையை நன்றாகக் கடாக்ஷித்தருள வேணுமென்றபடி. |

எம்பெருமான் ஆழ்வாரை நோக்கி "ஸம்ஸாரிகளுக்குங்கூட ஆகாதபடி அஸாரமான நீர் என்னிடத்தில் வந்து நிற்பதேன்?" என்று கேட்க; என்னுடைய மூர்க்கத்தனத்தாலே வந்துநின்றேன்காண் என்கிறார்.

வண்டுகள் பலவகைப்பட்ட மலர்களிற் பெருகும் தேனைப் பருகுவதற்காகப் பேராரவாரம் செய்துகொண்டு அலையாநிற்கப்பெற்ற சோலைகள் சூழ்ந்த திருவரங்கம் பெரியகோயிலில் காளமேகங்களெல்லாம்கூடி இங்ஙனே ஒரு உருவெடுத்துக் கிடக்கின்றனகொல் என்று சங்கிக்கும்படியாகப் பரமபோக்யமாய்ப் பள்ளிகொண்டருளாநின்ற பெருமானே! தேவரீரை ஸாக்ஷாத்கரிக்கப் பெறும் உபாயம் இன்னதென்று அறியமாட்டாதவர்களில் பெருங்கள்ளனாகிய அடியேன் என் நிலைமையை நினைத்துப்பார்த்தால் தேவர் திருமுன்பே வந்து நிற்கைக்கு யோக்ப

தையே இல்லை; ஆயிருக்கச்செய்தேயும் யுக்தாயுக்தம் ஆராயமாட்டாத மூர்க்கனாகையாலே லஜ்ஜாபயங்களற்று வந்து நின்றேனென்கை.

[கார்த்திரளனையமேனி.] தேன்வெள்ளத்தைக்கண்டு கடலென்று மயங்கிவந்த மேகக்கூட்டங்கள் கழுத்தளவாகப் பருகி நெகிழ்ந்து போகமாட்டாமல் உள்ளே புகுந்து சாய்ந்தனகொல் என்று சங்கிக்கும்படியாகவாயிற்றுப் பெரிய பெருமான் கண்வளர்ந்தருளுகிறபடி. வடிவின்கருமையாலும், குளிர்ச்சியாலும், பரோபகாரமே இயல்வாயிருக்கையாலும், தனக்கென்ன ஒன்றும் வைத்துக் கொள்ளாமையாலும் மேகத்தை எம்பெருமானோடே போலியாகச் சொல்லுகிறது.

கண்ணனே! என்று மேகத்திற்காட்டில் வாசி சொல்லுகிறது; மேகமானது தூரத்திலிருந்து ஜலத்தை உதவிவிட்டுப் போய்விடும்; ஸஜாதீயனாய்வந்து கிட்டித் தன்னை உபகரிக்குமவனாயிற்று எம்பெருமான்.

அவனைக் காணும் மார்க்கங்களாவன:—கர்மயோகம், ஜ்ஞாநயோகம், பக்தியோகம், அவதாரரஹஸ்யம், புருஷோத்தமவித்யை, புண்யக்ஷேத்ரவாஸம், திருநாமஸங்கீர்த்தனம் முதலிய உபாயங்கள். (௩௨)

மெய்யெல்லாம் போகவிட்டு விரிகுழ லாசில்பட்டுப்
பொய்யெல்லாம் பொதிந்துகொண்ட போழ்க்கனேன் வந்துநின்றேன்
ஐயனே அரங்கனேஉன் னருளென்னு மாசைதன்னால்
பொய்யனேன் வந்துநின்றேன் பொய்யனேன் பொய்யனேனே. (௩௩)

| | |
|---|---|
| மெய் எல்லாம் | மெய்யான (நினைவு, சொல்வு, செயல் ஆகிய) எல்லாவற்றையும் |
| போக விட்டு | நீக்கிவிட்டு |
| விரி குழலாரில் | விரிந்த கூந்தலையுடைய மாதர் திறத்தில் |
| பட்டு | ஆழ்ந்தாற்பட்டு [அகப்பட்டு] |
| பொய் எல்லாம் | எல்லாவிதமான பொய்களையும் |
| பொதிந்து கொண்ட | நிறைத்துக்கொண்டிருக்கிற |
| போழ்க்கனேன் | க்ருதக்நனான அதமன் |
| ஐயனே | ஸ்வாமிந் ! |

| | |
|---|---|
| அரங்கனே ! — ; | |
| உன் அருள் என்னும் ஆசை தன்னால் | தேவரீருடைய க்ருபையிலே உண்டான ஆசையினாலே |
| வந்து நின்றேன் —— ; | (நான் எப்படிப்பட்டவனென்றால் ;) |
| பொய்யனேன் பொய்யனேன் பொய்யனேன் | மனமொழி மெய்களென்கிற மூன்று கரணங்களிலும் பொய்யன்; |
| வந்து நின்றேன் | (தேவர் திருமுன்பே வெட்கமற்று) வந்து நின்றேன். |

தம்முடைய தாழ்வுகளை வாயாரச்சொல்லிக் கதறி தேவரீருடைய கருணையொன்றையே எதிர்பார்த்திருப்பவனடியேன் என்கிறார்.

மனம், மொழி மெய் என்கிற முக்கரணங்களிலும் ஸத்யம் நிலையாயிருக்கப்பெற்ற உத்தமாதிகாரியாயிருக்க முடியாமற்போனாலும் ஏதாவதொரு கரணத்தி

லாவது ஸத்யமாயிருக்கலாம்; அப்படிப்பட்ட நிலைமையும் எனக்கில்லை; விஷயாந்தர ப்ராவண்யத்தாலே பொய்தவிர வேறில்லாதவனாயிராநின்றேன். ஆயினும் "தேவரீருடைய திருவருள் இருக்குமானால் நமக்கொரு குறைவுமில்லை" என்கிற விச்வாஸமொன்றுமாத்திரம் என்னிடத்தில் உள்ளதாதலால் அக்கருணையிலுள்ள நசையாலே வெட்கமும் அச்சமுமற்றுத் திருமுன்பே வந்து நின்றேன் என்கிறார்.

மாதர்களைச் சிறப்பித்துக் கூறவேண்டுமிடத்து 'அழகாகமுடித்த கூந்தலையுடையவர்கள்' என்று வர்ணிப்பதைவிட்டு விரிகுழலார் என்பது பொருந்துமோ? எனின்; காமுகராயிருப்பவர்கள், ஸ்த்ரீகள் கூந்தலை முடித்திருக்கக்கண்டால் ஆ! இதொரு மயிர்முடியே! மாலைசுற்றின அழகென்!" என்று அதிலே ஈடுபடுவர்கள்; கூந்தல் விரிந்திருக்கக்கண்டால் "கூந்தல் விரிந்து காலளவும் தொங்குகிற அழகென்!" என்று அதிலே ஈடுபடுவர்கள். ஆனபின்பு, விரிகுழலார் என்பதும் பொருந்துமென்க.

போழ்க்கன்—முறைகேடன், வழிதப்பினவன். ... ... (௩௩)

உள்ளத்தே யுறையும்மாலை உள்ளுவா னுணர்வொன்றில்லாக்
கள்ளத்தேன் நானும்தொண்டாய்த் தொண்டுக்கே கோலம்பூண்டு
உள்ளுவா ருள்ளிற்றெல்லா முடனிருந் தறிதியென்றே
வெள்கிப்போ யென்னுள்ளேநான் விலவறச் சிரித்திட்டேனே (௩௪)

உள்ளத்தே — நெஞ்சினுள்ளே
உறையும் — வாஸஞ்செய்கிற
மாலை — எம்பெருமானாகிய உன்னை
உள்ளுவான் உணர்வு — சிந்திப்பதற்குரூப்பான அறிவு
ஒன்று இல்லா — சிறிதும் இல்லாத
கள்ளத்தேன் நானும் — கள்ளனாகிய அடியேனும்
தொண்டு ஆய் — (உன்) அடிமையிலே அந்வயித்தவனாய்
தொண்டுக்கே கோலம் பூண்டு — அவ்வடிமைக்கு உரிய வேஷங்களை அணிந்து
(இருந்தபோதிலும்)

உள்ளுவார் உள்ளிற்று எல்லாம் — சிந்திப்பவர்கள் சிந்திப்பதெல்லாவற்றையும்
உடன் இருந்து அறிதி என்று — நீ கூடவேயிருந்து அறிகின்றாயென்று
(நான் உணர்ந்து)
நான் — நான்
என்உள்ளே — எனக்குள்ளே
வெள்கிப் போய் — மிகவும் வெட்கப்பட்டு
விலவு அற — விலாப்பக்கத்து எலும்பு முறியும்படி
சிரித்திட்டேன் — சிரித்தேன்.

தொண்டுக்கே கோலம்பூண்டு-வெள்கிப்போய் என்னுள்ளே நான் விலவறச் சிரித்திட்டேன் என்று அந்வயம்.

நாம் ஓரிடம்தேடி ஓடவேண்டாதபடி நம்ஹ்ருதயத்தினுள்ளே எப்போதும் வந்து நெருங்கியிருக்கிற உன்னைச் சிந்தைசெய்வதற்கு ஏற்ற அறிவு இல்லாத

ஆத்மாபஹாரக் கள்ளனாகிய அடியேன் உனக்கு அடிமைசெய்பவன்போலத் தோன்றி "இவன் பரமபாகவதன், பரமபக்தன்" என்று கண்டாரடங்கலும் புகழும்படியாக "தொடையொத்த துளவமும் கூடையும்பொலிந்து தோன்றிய தோள் தொண்டரடிப்பொடி" என்றபடி கைங்கர்யவேஷங்களைப் போட்டுக்கொண்டு திரிந்தபோதிலும் "இன்னாரின்னார் இன்னது நினைக்கிறார்கள்" என்று எல்லாருடைய நினைவையும் நீ நெஞ்சினுள்ளேயே இருந்துகொண்டு அறிகின்றாயென்று உனது ஸர்வஜ்ஞத்வத்தை நான் அநுஸந்தித்தவாறே 'ஐயோ! நமது கள்ளவேஷம் வெளிப்படையாயிற்றே!' என்று வெட்கமடைந்து எனக்குள்ளேயே நான் சிரித்துக்கொண்டேனென்கிறார்.

"நானும் தொண்டாய்" என்றவுடனே எம்பெருமான் "ஆழ்வீர்! என்ன சொன்னீர்? மெய்யான தொண்டரா நீர்?" என்ன; 'இல்லை இல்லை, தொண்டுக்கே கோலம் பூண்டேனத்தனை' (அதாவது வேஷதாரித்தொண்டன்) என்றார். மாலை என்பதற்கு "எம்பெருமானை" என்று படர்க்கையாகப் பொருளுரையாது, "எம்பெருமானாகிய உன்னை" என்று முன்னிலையாக உரைத்தது-அறிதி என்ற முன்னிலை மூற்றுக்குச் சேரவேண்டுதலால்.

"ஸாதூநாம் விஜஹ்யாதே—ஸ்வாத்மாப்யேஷம் விகர்ஹதே" என்ற கருத்து சற்றடியில் உறையும். விலவறச் சிரித்திட்டேன் என்றது—எல்லை கடந்து சிரித்தமையைக் கூறியவாறு. ... ... (௩௪)

தாவியன் றுலகமெல்லாம் தலைவிளாக் கொண்டவெந்தாய்
சேவியே னுன்னையல்லால் சிக்கெனச் செங்கண்மாலே!
ஆவியே! அமுதேயென்ற னாருயிரனைய வெந்தாய்!
பாவியே னுன்னையல்லால் பாவியேன் பாவியேனே. (௩௫)

| | |
|---|---|
| அன்று | அக்காலத்தில் (த்ரிவிக்ரமாவதாரத்தில்) |
| தாவி | கடந்து |
| உலகம் எல்லாம் | எல்லா வுலகங்களையும் |
| தலை விளாக் கொண்ட | (திருவடியினால்) வியாபித்த |
| எந்தாய் | எமது ஸ்வாமியே! |
| செங்கண் மாலே | சிவந்த திருக்கண்களை யுடைய திருமாலே! |
| ஆவியே | (எனது உயிர் தரித்திருப்பதற்குக் காரணமான) பஞ்சப்ராண வாயுவானவனே! |
| அமுதே | அம்ருதம் போன்றவனே! |
| என் தன் ஆர் உயிர் அனைய எந்தாய் | (என்னை கல்வழியில் செலுத்தின எனது) அருமையான ஆத்மாவைப்போன்ற என்னு தலைவனே! |
| பாவியேன் | பாவியாகிய யான் |
| சிக்கென | உறுதியாக (எப்போதும் விடாமல்) |
| உன்னை அல்லால் | உன்னைத்தவிர (மற்றையோரை) |
| சேவியேன் | வணங்கமாட்டேன்; |
| | (உன்னையல்லாது வேறொருவரை) |
| பாவியேன் | நினைக்கவும் மாட்டேன்; |
| பாவியேனே | நான் பாவியேயாவேன். |

கீழ்ப்பாட்டில் தமது கள்ளத்தன்மையைப் பேசி, "இப்படிப்பட்ட நாம் எம்பெருமானைக் கிட்டுதல் தகாது" என்று ஆழ்வார் அவ்வெம்பெருமானை விட்டு அகல நினைக்க, அப்பெருமான் 'ஆழ்வீர்! நாம் உலகத்தாருடைய தாழ்வுகளைக் கண்ணெடுத்துப்பாராது அவர்களுடைய ஸ்வல்ப குணத்தையே பாராட்டி அவர்களை அடிமை கொள்பவரல்லோமோ?' என்று தன்னுடைய வாத்ஸல்யம் விளங்குமாறு எல்லாரையும் தான் அடிமைகொண்ட த்ரிவிக்ரமாவதார சரித்திரத்தை இவர்க்கு நினைப்பூட்டிச் சமாதானமுண்டாகுமாறு செய்ய; அதனால் ஆழ்வார் தாம் முன்பு அவனைவிட்டு விலகிச்செல்லும்படி நினைந்த தமது குற்றத்தைப்பாராட்டி, "பாவியேன் பாவியேனே" என்று தம்மை வெறுத்துக்கூறி, எம்பெருமானைத்தவிர வேறொரு கடவுளை நினைத்தலும் தொழுதலும் செய்யாத தமது தன்மையை வெளியிடுகின்றனர்.

எந்தாய்—எந்தை என்பதன் ஈறுதிரிந்தவிளி. சிக்கென—குறிப்பிடைச்சொல். ஆவி—உயிர் நிலைத்திருக்கக் காரணமான பஞ்சப்ராணன். என்றன்—தன்—சாரியை. அனைய—உவமவுருபு: அன்—இடைச்சொல் பகுதி (இது—அன்ன—எனவும் வழங்கும்.) குறிப்புப் பெயரெச்சம். பாவியேன்—என்ற மூன்றில், முதலது-எதிர்மறைத் தன்மையொருமை முற்று. இரண்டாவது—தன்மையொருமைப் பெயர்; எழுவாய். மூன்றாவது-குறிப்பு முற்று.

[தாவியன்றுலகமெல்லாம்.] உலகமெல்லாம் தாவியளந்தவரலாறு:—மஹாபலியென்னும் அஸுரராஜன் தனது வல்லமையால் இந்திரன் முதலிய யாவரையும்வென்று மூவுலகங்களையும் தன்வசப்படுத்தி அரசாண்டு செருக்குக்கொண்டிருந்தபொழுது, அரசிழந்த தேவர்கள் திருமாலைச் சரணமடைந்து வேண்ட, அப்பெருமான், குள்ளவடிவான வாமனாவதாரங்கொண்டு அம்மாவலியினிடஞ் சென்று தன் காலடியால் மூவடிமண் வேண்டி அதுகொடுத்தற்கு அவன் இசைத்தவுடனே திரிவிக்கிரமனாக ஆகாயத்தை அளாவி வளர்ந்து ஓரடியாற் பூலோகத்தையும், மற்றோரடியால் மேலுலகத்தையும் அளந்து, மூன்றாமடிக்காக அவன்முடியிற் காலைவைத்து அவனைப் பாதாளத்தில் அழுத்தி அடக்கினான் என்பதாம். ... ... ... ... ... ... ... (௩௮)

மழைக்கன்று வரைமுன்னேந்தும் மைந்தனே! மதுரவாறே!
உழைக்கன்றே போலநோக்க முடையவர் வலையுள்பட்டு
உழைக்கின்றேற் கென்னைநோக்கா தொழிவதே உன்னையன்றே
அழைக்கின்றேன் ஆதிமூர்த்தீ! அரங்கமா நகருளானே. (௩௯)

| | | | |
|---|---|---|---|
| அன்று | (இந்திரன் பசிக்கோபத்தாலே ஏழுநாள் விடாமழை பெய்வித்த) அக்காலத்திலே | முன் | (பசு முதலியவை மழையினால் கஷ்டமடைவதற்கு) முன்பாகவே |
| | | மழைக்கு | மழையைத் தடுப்பதற்காக |

| | | | |
|---|---|---|---|
| வரை | கோவர்த்தந பர்வதத்தை | பட்டு | அகப்பட்டு |
| ஏந்தும் | (கையில் குடையாக) ஏந்திய | உழைக்கின்றேற்கு என்னே | அடிக்கிற என்னை |
| மைந்தனே | மிடுக்கை யுடையவனே! | நோக்கா தொழிவதே | கடாக்ஷியாமல் விருப்பதும் தகுதியோ? |
| மதுர ஆறே | இனிய ஆறுபோல் எல்லார்க்கும் விடாயைத் தீர்ப்பவனே! | ஆதி மூர்த்தி | முழுமுதற் கடவுளே! |
| உழை கன்று போல நோக்கம் உடையவர் | மான் குட்டியின் விழிபோன்ற விழியையுடைய மாதர்களின் | அம்மா நகருளானே!—; | |
| | | உன்னை அன்றே | தேவரீரை நோக்கியன்றோ |
| வலையுள் | (அந்த நோக்காகிற) வலையினுள்ளே | அழைக்கின்றேன் | நான் கூப்பிடா நின்றேன். |

பேறு பெறுவதில் விரைவு மிகுதியாலே ஆற்றாமை கரைபுரண்டு பெருமிடறுசெய்து கூப்பிடுகிறார்.

இந்திரன் பசிக்கோபத்தாலே எழுநாள் விடாமழை பெய்வித்து வருத்தப் படுத்தின காலத்தில் கோவர்த்தநகிரியைக் கொற்றக்குடையாக வெடுத்து ஆயரையும் ஆநிரையையும் காத்தருளினவனன்றோ நீ; அப்படி அவர்களைக் காப்பதற்கு அவர்களிடத்தில் என்ன குணம் கண்டுபிடித்தாய்? அவ்விடையருடைய கோஷ்டியிலாவது பசுக்களின் திரளிலாவது அடியேனையும் சேர்த்துக்கொள்ளலாகாதா? என்னும் இரக்கப்பொருள் தோன்ற மழைக்கன்று வரைமுனேந்தும் மைந்தனே! என்கிறார்.

மதுர ஆறே!—ரக்ஷித்தருளாமல் உபேக்ஷித்தபோதிலும் உன்னை விட முடிவில்லையே! என்பது கருத்து. ஆறானது ஏரி, குளம் முதலியவைபோலே ஓரிடத்திலேயே இராமல் நாநாதேசங்களிலும் போய்ப் பெருகுவதுபோல் எம்பெருமான் அடியார் இருக்குமிடங்களி லெல்லாம்போய் ஸேவை ஸாதித்தருள்கின்ற ஸௌலப்யமும் இந்த முற்றுவமையால் தோற்றுமென்க.

உழைக்கன்றேபோல நோக்க முடையவர்—ஸ்த்ரீகள்; வடமொழியில் 'ம்ருகீத்ருசஃ—ம்ருகீத்ருச:' எனப்படுவர்.

உழைக்கின்றேற்கு என்றவிடத்தில் வேற்றுமையுருபுக்குப் பொருளில்லை; 'உழைக்கின்ற' என்று எச்சப் பொருள்படும். "செப்பிரியும் தண்சேறை யெம்பெருமான் திருவடியைச் சிந்தித்தேற்கு என்" என்ற திருமங்கையாழ்வார் பிரயோகமும் நோக்கத்தக்கது.

"உன்னையன்றே யழைக்கின்றேன்" என்றவாறே எம்பெருமான் "ஆழ்வீர்! நீர் அழைத்தவுடனே நான் 'ஏன்?' என்ன வேணுமோ? என்ன ஆவச்யகதை? என்று கேட்க ஆதிமூர்த்தி என்கிறார்—இவ்வுலகம் உருமாய்ந்துகிடந்த காலத்திலே ஒருவருடைய அபேக்ஷையும் எதிர்பாராமல் இவற்றை உண்டாக்கின உனக்கு இவற்றின் ரக்ஷணம் அவச்ய கர்த்தவ்யமன்றோ என்கை.

[மழைக்கன்று வரைமுனேந்தும்.] மலையெடுத்து மழைதடுத்த வரலாறு:— திருவாய்ப்பாடியில் ஆயர்களெல்லாருங்கூடி மழையின் பொருட்டாக இந்திரனை ஆராதிப்பதற்கென்று வழக்கப்படி சமைத்த சோற்றைக் கண்ணபிரான் ஒருகால் அவனுக்கு இடாதபடி விலக்கிக் கோவர்த்தநமலைக்கு இடச்சொல்லித் தானே ஒரு தேவதாரூபங்கொண்டு அமுதுசெய்தருள, அவ்விந்திரன் கோபத்தோடு புஷ்கலாவர்த்தம் முதலிய பலமேகங்களை ஏவி, கண்ணன் விரும்பி மேய்க்கிற கன்றுகட்கும் பசுக்களுக்கும் கண்ணனுக்கு இஷ்டரான இடையர்க்கும் இடைச்சியர்க்கும் தீங்கு தரும்படி கல்மழையை ஏழுநாள் இடைவிடாது பெய்வித்த பொழுது கண்ணன் கோவர்த்தநமென்னும் மலையை எடுத்துக் குடையாகப் பிடித்து மழையைத் தடுத்து எல்லாவுயிர்களையும் இடையூறு சிறிதுமின்றிக் காத்தருளினன் என்பதாம். ... ... ... (௩௬)

தெளிவிலாக் கலங்கல்நீர்சூழ் திருவரங்கத் துள்ளோங்கும்
ஒளியுளார் தாமேயன்றே தந்தையும் தாயுமாவார்
எளியதோ ரருளுமன்றே என்திறத் தெம்பிரானார்
அளியன்நம் பையலென்னார் அம்மவோ! கொடியவாறே (௩௭)

| | |
|---|---|
| தெளிவு இலா | (ஒருகாலும்) தெளிவில்லாமல் |
| கலங்கல் | கலக்கம் மாறாதிருக்கிற |
| நீர் சூழ் | காவேரியாலே சூழப்பெற்ற |
| திரு அரங்கத்துள் | கோயிலிலே |
| ஓங்கும் | விஞ்சியிருக்கிற |
| ஒளி உளார் தாமே அன்றே | தேஜஸ்ஸை உடையவரான அழகிய மணவாளனொருவனே யன்றோ |
| தந்தையும் தாயும் ஆவார் | (நமக்குத்) தகப்பனும் தாயுமாயிருப்பார்; |
| என் திறத்து | (அவர்) என் விஷயத்தில் (செய்தருள வேண்டுவது) |
| எளியது ஓர் அருளும் அன்றே | ஸாமாந்யமான ஒரு க்ருபாமாத்திரமே யன்றோ? |
| எம்பிரானார் | எனக்கு உபகாரகரான அவர் |
| நம் பையல் அளியன் என்னார் | "நம்முடைய பையலான இவன் நமது கருணைக்கு உரியன்" என்று திருவுள்ளம் பற்றுகிறாரில்லை; |
| அம்ம ஓ கொடிய ஆறே | ஐயோ! (இவருடைய இயல்வு) மிகவும் கொடுமையா யிராநின்றதே! |

தாம் இப்படி கதறாநிற்கச்செய்தேயும் பெரியபெருமாள் இரங்கி "அஞ்சேல்" என்னக் காணாமையாலே, 'தம்மையொழிய வேறே ஒரு சுற்றத்தவர் எனக்கு இருப்பதாக நினைத்திருக்கிறாரோ? ப்ரயோஜநாந்தரங்களை விரும்பி அகன்று போகிறேனென்று நினைத்திருக்கிறாரோ? 'நம்முடையவன்' என்று என்னைச் சிறிது அபிமானித்தால் போதுமாயிருக்க இவ்வளவுகூட அபிமானியாமல் கூக்குரல் கேட்டுக்கொண்டே கண்ணுறங்குவதே! அம்மே! இவர் திருவுள்ளம் இப்போது இங்ஙனே கொடிதாயிற்றே!' என்று வருந்துகின்றார்.

காவேரிக்குத் தெளிவில்லாமை—மேன்மேலும் பெருக்கு மிக்கிருக்கையாலே.

இத்தெளிவில்லாமையை பட்டர் ஸ்ரீரங்கராஜஸ்தவத்தில் ஒருசமத்காரம் தோற்ற வர்ணிக்கிருர் “துக்தாப்திர்ஜநகோ ஜநந்யஹமியம்—துக்தாப்திர் ஜநகோ ஜநந்யஹமியம்” இத்யாதி ச்லோகத்தால். அதன் கருத்து-பாற்கடல் தகப்பனர்; பொன்னி என்ற நான் தாய்; ஸ்ரீரங்கநாய்ச்சியார் பெண்; பெரியபெருமாள் மணவாளன்; இந்த விஷயத்திலே பெரியபெருமாளுக்கும் பெரியபிராட்டியார்க்கும் தகுதியாக நான் என்ன பண்ணப்போகிறேன்? என்று கலங்கினுற்போல, சாமரம், கருப்பூரம், சந்தநவ்ருக்ஷங்கள், சிறந்த ரத்நங்கள், முத்துக்கள் முதலியவற்றை அலைகளாகிற கைகளாலே உந்தா நின்றுகொண்டு ஆழ்ந்து வருகிற காவேரியைப் பற்றுங்கள் என்பதாம்.

திருவரங்கத்துள் ஓங்குமொளியுளார் என்றது—பரமபதம் முதலிய இடங்களில் எழுந்தருளியிருக்கு மிருப்பைக்காட்டிலும் கோயிலிலே எழுந்தருளியிருக்கு மிருப்பிலே உள்ள அதிசயம் தோற்ற. “பரமபதத்தி லொளி பகல் விளக் கென்னும்படியாயாய்த்து; அந்தகாரத்தில் தீபம்போலே குறைவாளரான ஸம்ஸாரிகளுக்கு உதவப்பெற்றபின்பு ஒளி மிக்கிருக்கிறபடி. நித்யஸூரிகளின் நடுவே யிருக்கிறபோது ஆதித்யர்கள் நடுவே ஆதித்யனிருக்குமாபோலே யாய்த்திருப்பது; இங்கு ஆர்த்தர் மிகவும் உண்டாகையாலே தத்ரக்ஷணம் பண்ணி ஒளியும் மிகா நிற்குமத்தனை.” என்ற வ்யாக்யாநஸூக்திகளை அநுஸந்திக்க.

விபீஷணாதிகளை ரக்ஷித்தாற்போலே வில்லும் கோலுமெடுத்து ரக்ஷிக்க வேண்டியதில்லை; குளிர ஒருகால் நோக்கியருளினுல் என்தாபம் தீரும் என்ற கருத்துப்பட அருளிச்செய்கிருர்-எளியதோரருளுமன்றே என்திறத்து.

குறையை முறையிடும்போது நிந்திக்கவேண்டியிருக்க, எம்பிரானுர் என்று பெருநன்றி செய்ததாகக் கூறுகைக்கு அடி என்? என்னில்; பெற்ற நன்றியை இல்லை செய்கிற நாஸ்திகரன்றே இவ்வாழ்வார்; அடியிலே ஸ்வரூபத்தை உணர்த்தி அதுக்குமேலே ‘உபாயோபேயங்கள் தாமே’ என்னுமிடத்தை உணர்த்தி, இப்போதும் கூப்பிடு கேட்க அவகாசம் கொடுத்திருக்கிற உபகாரமுண்டே; அந்த நன்றியை நினைத்து எம்பிரானுர் என்கிருரென்க.

எம்பெருமான் சோதிவாய்திறந்து ‘ஆழ்வீர்!’ என்றழைக்கவேணுமென்று இவர் ஆசைப்படுகின்ருரில்லை; ‘அடே பையா!’ என்று ஒரு இன்சொல் சொல்லக்கேட்க விரும்புகின்ருரித்தனை. ... ... (கூஎ)

மேம்பொருள் போகவிட்டு மெய்ம்மையை மிகவுணர்ந்து
ஆம்பரி சறிந்துகொண்டு ஐம்புல னகத்தடக்கிக்
காம்பறத் தலைசிரைத்துன் கடைத்தலை யிருந்துவாழும்
சோம்பரை யுகத்திபோலும் சூழ்புன லரங்கத்தானே. (கூஅ)

புனல் சூழ் — காவிரி சூழ்ந்த
அரங்கத்தானே — கோயிலிலே கண்வளர்ந்தருளுமவனே!
மேம்பொருள் — (ப்ராக்ருத ஜனங்கள்) விரும்புகிற லௌகிக பதார்த்தங்களை
போகவிட்டு — வாஸனையோடு விட்டிட்டு
மெய்ம்மையை — ஆத்மஸ்வரூபத்தை
மிக உணர்ந்து — உள்ளபடி அறிந்து
ஆம் பரிசு — ஸ்வரூபாநுரூபமான ஸமாசாரங்களையும்
அறிந்து கொண்டு — தெரிந்துகொண்டு
ஐம் புலன் — ஐந்து இந்திரியங்களையும்
அகத்து அடக்கி — (விஷயாந்தரங்களில் போக வொட்டாமல்) தம் முள்ளே பதிய அடக்கி,
காம்பு அற — அடியோடே
தலை சிரைத்து — தன் தலையிலுள்ள சுமையைத்தொலைத்து
உன் தலைக்கடை இருந்து — உனது திருவாசலிலே (காவலாளராக) வாஸஞ்செய்து
வாழும் — உஜ்ஜீவிக்கின்ற
சோம்பரை — (தம்முடைய ஹிதத்தில்) சோம்பியிருக்குமவர்களை
உகத்தி போலும் — உகக்குமவனல்லையோ நீ.

"ஆளியனம் பையலென்னார் அம்மவோ கொடியவாறே!" என்று கீழ்ப் பாட்டில் ஆழ்வார் வருந்தினவாறே "இவ்விருள் தருமாஞாலத்திலே ஸ்வரூபாநுரூபமான புருஷார்த்தத்தை அபேக்ஷிப்பதும் அதற்காக நம் கைபார்த்திருப்பதும் அதுக்குமேலே விளம்பம் பொறாமல் கூப்பிடுவதும்! இதென்ன ஆச்சரியமாயிருக்கிறதே! இப்படிப்பட்ட ஒரு உத்தமாதிகாரியைக் கிடைக்கப் பெற்றோமே!" என்று பெரியபெருமாள் திருவுள்ளம் மிகவும் ப்ரஸந்நமாய், அந்த ப்ரஸாதமெல்லாம் திருமுகத்திலே தோற்றும்படி யிருக்கக்கண்ட ஆழ்வார், "பெருமானே! தேவரீரைக்கிட்டி தேவரீர் பக்கலிலே ஸர்வபாரங்களையும் ஸமர்ப்பித்து நிச்சிந்தையாயிருப்பவர்களைக் கண்டால் தேவரீருடைய திருவுள்ளம் இங்ஙனேயோ மலர்ந்திருப்பது!" என்று பெரியபெருமாள் திருமுகத்தை நோக்கி விண்ணப்பம் செய்கிறார்.

மேம்பொருள் என்பதற்கு (க) மேலெழுந்த பொருளென்றும், (உ) மேவின பொருளென்றும், (௩) மேம்பாட்டை விளைக்கும் பொருளென்றும் மூன்று படியாக நிர்வாஹம்; (க) கருமங்கள் காரணமாக வந்தேறியாய் பகவத்விஷய உணர்ச்சி வந்தவாறே விட்டகலும்படியாயிருக்கும் பொருள்-மேலெழுந்த பொருள் எனப்படும். அதாவது ஸம்ஸாரஸம்பந்தம். (உ) மேவின பொருளாவது-சிக்கன ஒட்டிக்கொண்டிருக்கும் பொருள்; சேதநனால் பிரிக்கவொண்ணாதபடி யிருக்கை. அதாவது தேஹஸம்பந்தம், அவித்யா ஸம்பந்தம். (௩) மேம்பாட்டை விளைக்கையாவது-தன்னைப் பற்றினாரை ஸர்வஜ்ஞராக அபிமானித்திருக்கும்படி பண்ணவற்றாகை. அப்படிப்பட்ட பொருளாவது-ப்ரக்ருதி ப்ராக்ருத பதார்த்த ஸம்பந்தம்; ஆகிய இவற்றை வாஸனையோடே ஒழித்து. தேஹத்தை ஆத்மாவென்று நினைக்கை, தேஹத்தைப்பற்றின ப்ராக்ருத பதார்த்தங்களில் 'இவை என்னுடையவை' என்கிற மமதாபுத்தி, தேஹத்திற்காட்டில்

வேறுபட்ட ஆத்மாவில் ஸ்வாதந்திரியபுத்தி முதலியவற்றை அடியோடு ஒழித்து என்றபடி.

அதற்குமேல் ஆத்மஸ்வரூபத்தை உள்ளபடி உணர்வேனும்: அதாவது—ஆத்மா ஸ்வயம்ப்ரகாசன், நித்யன், உணர்வைக் குணமாகவுடையவன்; அணு பரிமாணன், எம்பெருமானுக்கு அநந்யார்ஹ சேஷபூதன்; அந்த சேஷத்வத்தை பாகவதரளவும் உடையவன் என்றிங்ஙனே விரிவாக உணருகை. ப்ரக்ருதி ப்ராக்ருதங்கள் ஹேயம் என்றறிந்து ஆத்மாவையும் உள்ளபடி அறிந்தபிறகு பின்னையும் ஆம் பரிசு அறிந்துகொள்ளுகையாவது—கைங்கரியமே புருஷார்த்தம் என்றறிகை.

வ்யாக்யாநஸூக்தி:—“ஆத்மாபிமாநாநுரூபமாக வாய்த்து வ்ருத்தி ஹேதுக்கள் தானிருப்பது; தன்னைத் திர்யக்காக அபிமானித்தபோது த்ருணஸூஹமாய்த்து வ்ருத்தி ஹேதுவாகக்கடவது; ‘மனுஷ்யோஹம்’ என்று அபிமானித்தபோது அந்நம் வ்ருத்தி ஹேதுவாகக்கடவது; ‘தேவோஹம்’ என்றபோது அம்ருதம் வ்ருத்தி ஹேதுவாகக்கடவது; ‘தாஸோஹம்’ என்றபோது கைங்கர்யமே வ்ருத்தி ஹேதுவாகக்கடவது.”

ஐம்புலனகத்தடக்குகையாவது—எம்பெருமானுக்குப் பண்ணும் கைங்கரியத்தில் ஸ்வப்ரயோஜநத்வபுத்தி பிறவாதபடி நோக்குகை. தனக்கு இனிதாகப் பண்ணும் கைங்கரியமும் அபுருஷார்த்தம்; தனக்கும் எம்பெருமானுக்கும் இனிதாகப் பண்ணும் கைங்கரியமும் அபுருஷார்த்தம்; “தனக்கேயாக எனைக் கொள்ளுமீதே” என்றபடி எம்பெருமானுக்கே இனிதாகப் பண்ணும் கைங்கர்யமே புருஷார்த்தம் என்கிற ஸூக்ஷ்மார்த்தம் இங்கு உணரத்தக்கது.

காம்பு அறத் தலைசிரைத்து—உபாயாந்தரங்களில் தனக்குள்ள பற்று அறும்படி தன் தலையிலுண்டான துரிதங்களைப் போக்கி. அதாவது—பேற்றுக்கு எம்பெருமான் ஸாதநமேயொழிய நாம் செய்யும் க்ரியாகலாபங்களொன்றும் ஸாதநமல்ல என்று உறுதியான அத்யவஸாயம் வஹித்து என்றபடி. உலகத்தில் அரசர்கள் தண்டனை விதிக்கும்போது தலையைச் சிரைக்கும்படி கட்டளையிடுவர்; தன் கருத்து அஹங்காரத்தைப் போக்குகையாம். ஆக அஹங்கார கர்ப்பமான உபாயாந்தரங்களின் விடுகையைச் சொன்னபடி.

இப்படி பரமைகாந்திகளாய் எப்போதும் உன் திருவாசலையே பற்றிக் கிடந்து வாழுஞ் சோம்பரான பரமபாகவதர்கள் விஷயத்திலே தேவரீர் திருவுள்ளம் உகந்திருக்கும்படியே! என்று வியக்கிறபடி.

ஒரு ஸம்ஸாரி, தன் வாசலைப்பற்றிக்கிடந்ததொரு நாயைக் கொன்றவனை வெட்டி, பிறகு தானும் குத்திக்கொண்டு மாண்டான். இதை ஒருநாள் வீதியிலே எழுந்தருளிக்கொண்டிருந்த திருக்கண்ணமங்கையாண்டான் கடாக்ஷித்து, “ஒரு தேஹாத்மாபிமாநியான மநுஷ்யன் ‘இந்த நாய் நம்வாசலைப்பற்றிக் கிடந்தது’ என்ற காரணத்தாலே அதன்மேல் இவ்வளவு பரிந்தால்; நாம் பரம

சேதநனாகிய எம்பெருமான் திருவாசலைப் பற்றிக்கிடந்தால் யமாதிகள் கையிலே நம்மை விட்டுக்கொடான்" என்று திருவுள்ளம்பற்றி அப்போதே திருக்கண்ண மங்கைப் பத்தராவிப்பெருமான் ஸந்நிதியில் கோபுரவாசற் குகைப்புடையிலே ஸவ வ்யாபாரங்களை யெல்லாம்விட்டுச் சாய்ந்தருளினார் என்ற ஐதிஹ்யம் இங்கு அநுஸந்திப்பது.

வாழும் சோம்பர் என்றது கெடுஞ்சோம்பரை வ்யாவர்த்திக்கிறது. கெடுஞ் சோம்பராவார் - ஈச்வரனில்லை, சாஸ்த்ரமில்லை, பரலோகமில்லை என்றாற்போலே எல்லாவற்றையும் இல்லைசெய்து விஹிதகர்மங்களை அநுஷ்டியாமல் தோன்றிற் றுச் செய்து சோம்பேறிகளாய்த் திரிவார். வாழுஞ் சோம்பராவார் - சாஸ்த்ரத் தில் நாஸ்திகராய்க் கர்த்தவ்யங்களை விடுகையன்றிக்கே ஆஸ்திகசிகாமணிகளாய் ஸித்தோபாயமான எம்பெருமானை ஸ்வீகரித்து அவ்வெம்பெருமானுடைய அநுபவமே காலக்ஷேபமாய்த் தமது ஹிதத்தைத் தாமே தேடிக்கொள்வதில் சோம்பியிருப்பவர்கள்.

உகத்தி—முன்னிலையொருமை வினைமுற்று.

போலும்—ஒப்பில்போலி; உவமைப்பொருள் தராத போலென்னுஞ் சொல்; வாக்யாலங்காரமெனப்படும். (௩௮)

அடிமையில் குடிமையில்லா அயல்சதுப் பேதிமாரில்
குடிமையில் கடைமைபட்ட குக்கரில் பிறப்பரேனும்
முடியினில் துளபம்வைத்தாய் மொய்கழற் கன்புசெய்யும்
அடியரை யுகத்திபோலு மரங்கமா நகருளானே. (௩௯)

| | |
|---|---|
| முடியினில் | திருமுடியிலே |
| துளபம் | திருத்துழாய்மாலையை |
| வைத்தாய் | அணிந்தவனே! |
| அரங்கம் மாநகர் உளானே!—; | |
| அடிமையில் | (உனக்குக்) கைங்கரியம் செய்வதில் |
| குடிமை இல்லா | உயர்குடிப் பிறப்பிற்கு ஏற்ற ஒழுக்கமில்லாத |
| அயல் | (அடிமைக்கு) அயலரான |
| சதுப்பேதிமாரில் | நான்கு வேதங்களையு மோதின அந்தணர்களைக் காட்டிலும் |
| குடிமையில் கடைமை பட்ட | குடிப்பிறப்பினால் இழிவடைந்த [மிகவும் இழிகுலத்திற் பிறந்த] |
| குக்கரில் | பாமசண்டாள ஜாதியில் |
| பிறப்பர் ஏனும் | பிறப்பர்களானாலும் |
| மொய் கழற்கு | (உனது) நெருங்கிய திருவடிகளிடத்து |
| அன்பு செய்யும் | பக்தி செய்கின்ற |
| அடியரை | அடியார்களையே |
| உகத்தி போலும் | நீ விரும்புவாய் போலும். |

இனிமேல், கீழ்ப்பாட்டில் சொன்ன ஞானமுடைய பாகவதர்களின் வைப வம் கூறுகிறது எம்பெருமான் தன் திருவடித்தாமரைகளில் பக்திசெய்யாதவர் கள் உயர்குலத்திற் பிறந்தவர்களாயிருந்தபோதிலும் அவர்களை ஒருபதார்த்த மாகவும் நினையாமல் உபேக்ஷித்துவிட்டு, தனது திருவடிகளில் பக்தி செய்பவர்

மிகவும் இழிகுலத்தவராயினும் அவரையே விரும்புவன் என்கிறது இப் பாட்டில்.

மேன்மைக்குக் காரணம்—எம்பெருமான்பக்கல் தொண்டுபூண்டு ஒழுகுவதேதவிர, உயர்குடிப்பிறப்பு அன்று. அவ்வாறு தொண்டுபூண்டு ஒழுகாமலிருப்பதே தாழ்ச்சிக்குக் காரணம்; இழிகுலப்பிறப்பு அன்று; ஆகையால் யோநிஜந்மத்தைச் சிறிதும் பாராட்டவேண்டாவென்க.

குடிமை—குடிப்பிறப்பிற்கு ஏற்ற நல்லொழுக்கம். அயலாதலாவது—'எம்பெருமானுடைய கைங்கரியத்தைச் செய்தற்கு அநுகூலமாக வேதமோதுகிறோம்' என்று அறியாதிருக்கை. 'அத்யயநத்திற்குப் பலன் வேதத்தின் பொருள் உள்ளபடி அறிந்து நடப்பதுதான்' என்று உணராதவர்கள் நான்கு வேதங்களிலும் வல்லவரானாலும் பயனில்லை என்பது முதலடியில் விளங்கும்.

சதுப்பேதிமார்—சதுர் வேதிமார்; இருக்கு, யஜுஸ், ஸாமம், அதர்வணம் என்ற நான்கு வேதங்களை ஓதினவர்களென்கை. சுக்கர் - மிகவும் தாழ்ந்தவர் என்பது பொருள்; [ஶூத்ர] என்ற வடசொல் சுக்கர் எனத்திரிந்தது. ஏனும் - எனினும் என்பதன் மரூஉ. (௪௰)

திருமறு மார்ப! நின்னைச் சிந்தையுள் திகழவைத்து
மருவிய மனத்தராகில் மாநிலத் துயிர்களெல்லாம்
வெருவுறக் கொன்றுசுட்டிட் டீட்டிய வினையரேலும்
அருவினைப் பயனதுய்யார் அரங்கமா நகருளானே. (௪௧)

திரு — பெரிய பிராட்டியாரையும்
மறு — ஸ்ரீவத்ஸமென்கிற மறுவையும்
மார்ப — திருமார்பிலே அணிந்துள்ளவனே!
அரங்கமா நகருளானே!—;
மா நிலத்து — (இந்தப்) பெரிய பூமண்டலத்திலே உள்ள
உயிர்கள் எல்லாம் — ஜீவராசிகளெல்லாம்
வெருவு உற — (ஜகத்தெல்லாம்) நடுங்கும்படி
கொன்று சுட்டிட்டு — பரஹிம்ஸைபண்ணி
ஈட்டிய வினையர் ஏனும் — விசேஷமாக ஸம்பாதிக்கப்பட்ட பாவங்களையுடையவர்களானாலும்
நின்னை — உன்னை
சிந்தையில் — (தங்கள்) நெஞ்சில்
திகழ வைத்து — விளங்கும்படி வைத்து
மருவிய மனத்தர் ஆகில் — த்ருடமான அத்யவஸாயத்தை உடையராயிருப்பரேயானால் (அவர்கள்)
அரு வினை — (தாங்கள் செய்த) மஹாபாதகங்களினுடைய
பயன் அது — பலனை
உய்யார் — அநுபவிக்கமாட்டார்கள்.

தாழ்ந்த வகுப்பில் பிறப்பேயன்றி நீசமான அநுஷ்டானமுமுடையரேயாயினும் "மேம் பொருள் போகவிட்டு" என்ற பாட்டிற்கூறிய அதிகாரத்திலே நிஷ்டையுடையராகில் அவர்களுக்கு அந்தக் கருமங்களின் பலன் அநுபவிக்கக் கூடுவதல்ல என்கிறது, இப்பாட்டு.

திருமகள் கொழுநனான எம்பெருமானே! உன்னை இடைவிடாது நெஞ்சிலே அநுஸந்தித்திருப்பாராகில் அந்த ப்ரபாவத்தாலே அவர்களுடைய பரஹிம்ஸை முதலிய கொடியபாவங்களும் தீயிலிட்ட தூசுபோல் உருமாய்ந்தொழியுமாதலால் அவர்கள் நரகங்களிலே புக்கு அக்கருமங்களின் பலன்களான தண்டனைகளை அநுபவிக்கவேண்டிய ப்ரஸக்தியே யில்லை என்றவாறு.

"நின்னைச் சிந்தையுள் திகழவைத்து மருவிய மனத்தராகில்" என்றது–ஒருகையாலே எம்பெருமானைப்பற்றி மற்றொரு கையாலே ஸ்வப்ரவ்ருத்தியாகிய உபாயாந்தரங்களையும்பற்றி அநர்த்தப்படாமல் 'உபாயமும் உபேயமுமாகிய இரண்டும் எம்பெருமானே' என்று உறுதியான அத்யவஸாயம் கொள்வார்களாகில் என்றபடி.

"மாநிலத்துயிர்களெல்லாம்" என்கையாலே இவ்வதிகாரத்திற்கு ஜாதிநியமமில்லையென்பது போதரும்.

'வெருவுற' என்பது–கொன்று என்பதிலும் சுட்டிட்டு என்பதிலும் தனித்தனியே இயையும். (௪௰)

வானுளா ரறியலாகா வானவா வென்பராகில்
தேனுலாந் துளபமாலைச் சென்னியா வென்பராகில்
ஊனமா யினகள்செய்யு மூனகா ரகர்களேனும்
போனகம் செய்தசேடம் தருவரேல் புனிதமன்றே (௪௧)

ஊனம் ஆயினகள் செய்யும் — தாங்கள் நிஹீநமான செயல்களைச் செய்யுமவர்களாயும்

ஊன காரகர்கள் ஏனும் — பிறரைக் கொண்டு நிஹீநமான க்ருத்யங்களைச் செய்விப்பவர்களாயுமிருந்தபோதிலும்

வான் உளார் அறியல் ஆகா வானவா என்பர் ஆகில் — 'மேலுலகத்திலுள்ள பிரமன் முதலியோராலும் அறியமுடியாத தேவனே!' என்று அநுஸந்திப்பாராகில்

தேன் உலாம் துளபம் மாலை சென்னியா என்பர் ஆகில் — 'தேன் பெருகாநின்ற திருத்துழாய் மாலையைத் திருமுடியிலே அணியுமவனே!' என்று அநுஸந்திப்பாராகில்

(அப்படிப்பட்ட மஹாத்மாக்கள்)

போனகம் செய்த சேடம் — தாங்கள் அமுது செய்து மிகுந்த பிரஸாதத்தை

தருவர் எல் — அநுக்ரஹிப்பாராகில்

அன்றே — அப்போதே

புனிதம் — (அந்த ப்ரஸாதத்தைப் பெற்றவர்கள்) பரிசுத்தராவார்கள்.

பகவத்ஸம்பந்தம் பெற்றவர்களுக்கு நிஹீந ஜந்மத்தாலும் நிஹீந அநுஷ்டாநத்தாலும் ஒரு குறையுமில்லையென்பது மாத்திரமேயல்ல; அவர்கள் தங்களுடைய உச்சிஷ்டாந்நத்தாலே ஸம்ஸாரிகளையெல்லாம் பரிசுத்தராக்கும்படியான பெருமை பொருந்தியவர்கள் என்பது இப்பாட்டு.

தேவர்கள் மேலுலகில் இருப்பவர்கள் என்ற மாத்திரத்தால் அவர்களுக்கு எம்பெருமானுடைய ஸ்வரூபரூபம் முதலியவை விசதமாய்விடுமென்ன

முடியாது. "நாம் மநுஷ்யர்களிற்காட்டிலும் மிகவும் மேம்பாடுடையோம்; மேலுலகத்தில் வாழ்கிறோம்; கடவர்களாயிருக்கிறோம்" என்றாற்போலே அவர்கள் தங்களைப்பெருக்க மதித்திருப்பதால், "அகிஞ்சநோநந்யகதி:" என்றிருக்கும் ஸாத்விகாதிகாரிகளால் அறியப்படுமவனான எம்பெருமானை அவ்வஹங்காரிகள் அறியகில்லார் என்க. இப்படி எம்பெருமானுக்குள்ள 'அறிவதரியான்' என்கின்ற ஸ்வரூபத்தை உள்ளபடி அறிவரேல், அவர்கள் தாங்கள் இழிதொழில் செய்யுமவர்களாயிருந்தாலும், தாங்கள் செய்வது போதாமல் பிறரையும் அவ்விழி தொழில்களைச் செய்விப்பவர்களாயிருந்தாலும் அவர்கள் தாங்கள் பெற்றிருக்கும் பகவத் ஸ்வரூபவுணர்ச்சி காரணமாக மிகவும் ஆதரிக்கப்படுமவர்களேயன்றி இழிதொழில் செய்யுமவர்களென்று இகழப்படமாட்டார்கள். அவ்வளவேயுமன்று; அவர்கள் தாங்களமுதுசெய்து மிருந்த ப்ரஸாதத்தை அருள்புரிந்தால் அதனைப்பெற்று மற்றையோர் தூய்மைபெறலாம்படி அத்தனை பெருமை பொருந்தியவர்கள்காண் என்கிறது.

போனகம் செய்த சேடம் என்றதன் பொருளை விவரிக்கப் புகுமிடத்து ஸம்ப்ரதாய பேதத்தாலே அர்த்தபேதம் விளையும்; "'த்வதீயபோஜ்யோஜ்ஜிதஶேஷபோஜிநா — த்வதீயபுக்தோஜ்ஜிதசேஷ போஜிநா' என்றும் 'கலத்ததுண்டு' என்றும் சொல்லுகிறபடியே அமுதுசெய்து கைவாங்கின கலத்தில் ப்ரஸாதம்" என்றார் பெரியவாச்சான்பிள்ளை; வேதாந்ததேசிகன் ரஹஸ்யத்ரயஸாரத்திலே ப்ரபாவ வ்யவஸ்தாதிகாரத்திலே "'போனகஞ் செய்த சேடந்தருவரேல் புனிதமன்றே' என்றதுவும் குருவிஷயமாமித்தனை; பொதுவானாலும் பகவத்ஸங்கீர்த்தநபரர் தேசகாலாதி வைகுண்யத்தாலே ஊர்த்வருத்திகளுமாய் ஊஹகாரகர்களுமாயிருந்தார்களேயாகிலும் தாங்களமுது செய்த சேஷம் தருவாராகில் புனிதமாமென்றதித்தனை. இதில் சேஷசப்தம் "அந்நஶேஷ: கிம்க்ரியதாம்? உச்சிஷ்டஸஹபுஜ்யதாம் — அந்நசேஷ: கிம்க்ரியதாம்? இஷ்டைஸ்ஸஹ புஜ்யதாம்" இத்யாதிகளில் ப்ரயோகத்தாலே பாண்டஸ்தவிஷயமானால் விரோதமில்லை; உச்சிஷ்டசப்தந் தானும் ந்ருத்யாதிகளிலே புக்தசிஷ்டமாய் பாகபாத்ரஸ்தமானதிலும் ப்ரயுக்தம்" என்றருளிச்செய்து வைத்தார். ஆசாரியன் தவிர மற்றையோருடைய உச்சிஷ்டத்தை புஜித்தால் ஒருமாதம் தீர்த்தபாநமாத்ரத்தோடே வ்ரதமிருந்து பிறகு ப்ராஹ்மகூர்ச்சபாநஞ்செய்து பரிசுத்தியடைவான் என்று ஸநத்குமார ஸம்ஹிதையில் கூறப்பட்டிருப்பதால் இப்பாட்டிலுள்ள "போனகஞ் செய்த சேடம் தருவரேல்" என்பதை ஆசார்யவிஷயமாக நயிப்பிக்க வேண்டுமேயொழிய ஸாமான்யமாக ஸ்வஜாதீய பரமாகக் கொள்ளத்தகாது. அப்படி கொண்டாலும் சேடம் என்பதற்கு 'எச்சில்பண்ணியிருந்த ப்ரஸாதம்' என்று பொருளில்லை; சோறு சமைத்த சட்டியில் மிகுந்திருக்கும் ப்ரஸாதமென்றே பொருள் கொள்ளவேணும் என்பது தேசிகனது திருவுள்ளம். 'த்வதாஶ்ரித பதாம்புஜத்வய தத்ஷாலிதம் வாரிஸேவநம் — த்வத்பாதாம்புஜயுக்மம் தீர்த்தம்

ததுச்சிஷ்டம் ஸ்வபாவகம்' என்கிற பகவச் சாஸ்த்ரவசநத்தின் யதார்த்த மான பொருளிலே ஊன்றினர் பெரியவாச்சான்பிள்ளை. இனி இதன் விவ ரணத்தை "ப்ரபாவபரீக்ஷா" என்னும் அடியேனது வாதக்ரந்தத்திலே விரியக் கண்டு தெளிக.

ஊனகாரகர்—வடசொல் தொடர்; ஊகம் காரயந்தீதி। ... (௪௧)

பழுதிலா வொழுகலாற்றுப் பலசதுப் பேதிமார்கள்
இழிகுலத் தவர்களேனு மெம்மடி யார்களாகில்
தொழுமினீர் கொடுமின்கொள்மி னென்றுநின் னோடுமொக்க
வழிபட வருளினாய்போல் மதிள்திரு வரங்கத்தானே. (௪௨)

மதிள் திருவரங்கத்தானே!—;
ஒழுகல் ஆறு — பிரமன்முதல் தங்களளவும் நீண்டு வருகிற பரம்பரையில்
பழுது இலா — ஒருகுற்றமு மற்றிருக்கு மவர்களாய்
பல சதுப் பேதிமார்கள் — நான்கு வேதங்களையும் ஓதினவர்களாயு முள்ளவர்களே!
எம் அடியார்கள் ஆகில் — "நமக்கு அடிமைப்பட்டவர்களாயிருந்தால் (அவர்கள்)
இழி குலத்தவர்களேனும் — தாழ்ந்த வகுப்பில் பிறந்தார்களே யாகிலும்
நீர் — நீங்கள்
தொழுமின் — (அவர்களைத்) தொழுங்கள்;
கொடுமின் — (உங்களிடத்திலுள்ள விசேஷார்த்தங்களை அவர்களுக்கு) உபதேசியுங்கள்
கொள்மின் — (அவர்களிடத்தில் விசேஷார்த்தங்களுண்டாகில்) கேட்டுக்கொள்ளுங்கள்;"
என்று — என்று உபதேசித்தருளி
நின்னோடும் ஒக்க — உனக்கு ஸமமாக
வழிபட — அவர்களை ஆராதிக்கும்படி
அருளினாய் — உரைத்தருளினாய்;
(போல்—அசை).

இப்பாட்டில் முதலடி-ஸம்போதநம் (விளி); "திருவரங்கத்தானே!" என்றுதான் ஒரு ஸம்போதநமாயிற்றே; பின்னை இந்த ஸம்போதநமும் எங்ஙனே அந்வயிப்பது? என்னில்; அரங்கத்தானே! என்கிற ஸம்போதநம் ஆழ்வாருடையது; சதுப் பேதிமார்கள்! என்கிற ஸம்போதநம் [அண்மைவிளி] பெருமானுடையது. அதாவது-உத்பத்தியிலாவது ஆசாரம் முதலியவற்றிலாவது ஒருவகையாலும் குறையின்றியே ஸத்ஸந்தாந ப்ரஸூதர்களாய் ஸதாசாரநிஷ்டர்களாயிருக்கும் [அத ஏவ 'நாம் இப்படிப்பட்ட உத்தம ப்ராஹ்மணர்' என்று மார்பை நெறித்திருக்கும்] சதுர்வேதிகளை நோக்கி எம்பெருமான் கூறுகின்றான்; 'ஓ சதுர்வேதிகளே! உங்களைப்போலே ப்ரஹ்மா தொடங்கி நெடுகிவருகிற வம்சப்ரவாஹத்திலே பிறந்து சதுர்வேதிகளாயிருப்பவர்கள் தான் பூஜ்யர், மற்றையோர் அநாதரணீயர் என்று நீங்கள் பாவிக்கலாகாது; எந்த ஜாதியிலே பிறந்தவரேனும் எனது அடியவர்களானால் அவர்களை நீங்கள் தொழவேணும்; பரஸ்பரம் ஜ்ஞாநத்தைக் கொடுத்துக்கொள்ளலாம்; விசேஷமாகச் சொல்வதேன்? என்னை நீங்கள் எவ்விதமாக ஆராதிக்க

உடன்பட்டிருக்கிறீர்களோ, அவ்விதமாகவே அவர்களையும் ஆராதிக்க வேண்டியதுதான்" என்று ஸ்ரீபாஞ்சராத்ரத்திலே "ஸத்ரஷு வியாஹ்யஷா—பக்தி ரஷ்ட விதாஹ்யேஷா" என்று தொடங்கி "தஸ்மை தேயம் ததோ க்ராஹ்யம் ஸச பூஜ்யோ யதாஹ்யஹம்—தஸ்மைதேயம் ததோக்ராஹ்யம் ஸசபூஜ்யோ யதாஹ்யஹம்" என்பதீறாகவுள்ள ச்லோகங்களை நோக்குக.

ஆசார்யஹ்ருதயத்திலே—"ம்லேச்சனும் பக்தனானால் சதுர்வேதிகள் அநுவர்த்திக்க அறிவுகொடுத்துக் குலதைவத்தோடொக்கப் பூஜைகொண்டு பாவன தீர்த்த ப்ரஸாதனா மென்கிற திருமுகப்படியும்" என்னும் ஸ்ரீஸூக்தியும் அதன் வ்யாக்யான ஸ்ரீஸூக்திகளும் இங்கு அநுஸந்திக்கத்தக்கவை. ... (சஉ)

அமரவோ ரங்கமாறும் வேதமோர் நான்குமோதித்
தமர்களில் தலைவராய சாதியந் தணர்களேலும்
நுமர்களைப் பழிப்பராகில் நொடிப்பதோ ரளவிலாங்கே
அவர்கள்தாம் புலையர்போலு மரங்கமா நகருளானே. (சங)

அரங்கமா நகருளானே!—;

| | |
|---|---|
| ஓர் அங்கம் ஆறும் | (வேதத்தின்) விலக்ஷணமான ஆறு அங்கங்களையும் |
| ஓர் வேதம் நான்கும் | நான்கு வேதங்களையும் |
| அமர | நெஞ்சில் பதியும்படி |
| ஓதி | அதிகரித்து |
| தமர்களில் | பாகவதர்களுக்குள்ளே |
| தலைவர் ஆய | முதன்மையான |
| சாதி அந்தணர்களேனும் | ப்ராஹ்மண ஜாதியர்களாயினும் (அவர்கள்) |
| நுமர்களை | தேவரீருடைய அடியார்களை |
| பழிப்பர் ஆகில் | (அவர்களுடைய ஜந்மத்தைப்பார்த்து) தூஷிப்பாராகில் |
| நொடிப்பது ஓர் அளவில் | ஒரு நிமிஷகாலத்துக்குள்ளே |
| அவர்கள் தாம் | அந்த ஜாதி ப்ராஹ்மணர்கள் தாம் |
| ஆங்கே | அப்போதே |
| புலையர் | சண்டாளராவர்கள். |

(போலும்—வாக்யாலங்காரம்.)

ருக்கு, யஜுஸ், ஸாமம், அதர்வணம் என்று வேதங்கள் நான்கு; சிக்ஷை, வியாகரணம், சந்தஸ், நிருக்தம், ஜ்யோதிஷம், கல்பம் என்று வேதாங்கங்கள் ஆறு; இவற்றையெல்லாம் கண்டபாடம் பண்ணி அவற்றின் பொருள்களையும் அறிந்து, அவ்வறிவுக்குப் பலனாக பகவத்கைங்கர்யத்தில் முதன்மையாக ஊன்றியிருக்கும் சிறந்த அந்தணர்களாயிருந்தபோதிலும் அவர்கள், கீழ்க்கூறிய யோக்யதைகளொன்றுமில்லாமல் கேவலம் பகவத்கைங்கர்ய மொன்று மாத்திரமுடைய ஒரு ஸ்ரீவைஷ்ணவரை [—அதாவது சண்டாளஜாதியிலே பிறந்தவரை] அந்தப் பிறவியைப்பற்றி இகழ்வாக நினைத்து தூஷிப்பார்களானால் தூஷிக்குமவர்கள் தாங்களே ப்ராஹ்மண்யம் கெட்டுக் கர்மசண்டாளராய்ப் போவர்கள். இப்படி போவது ஜந்மாந்தரத்திலோ வென்னில்; அன்று; தூஷித்த அந்த க்ஷணத்திலேயே சண்டாளராயொழிவர். ... ... .... (சங)

## ௪௪. பெண்ணுலாம் சடையினானும்.

பெண்ணுலாம் சடையினானும் பிரமனும் முன்னைக்காண்பான்
எண்ணிலா வூழியூழி தவஞ்செய்தார் வெள்கிநிற்ப
விண்ணுளார் வியப்பவந்து ஆனைக்கன் றருளையீந்த
கண்ணறாய்! உன்னையென்னோ களைகணாக் கருதுமாறே. (௪௪)

| | |
|---|---|
| பெண் உலாம் | கங்காநதி உலாவுகின்ற |
| சடையினானும் | சடையையுடையவனான சிவனும் |
| பிரமனும் | நான்முகக்கடவுளும் |
| உன்னை காண்பான் | உன்னைக் காண்பதற்காக |
| எண் இலா ஊழி ஊழி | எண்ணமுடியாத நெடுங்காலமாக |
| தவம் செய்தார் | தவம்புரிந்தவர்களாய் (அவ்வளவிலும் காணப் பெறாமையாலே) |
| வெள்கி நிற்ப | வெட்கமடைந்து கவிழ்தலையிட்டிருக்க |
| அன்று | அக்காலத்திலே |
| ஆனைக்கு | (முதலைவாயிலகப்பட்ட) ஸ்ரீ கஜேந்த்ராழ்வானுக்காக |
| வந்து | (மடுவின் கரையில்) எழுந்தருளி |
| விண் உளார் வியப்ப அருளை ஈந்த | நித்யஸூரிகளும் ஆச்சரியப்படும்படி பரமக்ருபையைச் செய்தருளிய |
| கண்ணறாய் | (என்னிடத்து அருள்செய்யாமையாலே) தயவில்லாதவனே! |
| உன்னை | உன்னை |
| களைகணா | தஞ்சமாக |
| கருதும் ஆறு என்னோ | நினைக்கலாகுமோ? |

கீழ்ப்பாட்டுக்களில் கூறிய வைபவம் நன்கு ஸம்பவிக்கக் கூடியதுதான் என்பதை ஸ்தாபிப்பதற்காக ஸ்ரீகஜேந்த்ராழ்வானுடைய சரிதத்தை அநுஸந்தித்துக் காட்டுகின்றார்; சிவன் பிரமன் முதலாயினோர் தாங்கள் எம்பெருமானை ஸாக்ஷாத்கரிக்கவேணுமென்று நெடுங்காலம் தவம்புரிந்தும் அவர்கட்கு அப்பேறு கிடையாமையாலே வெள்கிநிற்கும்படியாயிற்று; கஜேந்த்ராழ்வான் மநுஷ்யஜாதியுமல்ல; மிகவும் நீசமான திர்யக்ஜாதி. அப்படியிருந்தும் எம்பெருமானுடைய விஷயீகாரத்திற்கு எளிதில் பாத்திரமாய்விட்டது. ஆகையாலே ஜாதியின் சிறப்பு உபயோகமற்றது என்கிற அர்த்தம் இப்பாட்டில் அர்த்தாத் ஸூசிதம்.

பெண்ணுலாஞ்சடையினானும்—என்றது-பெரிய கங்காநதியை ஒருசடைக்குள்ளே அடக்கினேனென்னும் பெருமையைக்கொண்டு ஸர்வேச்வரனைக் காணலாகுமோ? என்ற கருத்துத்தோற்ற. பிரமனும் என்றது - அந்த ருத்ரனுக்கும் தகப்பனாய், கீழுள்ளவர்கட்கு உபாத்தியாயனாயிருக்கும மாத்திரத்தால் எம்பெருமானை அறியப்போமோ? என்ற கருத்துத்தோற்ற.

வெள்கிநிற்ப—தங்களுடைய ச்ரமம் வீணாய் ஒழிந்தமையை நினைத்து வெட்கப்பட்டுத் தலைகுனிந்து தரையைக்கீறி நிற்கையில் என்கை. அன்றியே, வெள்கிநிற்ப - வெட்கப்பட்டு நிற்கும்படியாக என்றுமுரைக்கலாம். ஒரு தபஸ்ஸாம்

செய்யாத ஒரு யானைக்கு அருளையீந்தது பிரமனுக்கும் சிவனுக்கும் லஜ்ஜாஹேதுவாக ஆயிற்றன்றோ.

அவர்களுக்கு வெட்கமாவது—ஐயோ! முதலையின் வாயிலே அகப்படாமல் தபஸ்ஸிலே இழிந்து என்ன காரியஞ்செய்தோம்! என்று படும் லஜ்ஜை. அப்படி அவர்கள் லஜ்ஜைப்படும்படியாகவும் விண்ணுளார் ஆச்சரியப்படும்படியாகவும் வந்து என்க. வியப்ப—ப்ரஹ்மாதிகள் நெடுங்காலமாக எதிர்பார்த்திருக்க அவர்களையும் எங்களையும் அநாதரித்து ஒரு திர்யக்ஜந்துவின் கூக்குரலுக்கு அரைகுலையத் தலைகுலைய ஓடிப்போய்விட்டதே! என்று நித்யஸூரிகள் வியப்ப.

கண்ணறாவுன்னை என்றும், கண்ணுறாவுன்னையென்றும் இரண்டு படியாகப் பாடம் வழங்குகின்றது. கண் என்றால் தயவு அது அறா - நித்யமாயிருக்கப்பெற்ற உன்னை என்பது முந்தின பாடத்திற்குப் பொருள். 'தயவில்லாத உன்னை' என்பது பிந்தின பாடத்திற்குப் பொருள். "அவன் உபகரித்த தசையிலே கண்ணுறாவென்கிறது - ப்ரீதி தலைமண்டையிட்டுச் சொல்லுகிற வார்த்தை" என்பர் பெரியவாச்சான்பிள்ளை. ஆகையால் முந்தின பாடம் வியாக்கியானத்திற்குச் சேராது. இனி, பிந்தின பாடமும் அவ்வரஸம். 'ஆனைக்கன்றருளையீந்த கண்ணுறா' என்று எங்கும் அத்யாபகர்கள் கண்ணுறாவென்பதை மூன்றாம் அடியோடு கூட்டி நிறுத்துவதால், கண்ணுறா என்கிறவிது ஸம்போதநமாயிருக்க வேணும். அன்றி, 'கண்ணுறா' என்பது உன்னை என்னும் விசேஷ்யத்திற்கு விசேஷணமாமாகில் "அருளையீந்த" என்று மூன்றாமடியை நிறுத்திவிட்டு "கண்ணுறாவுன்னையென்னோ" என்று நான்காமடி ஸேவிப்பதுதான் பொருந்தும். அப்படி எங்கும் ஸேவிக்கக் காணாமையாலே கண்ணுறா என்பது ஸம்போதநமாகத் தானிருக்கக்கூடும். வ்யாக்யாநத்தை நோக்குமிடத்து, இது ஸம்போதநமா? விசேஷணமா? என்பது நன்கு விளங்கவில்லை. ஸம்போதநமாகக் கொண்டால் கண்ணுறா என்று சொல்வடிவம் ஸித்திப்பது அருமை. ஆனபின்பு கண்ணறாய்! என்பது பிழையற்றபாடம். கண்ணறை என்ற சொல்லுக்குக் கருணையில்லாதவன் என்பது பொருள்; முழுச்சொல். அது விளியேற்கும்போது கண்ணறாய் என்றாகிறது. நங்கை-நங்காய்; மங்கை-மங்காய்; நாரை-நாராய்; கோதை-கோதாய் என்பனபோல. ஆதலால் கண்ணறாய்! என்றோதுவதே சிறக்கும். இப்பாடமே காலக்கிரமத்தில் கண்ணறா என்று பிழையாகச் சிதைந்ததென்க.

"[உன்னையென்னோ களைகணாக் கருதுமாறே.] ஆச்ரிதபக்ஷபாதியான உன்னை ஜகத்துக்குப் பொதுவான ரக்ஷகனென்று சொல்லுமவர்கள் மதிகேடரென்கிறார். 'தேவாநாம் தாநவாநாஞ்ச ஸாமாந்யமதிதைவதம்—தேவாநாம் தாநவாநாஞ்ச ஸாமாந்ய மதிதைவதம்' என்கிற பந்தம் கிடக்க, சிலர்க்காகச் சிலரை அழிக்கிற இவனை ஸர்வரக்ஷகனென்று நினைக்கலாமோ?" என்பது வ்யாக்யாநஸூக்தி. களைகண்-ரக்ஷகம். ... ... . (௪௨)

வளவேழுந் தவளமாட மதுரைமா நகரந்தன்னுள்
கவளமால் யானைகொன்ற கண்ணனை அரங்கமாலைத்
துளவத்தொண் டாயதொல்சீர்த் தொண்டரடிப் பொடிசொல்
இளையபுன் கவிதையேலு மெம்பிராற் கினியவாறே. (சரு)

| | |
|---|---|
| வளம் எழும் | அழகு விஞ்சியிருப்பதும் |
| தவளம் | வெண்ணிறமுடையதுமான |
| மாடம் | மாடங்களையுடைய |
| மா | பெருமைதங்கிய |
| மதுரை நகரம் தன்னுள் | வடமதுரையில், |
| கவளம் | கவளங் கொண்டிருப்பதும் |
| மால் | பெருத்ததுமான |
| யானை | (குவலயாபீட மென்னும் கம்ஸனுடைய) யானையை |
| கொன்ற | கொலைசெய்தருளின |
| கண்ணனை | ஸ்ரீக்ருஷ்ணனாகிய |
| அரங்கம் மாலை | கோயிலிலே (கண்வளரும்) எம்பெருமானைக்குறித்து |
| துளபத் தொண்டு ஆய | திருத்துழாய்க் கைங்கர்ய நிஷ்டரும் |
| தொல் சீர் | இயற்கையான சேஷத்வத்திலே நிலைநின்றவருமான |
| தொண்டரடிப் பொடி | தொண்டரடிப்பொடியாழ்வார் (அருளிச்செய்த) |
| சொல் | திருமாலையாகிய இத்திருமொழி |
| இளைய புன் கவிதை ஏலும் | மிகவும் குற்றங்குறைகளையுடைய கவித்வமாயிருந்த போதிலும் |
| எம் பிராற்கு | பெரியபெருமாளுக்கு |
| இனிய ஆறே | பரமபோக்யமாயிருந்தபடியென்! (என்று ஈடுபடுகிறார்.) |

விசேஷ உணவுகளையுண்டு மதம்பிடித்துக் கொழுத்திருந்த குவலயாபீடமென்னும் கம்ஸனது யானையை ஒழித்தருளினாற்போலே தம்முடைய ப்ராப்தி ப்ரதிபந்தகங்களையும் போக்கினபடியை அருளிச்செய்து பெரியபெருமாளுடைய ப்ரீதியே தமக்கு ப்ரயோஜனமென்று முடிக்கிறார்.

கவளம் என்று யானையுணவுக்குப் பெயர். “களவமால்யானை” என்றும் பாடமுண்டு. அப்போது கலப: என்னும் வடசொல் களவமெனத்திரிந்ததாம்; ஒரு பருவத்தில் பெருத்தயானை யென்றபடி. இளைய புன் என்பவை - சப்தத்தில் இளமையையும் கவித்வத்தில் குற்றத்தையும் கூறும். கவிதா என்னும் வடசொல் கவிதையெனத் திரிந்தது.

எம்பெருமானைக் குறித்து அடியேன் சொன்ன சொற்கள் குற்றம் குறைகள் நிரம்பியவையாயினும், எனது நெஞ்சில் உருக்கத்தையும் ஊற்றத்தையும் அறிந்திருக்கும் பெரியபெருமாளுக்கு இது ஆராவமுதமாயிருக்கு மென்கிறார்.

“இப் பிரபந்தம் கற்றார்க்குப் பலஞ்சொல்லா தொழிந்தது - இவ்வநுபவந் தானே அவர்களுக்குப் பலமாகையாலே” என்ற வ்யாக்யானஸூக்தி இங்கு அநுஸந்திக்கத்தக்கது.

[வளவேழுந்தவளமாடம்.] யானை கொன்ற வரலாறு:—வில்விழா [தநுர் யாகம்] என்கிற வியாஜம் வைத்துக் கம்ஸனால் வரவழைக்கப்பட்டு ஸ்ரீக்ருஷ்ண பலராமர்கள் கம்ஸனரண்மனையை நோக்கிச் செல்லுகையில் அவனது அரண்மனை வாசல்வழியில் தம்மைக் கொல்லும்படி அவனால் ஏவி நிறுத்தப்பட்ட குவலயாபீட மென்னும் மதயானை கோபித்துவர, அவ்யாதவவீரர் அதனை எதிர்த்து அதன் தந்தங்களிரண்டையும் சேற்றிலிருந்து கொடியை எடுப்பது போல எளிதிற் பறித்து அவற்றையே ஆயுதமாகக்கொண்டு அடித்து அவ்யானையை உயிர்தொலைத்துவிட்டு உள்ளே போயினர் என்பதாம். (௪௫)

## அடிவரவு

காவல் பச்சை வேதம் மொய்த்த பெண்டிர் மறம் புலை வெறுப்பு மற்றும் நாட்டினான் ஒரு நமனும் எறி உண்டு மெய் சூது விரும்பி இனிது குடா பாய் பணி பேசு கங்கை வெள்ளம் குளித்து போது குரங்கு உம்பரால் ஊர் மனம் தவமார்த்த மெய் புள்ளம் தாவி மழை தெளி மேம்பொருள் அடிமை இரு வான் பழுதில் அமரப் பெண் வளவெழும் கதிர்.

தொண்டரடிப்பொடியாழ்வார் திருவடிகளே சரணம்

பெருமாள் கோயில் பிரதிவாதி பயங்கரம்
அண்ணங்கராசாரியர் இயற்றிய
திவ்யப்ரபந்த திவ்யார்த்த தீபிகையில்
திருமாலை உரை
முற்றிற்று.



ஸ்ரீ:

# திருமாலை ஸங்கதி.

முதற்பாட்டில்—திருநாம ஸங்கீர்த்தநத்தாலே யமன் முதலானோர் தலையிலே காலை வைத்துக் கூத்தாடும்படியான பெருமை பெற்றேனென்றார்.

௨.—திருநாம ஸங்கீர்த்தநத்திலுள்ள இனிமையாலே பரமபதமும் வேண்டாவென்றார்.

௩.—அத்தோடு விரோதிக்கும் ஸம்ஸாரமும் வேண்டாவென்றார்.

௪.—கொடிய பாவிகளுக்கும் திருநாமஞ்சொல்ல அதிகாரமுண்டாயிருக்க இழப்பதே! என்று வயிறெரிந்தார்.

௫.—அல்பமாயும் அநித்யமாயுமுள்ள ப்ராக்ருதவிஷயங்களைப் பற்றுவார் சீலமில்லாச் சிறியோர் என்றார்.

௬.—போக்தாவின் நிலையில்லாமையைச் சொன்னார்.

௭.—முமுக்ஷுக்களாக ப்ரமித்திருக்கிற பாஹ்யமதஸ்தரைக் குறித்து ஆச்ரயிக்கத்தக்க தைவத்தை உபதேசித்தார்.

௮.—எம்பெருமானுடைய வைபவத்தைப் பொறாதவர்கள் கொல்லத்தக்கவர் என்றார்.

௯.—இசைந்தவர்களை நோக்கி "நீங்கள் ஸர்வஸுலபனான கண்ணபிரானைப் பணிமின்" என்றார்.

௧௦.—விபவாவதாரங்களுக்குப் பிற்பட்டவர்கட்கும் உதவும்படி திருவரங்கம் பெரிய கோயிலிலே வந்து கிடந்தானென்றார்.

௧௧.—திருவரங்கமென்னப் பெறாதவர்கள் கர்ப்ப நிர்ப்பாக்யர் என்றார்.

௧௨.—தாம்பெற்றதும் பிறர்படும் அனர்த்தத்தைப் பொறுக்கமாட்டேன் என்றார்.

௧௩.—எல்லாரும் திருநாமத்தை அநுஸந்தித்து உஜ்ஜீவிக்கக் கூடுமோ? என்று மநோரதித்தார்.

௧௪.—பகவத் விரோதிகளோடு இதுவரை தமக்கிருந்த ஸம்பந்தத்தால் வந்த விடாய்தீர, திருநாமத்தை வாயாரப்பேசினார்.

௧௫.—ஸம்பந்த உணர்ச்சியைப் பிறப்பித்தவாற்றை அருளிச்செய்தார்.

௧௬.—விஷயத்துக்குத் தகுதியாக பக்திபெருகினபடியைப்பேசினார்.

௧௭.—தமது கண்கள் களித்தபடியைப் பேசினார்.

௧௮.—கண்களிப்புப் புறவெள்ளமிட்டபடியைச் சொன்னார்.

௧௯.—உடலுருகினபடி சொன்னார்.

௨௦.—எம்பெருமானோடுள்ள உறவறிந்தவர்கட்கு அகலவொண்ணாது என்றார்.

௨௧.—மநஸ்ஸால் பரிச்சேதிக்க வொண்ணாதென்றார்.

௨௨.—பாசுரமிட்டுப் பேசவொண்ணாதென்றார்.

௨௩.—மறக்கமுடியாதென்றார்.

௨௪.—பிறந்த பக்தி, விஷயத்துக்குத் தகுதியாக இல்லாமையாலே அது க்ருத்ரிமமென்றார்.

௨௫.—சாஸ்த்ரீயமான பக்தி முதலியவை ஒன்றுமில்லையென்றார்.

௨௬.—ஸ்த்ரீ சூத்ராதிகளுக்குள்ள நன்மையுமில்லையென்றார்.

௨௭.—திர்யக் ஜந்துக்களுக்குள்ள நன்மையுமில்லையென்றார்.

௨௮.—கஜேந்த்ராழ்வான் தான் இடர்ப்பட்டபோது நினைத்த நினைவுமில்லையென்றார்.

௨௯.—விலக்ஷண தேசவாஸமில்லையென்றார்.

௩0.—இவை யில்லாமை மாத்திரமேயன்றியே பிறர்க்கு அனர்த்தத்தை விளைப்பவனுமா யிராநின்றே னென்றார்.

௩௧.—நீசவிஷயமான ஸ்த்ரீகளாலும் நிராகரிக்கப்பட்டேனென்றார்.

௩௨.=இப்படி ஒருவர்க்குமாகாதவன் திருமுன்பே வந்துநின்றது மூர்க்கத்தன மென்றார்.

௩௩.=வெட்கங்கெட்டவன் நானென்றார்.

௩௪.=இப்படிப்பட்ட நான் உன்னைவிட்டு உனக்கு அவத்யத்தை விளைப்பேனல் லேன் என்றார்.

௩௫.=நீர்மையாலே சேர்த்துக்கொண்டாயென்றார்.

௩௬.=விசேஷகடாக்ஷம் பண்ணவேணுமென்று கதறினார்.

௩௭.=அந்த விசேஷகடாக்ஷம் பெறாமல் அலைபாய்ந்தார்.

௩௮.=இப்படி என்னைப்போலே பதறுகின்ற தொண்டரை உகக்குமவன் நீ என்றார்.

௩௯.=அவர்கட்குப் பிறப்பின் தாழ்வால் ஒருகுறையுமில்லை யென்றார்.

௪0.=அவர்களுக்குப் பாதகிம்ஸை முதலிய கொடியகருமங்களின் பலன் அநுபவிக்க வேண்டா என்றார்.

௪௧.=அவர்கள் தங்களோடு ஸம்பந்தம் பெற்றவர்களையும் பரிசுத்தராக்குமவர் என்றார்.

௪௨.=அவர்கள் எம்பெருமானைப்போலே பூஜிக்கத்தக்கவர் என்றார்.

௪௩.=பிறப்பையும் நடத்தையையுங்கொண்டு அவர்களை இழிவாக நினைக்குமவர்கள் சண்டாளரென்றார்.

௪௪.=பிரமன் முதலியோர்க்கும் அரிதான பேற்றை ஒரு திர்யக்ஜந்துவுக்கு அருள் செய்தமையைக் கூறினார்.

௪௫.=இத்திவ்ய ப்ரபந்தத்தில் எம்பெருமானுக்குள்ள போக்யதையை வெளியிட்டார்.

தொண்டரடிப்பொடியாழ்வார் திருவடிகளே சரணம்.




## சாற்றுக்கவி.

" மன்னு மணவாள மாமுனிவன் மாண்புரைக்கு
மன்னபுக ழண்ணங்க ராசிரியன்—சொன்ன
திருமாலைப் பாமாலைச் சீருரையைச் சிந்தித்
துருகாதா ரெவ்வுலகி லுண்டு? "

ஆக, நாற்பது கதைகள் இத்திவ்ய ப்ரபந்தத்தில் அநுஸந்திக்கப்பட்டவை. இக்கதைகளின் விவரணங்களை அவ்வப்பாசுரங்களின் உரையிலே விரியவுரைத்தோம்; கண்டுகொள்வது.

